8-2

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

# சசி வந்ந போதம்,
# பதார்த்த பாஸ்கரன் உரை.

அயம் ஆத்மா பிரஹ்மம்.

பிரஞ் ஞாநம் பிரஹ்மம்.



தத் த்வ மஸி

அஹம் பிரஹ்மாஸ்மி.


**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,**

**வேதாந்த மடம், திருப் பூ வணம்.**


 1963. [விலை ரூபா இரண்டு

## திருப்பூவணம், வேதாந்த மடத்துப் பிரசுரங்கள் இடைக்கும் இடங்கள் :—

1. திருக்களர், கோ. ஆ. வீர. மடம், தஞ்சாவூர் ஜில்லா.

2 சிதம்பரம், மௌந சாமிகள் மடம்,
சபாநாயர் சந்நிதி வீதி, தென் ஆற்காடு ஜில்லா.

3. மதுராஸ், சூளை, 9 வீரசு மடம்,
பெரம்பூர் பாரகன் ரோட், வேப்பேரி போஸ்டு 7.

4. மதுராஸ், வியாசர் பாடி, கர. சிவ. மடம் 12.

5. மதுரை, பிரஹ்மாநந்த சாமிகள் மடம்.

6. மதுரை, வடக்குச் சித்திரை வீதி,
இ. மா. கோபால கிருஷ்ணக் கோன் புக் டிப்போ.

7. மதுரை, S. S. ராஜன், புத்தகக் கடை புது மண்டபம்.

8. திருச்சிராப் பள்ளி, மலை வாசல் பெரிய கடை வீதி,
ஸ்ரீ கோபால் புக் டிப்போ.

9. சேலம், T. P. ராம சாமி செட்டியார்,
கு. கை. புலி குத்தித் தெரு.

10. ஆத்தூர், வேணு கோபால சாமி மடம்,
நீ. ஷண்முகாநந்த ஐயா.

11. திரு வாரூர், விஜய புரம், ராம லிங்கம் புக் டிப்போ.

---




8-2

சிவ மயம்.

சிதம்பரத்திற்கு அடுத்த,
இறும் பூதூரில் சமாதியுற் றிலங்கும்,
# ஸ்ரீ தத்வ ராய சுவாமிகள் அவர்கள் இயற்றிய,
மோஹ வதைப் பரணியில் உள்ள,
# சசி வந்ந போத மூலமும்,

---

கோவி லூர் மடம், திருக் களர்,
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள்
மாணாக்கரும்,
உபய பாஷா வேதாந்த் ப்ரவர்த்தகாச்சாரியரும்,
பர சமய கோளரியாரும், மண்டலேசுவரரும்,
சத சாஸ்திர கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்),
திரிபாஷா பண்டிதமணி, (மும்மொழிப் புலமை ரத்திநமு)ம்,
சதுர் வித சத்த சாகர (நால்வகை ஆற்றல் உடையவ)ரும்,
திருப் பூ வண மட ஸ்தாபகரும் ஆகிய,
## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் அவர்கள்
இயற்றிய,
# பதார்த்த பாஸ்கரன் என்னும்,
# உ ரை யு ம்.

---

இவை, இரண்டும்,
திருப் பூ வண மடத்தாரால்,
மதுரை, ஹரிஸமய திவாகரம் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டன.
1963-ஞு

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம. |
|---|---|---|---|
| 3 | 24 | யப்படாது | பயப்படாது |
| 14 | 1 | சோசத்தில் | கோசத்தில் |
| 25 | 27 | தண்மையும் | தன்மையும் |
| 32 | 16 | 2 | 1 |
| 40 | 10 | புடிவா | புகுவா |
| 45 | 24 | அறியு | அறிய |
| 50 | 20 | தள் | தன் |
| 57 | 21 | ஞாஙயா | ஞாங்யர் |
| 59 | 18 | எழுவ | எழுபவ |
| 65 | 4 | स्प | स्य |
| 68 | 24 | வேறு | வேரு |
| 98 | 22 | பொருளங | பொருளங் |

8-2

## திருப் பூ வணம், வேதாந்த மடம்,

# ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றியன.

---

## தமிழ் கவி உரை நூல் 18.

1. நாநா ஜீவ வாதக் கட்டளை — சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
2. கீதா சாரத் தாலாட்டு — லகு சந்திரிகை உரை.
3. மேற்படி நக்ஷத்திர விளக்க உரை.
4. மேற்படி குறிப் புரை.
5. சசி வர்ந போதம் — பதார்த்த பாஸ்கரன் உரை.
6. மகா ராஜத் துறவு — மநப் பிரசாதிநி உரை.
7. வைராக்ய (பக்தி) சதக பத உரை.
8. வைராக்கிய தீப பத உரை.
9. வேதாந்த சூடாமணி — சந்தோஷ தாயிநி உரை.
10. சீடாசாரம் — பால போதிநி உரை.
11. கணேச கவசம் பத உரை.
12. ஈசுவர கீதை உரை.
13. கைவல்ய நவநீத உரை — உதாரணக் கவி, ஆதித்தன் உரை.
14. பக்தி (வைராக்ய) சதக உரை - உதாரணக் கவி, பக்தி ரச உரை.
15. வைராக்கிய தீப உரை — உதாரணக் கவி, தீபச் சுடர் உரை.
16. பட்டிநத்தார் பாடல் உரை.
17. கைவல்ய நவநீதம், கிருத பாந உரை.
18. கைவல்ய நவநீத, ஆராய்ச்சி உரை.

---



## இயற்றிய நூல் 14.

1. மந்திர உபதேசம்.
2. தாந்திரீக த்வைத சைவ கண்டநம், குட்டுக் கோல்.
3. கட் டாரி.
4. புச்சம்.
5. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும், சக்தி விவேசநமும்.
6. சிவ சங்கராவதார சுலோக உரை (சோம சுந்தர மாலைக்கு) கண்டநம்.
7. ஸ்திரி புருஷ ஜநந மரண ரகஸ்யம்.
8. மகாத்ம சரிதாமிருதம்.
9. உண்மைக் கடவுள்,
10. சமாதி விதி.
11. சந்நியாச விதி,
12. தாயும், தநயனும். (வேதாந்தம்)
13, கோவி லூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம் வசநம்,
14. கட்கம் கொண்ட காளியைச் செயிக்கும் காமாரி.

---

# சசிவர்ண போத மதிப் புரை.

திரு, ஸ்ரீ - சண்முகானந்தன் - ஆசிரியன்.
தத்துவ சன்மார்க்க சங்கம் - ஆத்தூர்.

---

*நிலை மண்டில ஆசிரியப் பா.*

பூமலி கொன்றையும் புனிதநல் லறுகுந்
தேமலி மத்தமுந் தீந்தமிழ்க் கங்கையும்
வான்மதி யரவொடு மாண்கூ விளையுங்
கான்வதி யெருக்கொடு கவின்றரு மொளியுங்
கரந்தைகொக் கிறகுங் கழிவெண் டலையும்
நிரந்திடு பொற்சடை நின்மலக் கொழுந்தின்
நற்றாட் கடியவ னந்தியெம் பெருமான்
உற்றா னவனரு ளுயர்சனற் குமாரன்
அவனருள் பெற்றோ னருளமர் வியாதன்
இவனரு ளுற்றோ னிதமருள் சூதன்
சூதனல் லடியினைத் தொழும்ப னற்கடவுள்
நாதனங் கவனரு ணண்ணியான் றெருமூலூர்ச்
சித்தனிங் கிவனருள் சேர்ந்தவ னருள்முனி
பத்தியி னிவனருள் பதிந்தவன் கீழூர்
முனியவ னடிசிர முடித்தவன் பரமுனி
தனியிவ னடிசிரந் தரித்தவன் றிருப்பனந்
தாளா னவன்றன் தனித்தமா ணுக்கன்
மீளா நெறியருள் வியன்மா தவத்து
மதுரைப் புஞ்சை மாமுனி யிவன்றன்

சதுரப் பாடுடைத் தனிமா ணுக்கன்
வடமுநி யிவன்தன் வழிமா ணுக்கன்
உடையோ னலமுல குய்யவந் தவனுந்
திருநட ராசன் றிகழிவன் மைந்தன்
குருவென விவன்றனைக் கொண்டநற் குருபரன்
மறப்பறு தவந்திகழ் வளந்திகழ் யோகச்
சிறப்புறு ஞானச் சிவப்பிர காசன்
சிவப்பிர காசன் சீரடித் தொண்டாற்
பவப்பிர காசம் பாற்றிய சீடன்
சொரூபா நந்தத் தோன்றலா மிவன்றன்
சொரூபா நந்தத் துணையடி பூண்டோன்
சத்துவ ஞானச் சாந்தசற் குருவாந்
தத்துவ ராயத் தனிப்பெருஞ் செம்மல்
குவலயம் போற்றுங் குருவழி பாட்டாற்
பவலயஞ் செய்தோன் பண்டிதன் மேலாம்
ஒழிவறு கலைபல வுணர்ந்தநல் லறவோன்
மொழிபல கற்றறி முதுபெரும் புலவன்
அங்கணன் பிரம னருளிய கீதையை
மங்கலில் தமிழால் வகுத்தநங் குரவன்
அடங்கன் முறையினை யருளிறை யவர்க்குத்
தொடங்கிய பாடு துறையொடு சொற்றோன்
தகையுறு பொனம்பலச் சற்குரு பரனால்
வகையுற நற்றனி வகுத்திடப் பெற்றோன்
சுதையெனு முறையிற் சொற்றநன் மோக
வதையெனும் பரணி வண்டமி ழதனுள்
வகுத்திடு நற்சசி வந்நபோ தத்தின்
மிகுத்திடு பொருளுரை விளக்கினர் புலவோர்
அவ்வுரை யனைத்தினு மகலமுந் தெளிவுஞ்

செவ்வுரை யாகத் தெரித்தனன் மன்னோ !
பாரகா ரியம்பல பண்புற வாற்றுநம்
வீரமா முனிகழல் வீழ்ந்தநற் றலையினன்
கற்கத் தகுவன கசடறக் கற்றபின்
நிற்கத் தகுவது நிகழ்த்திய வாறென
வள்ளுவர் வகுத்த வளமுறு கவியின்
தெள்ளிய விலக்கியத் திறனமர் வுற்றேன்
மாயாக் கலைநூல் வளமுற வேண்டி
ஓயா துழைக்கு முரமிகப் பெற்றேன்
கருப்பூ வணத்துக் கண்ணனுக் கெட்டாத்
திருப்பூ வணத்துச் சிவனருள் பெற்றேன்
மாசிவா நந்த வான்பொருள் பெற்ற
காசிகா நந்தக் கவின்பெய ரோனே.

---

## சசி வர்ண போத உரை மாட்சி.

### கோவிலூர் மடம், அத்வைதாந்த சாமிகள் இயற்றியது.

---

திருமகள் மருவும் திருப்பூ வணத்தில்
தருகர்ப் பகமெனத் தங்கிய மடத்தில்
விருப்பையும் வெறுப்பையும் வென்றநல் முனிவன்
தருக்குளம் அகற்றிய சாந்த சீலன்
திருக்குத் திருசியம் தெளிய உரைப்போன்
வருவார் உளங்கொள வார்த்தை உரைப்போன்
ஒன்றே பொருளென் றுண்மை உரைத்து
மன்ற மதனில் மாற்றார் உளங்கொள
குன்றே றனைய குருசிகா மணியென
தன்னைத் தந்திடும் தவமிகு தன்மையோன்

சீவர்கள் உய்யச் சிவநிலை உணர்த்தும்
பவமதை அறுக்கும் பன்னூல் உதவினோன்
மாசிலா மணியென மலர்ந்திடு முகத்தான்
காசிகா நந்தன் எனும்பெயர் உற்றோன்
தத்துவ ராயன் தந்தநூ லவற்றின்
மத்திம மதியோன் மயக்கற அறிய
சசிவர்ண போதம் தந்தனன் அதற்கு
உசிதமா யுயருரை இயற்றித் தந்தனன்
இந்நூல் விருப்புடன் இயல்பினில் கற்போர்
தந்நிலை தலைவன் றெருள்நிலை அறிந்து
பாசம் அகன்று பரம்பொருள் ஆகி
மாசறு நிலையை மன்னிடு வாரே.

---

# நூன் முகம்.

---

சசி வர்ண போதம் என்பது, வட மொழி தென் மொழிக் கடல்களின் நிலைகண் டுணர்ந்தவரும், தமிழ்ப் பெரும் பாவலரும், குரு பக்த சிரோன்மணியும், பிரம நிஷ்டரு மாகிய, ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகளாற் செய்யப் பெற்ற நூல்கள் பலவற்று ளொன்றாகிய மோகவதைப் பரணி யென்னு மொரு நூ லகத் தடங்கிய நூ லாகும்.

இது, சசி வர்ணனது போதத்தை, அதாவது, அவன் றந்தையின் முயற்சியினாலே ஒரு தத்துவ ஞான நிஷ்டராகிய குருபரரை யணுகி, யவரது திருக் கடைக்கண் பார்வை யினால், தா னியற்றிய கொடிய செயல்களா லுண்டாகிய பெரும் பாபங்களும், அவற்றா லுள வாகிய கொடிய நோய்

களும், நீங்கப் பெற்று, அக் குருபரர் பணிக் குரிய ருகி, அப் பணியினுலே வீடு பேற்றிற் குரிய ஞாந சாதநம் பெறுதற் குரிய சாதந நான்கையும் பெற்று, அத் தத்துவ ஞாநத்தைப் பெற்ற வரலாற்றை யுணர்த்தும் வாயி லாகத் துன்பமி லின் புரு வாகிய வீடுபேற்றைப் பெற்றதன் பே ருகப் பெற்றதை விளக்குவ தாகும்.

இந் நூல் வட மொழியிற் பல் லாண்டாகப் பல நூல் களைப் பயின்று தெள்ளிதி னுணரத் தக்க தத்துவ மணி யென்னும் பெருந் தொடர்ப் பொருளைச் சின் ளுளி லுள்ளங் கையி னெல்லிப் பழம் போல, ஏவருந் தெள்ளத் தெளிய விளக்குஞ் சிறிய பெரிய நூ லாகு மென்பதி லையமில்லை.

இங்கே, சிறிய பெரிய நூல் என என எழுதும் போது, "**பட்டர் வைபவம்**" என்னும் வைணவப் பெரியார் வர லாற் றுரைப் புத்தகத்தில், கூரத் தாழ்வார் என்பவர், "**திரு வாய் மொழிப்**" பாசுரங்களை யநுசந்திக்கின்ற காலத்தி லவ ரரு கிருந்து கேட்டுக் கொண்டிருந்த அவர் புதல்வ ராகிய பட்ட ரென்பவர்,

*"உறுமோ பாவி யேனுக்கிவ் வுலக மூன்று முடனிறையச்*
*சிறுமா மேனி நிமிர்த்தவென் செந்தா மரைக்கட் டிருக்குறளன்*
*நறுமா விரைநான் மலரடிக்கீழ்ப் புகுத லன்றி யவனடியார்*
*சிறுமா மனிச ராயென்னை யாண்டார் திரியவே."*

என்னும் பாசுரத்தில், **சிறுமாமனிசர்** என்னு மொரு தொடர் கேட்கப் படுகிறதே, ஒன்றுக் கொன்று எதிரான சிறுமை பெருமைக ளிரண்டு மொரு சேர ஒரு பொருளிடத் திருப் பன வாக அருளியது எவ் வாறு பொருந்தும் என்று கேட்க அதற் கவர் சிறிது யோசித்துப் பிள்ளாய்! உனக் குபநயந மாகாமையால், வேத சாஸ்திரங்களைக் கொண்டு விடை

கூறல் பொருந்தாது. ஆயினும், 'கண்கூடாகக் காட்டுகின்றேம் காண்', எனக் கூறிச், சில பெரியோர்களைக் காட்டித், திரு மேனி சிறுத்து ஞானம் பெருத்திருக்கின்ற "சிறிய வாச்சான் பிள்ளை, அருளாளப் பெருமான்" என்பவர் போல்வாரைச் 'சிறுமாமனிசர்' என்னத் தட்டில்லையே. முதலியாண்டான் எம்பார் முதலிய பெரியோர்கள், உலகத்தாரோடொக்க, அந்ந பானாதிகள் கொள்ளினும், எம்பெருமான் பக்கத்தி லீடுபடுவதில், பரம பதத்தி லுள்ள நித்திய சூரிகளைப் போலுதலால், இப்படிப்பட்டவர் சிறுமாமனிசர் என்னத் தக்கவ ரன்றே" என்னும் பகுதி நினைவிற்கு வருகின்றது. அளவினுலே இந் நூல் சிறிய தாயினும் கூறும் பொருளான் மிகப் பெரிய தாகும் எனச் சான்றேர் கருதுகின்றனர். ஆதலாற், சிறிய பெரிய நூ லெனல் சாலுமென்க.

இனி, இந் நூல் 'ஒருவன் தத்துவ ஞானத்தை யடைந்தான்' என்பதை யுணர்த்தும் வாயி லாக, ஞானிகளைத் தவிர, ஏவ ராக இருந்தாலும், அவர் பாப புண்ணிய வினைகளைச் செய்தால், அவைகளி னின் றுண்டாகும். அதிருட்டங்களாகிய அற மறங்கள் (பாப புண்ணியங்கள்) அவைகட்கு நன்மை தீமைக ளாகிய பயன்களைப் பயந்தே விடு மென்பதையும், அப் பாப புண்ணிய வினைகளை மிகுதி யாகச் செய்தா லவை யிம்மையிலேயே அப் பயன்களைப் பயப்பிக்கு மென்பதையும், ஒருவன் பாப புண்ணிய வினைகளைச் செய்தால், அவை யவனுக்கு நன்மை தீமைகளைப் பயப்பித்தலே யன்றி, அவன் குலத்திலே தோன்றியவர்களுக்கும், நன்மை தீமைகளைப் பயப்பிக்கு மென்பதையும், "சான்றேனுக்குதல் தந்தைக்குக் கடனே" [புற நா னூறு) என்றபடி தந்தை யாக வுள்ளவன், தன் மகனை, நூ லறிவும், மெய்

யறிவும், பெறச் செய்யவேண்டு மென்பதையும், மெய் யறிவு பெறச் செய்பவன் ருன் நல்ல பிதா எனப்படுவா னென் பதையும், "மூர்த்தி தலந் தீர்த்த முறையாத் தொடங் கினர்க் கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும்" (தாயுமானுர்) என்றபடி, மூர்த்தி தல தீர்த்த சேவை செய் தால், "தத்துவமஸி" என்னு மொரு தொடர் மொழிப் பொருளை நன்கு விளக்கித் தாபத் திரயங்களைப் போக்கி யாறி, இருந்தபடியே இருக்கச் செய்யும் சற்குரு வாய்ப்பா ரென்பதையும், குருபரர் தத்துவ ஞாநநிஷ்டராக இருந்தால், அவர் தம் மெய்ச் சுவா நுபூதியோடு கூடிய திரு விழி பட்ட மட்டில் பார்க்கப்பட்டவர்களின் தீவினைகளும், அவற்றின் பயன்க ளாகிய நோய்களும், போ யொழியு மென்பதையும், தத்துவ ஞாநிகளுக்குப் பணி செய்தால், அப் பணியின் பய னுகச் செய்தவர்கட்கு ஞாந சாதநங்களாகிய நான்கு சாதநங் களும் உண்டாகு மென்பதையும், சாதந சதுட்டயங்கள் கைவரப் பெற்றவன் பிறவிக் கஞ்சுவா னென்பதையும், அப்படி யஞ்சுபவன் குருபரரை யடுத்துப் பிறவியைக் கடப் பது எப்படி யென அவரிடங் கேட்பா னென்பதையும், அவன் கேட்கவும், குருபரர், பிறவி துன்ப மென இவனுக்கு நன் ருகத் தோன்ற வேண்டு மென்னுங் கருத்தால், பிறவி யானது எல்லையின்றி விரிந்து கிடத்தலால், பெருங் கடல் எனக் கூறப்படும். உலகக் கடலிற் போலப் பிறவிக் கடலி லும் நீர் அலை விடக் கிருமிகள் முதலைகள் சுளிகள் பாம்புகள் முதலியன இருக்கின்றன. இவ் வுலகக் கடல், மரக் கல முதலியவற்ருற் கடக்கத் தக்கதாக இருக்கிறது. பிறவிக் கடலோ, எவராலும் எவற்ருலுங் கடக்க முடியாத தாகும். எனக் கூறி, யச்சுறுத்தவ ரென்பதையும், அவ்வா றவர் அச்சுறுத்தவும், அவ் வச்சத்தால் நினைத்த செயல் முடியாது

போ லிருக்கிறதே யென்னு மெண்ண முண்டாகி, அவனுக் குயிர் உடலை விட்டு நீங்கு நிலைமை யுண்டாகும். அப்போ தவர், "அறி வாகிய வங்கத்தி லேறுபவர் பிறவிக் கடலைக் கடப்பார்கள்" என, அவனுக்கு மகிழ்ச்சி யூட்டு மொழியை மொழிவா ரென்பதையும், அம் மொழியைக் கேட்ட அவன், பிறவிக் கடலைக் கடக்க வேண்டு மென்று தீவிர எண்ணங் கொண் டதற் கேற்ப, ஒ ருபாய முள்ள தென வறியப்பட் டமையால், குருபரரை வாழ்த்தி அவ் வுணர் விஃதாகு மென வுரைத் தருள்வீ ராக வெனக் கேட்பா னென்பதையும், அவன் கேட்பவும், குருபரர், அறிவு, பர அறிவு, அபர அறிவு என இரு வகைப்படும் வேத முதலிய நூ லறிவு அபர அறி வாகும் சித்த விசிராந்தியை யளிக்க வல்லதாய், உள்ளம் வெளி நாட்ட மின்றி யிருந்தாற் ற னுக விளங்கு வதும், எல்லா நூல்களுக்கும் பிரா ண னுக விளங்குவதும், ஒன்றாய் மா சொன்று மின்றிப் பெரிதிற் கெல்லாம் பெரி தாகி விளங்குவதும், ஐம் பொறி யடக்கத்தான் மட்டு மறியப்படாததும், அவஸ்தாத் திரய சாக்ஷி யாக வுள்ளது மாகிய தன்னைப் பிரமாபின்ந மாகவும், தன்னிடத் தத்தியஸ் தங்க ளாக வுள்ள தேகாதி பிரபஞ்சங்க ளனைத்துந் தனக் கந்நிய மில்லாமலு, மேக மாக அறிகின்ற அறிவே பர அறி வாகும். அதுவே, பிறவிக் கடலைக் கடப்பதற் குரிய சிறந்த வங்க மாகும் ஆண்டா னடிமை யாக அறிகின்ற அறிவு பர வறி வாகாது, உபாதியா லாண்டான் அடிமையே யன்றி, யுண்மையில் ஒரு பொருளே என அறியு மறிவே பர அறி வாகும். நூ லறிவோடு நிற்பவர்கள், தேகாந்ம வாதிக ளாவார்கள். எனக் கூறி யருள்வா ரென்பதையும், அவ ருரைத்தவற்றைக் கேட்ட மாணவன், "தான்" எனப்படு வது இத் தேகந் தானே. இவர் ஏதோ, 'தான்' என்பது

இத் தேகத்திற்கு வேருக இருப்பது போலக் கூறுகிருர். இத் தேகத்தைத் தா னெனக் கருதலா, லெல்லா வநர்த்தங்களு முண்டாகின்றன. ஆதலால், 'தான்' என்ப திது வென நன்ருகத் தெளிவோ மென எண்ணிக் குருபரரை நோக்கிச் சுவாமிந்! 'தான்' எனப் படுவது, இவ் வுடம்பு தானே, இதற்கு வேருக ஒரு பொரு ளுண்டோ எனக் கேட்பா னென்பதையும், அதற் கவர், இத் தூல வுடம்பும், இதனிடத் தே யுள்ள பொறிகள் முதலிய சூக்கும (நுண் ணுடம்பு) வுடம்பும், இவற்றிற்கு முன்னிலை யாகிய (காரண மாகிய) அவிச்சையும் உன்ஞ லறியப்படும் பொருள்க ளாக இருத்த லால், 'நீ யாக மாட்டாய்' எனப் பல படி யாக எடுத்து விளக்கி, அவற்றை யெல்லா மறிகின்ற அறிவே, நீ யாகும். அவ் வறிவும், தக்துவ ஞாந மாகிய விழி யொன்றி ஞலேயே விளங்குவ தாகும். வே றெவற்ருலும் விளக்க மாகாது. எனக் குருபரர் கூறும் பொழுது, இவ் வாறு 'வேதங் கூறு கின்றது' என்று இவர் கூறுதலால், வேதத்தில் பல பொரு ளுங் கூறுவன வாகச் சான்ருேர் கூறக் கேட்டிருக்கின் றனமே, இது தான் நீ என இவர் கூறும் பொரு டான் வேதத்திற் கூறப்படுஞ் சிறப்புடைய பொரு ளென்ருல், மற்றவைகள் சிறப்புடையன அல்லவோ என, மாணவன் உள்ளத்தி லெண்ணு மெண்ணம் முகத்தில் விளக்க மாகத் தோன்றுதலால், இதுவே வேதத்திற் சிறப் பாகக் கூறப் படும் பொரு ளாகும். மற்றைய கன்மங்களும், உபாசனை களும், மநத் தூய்மையையும். மந வொருமையையும், உள வாக்குதலால், அப் பொருளை யறிதற் குரிய, ஞாந சாதந மாகக் கூறப்படுகின்றன வன்றி வே றில்லை. அம் மெய்ப் பொருள் மறை முடிவதனில் விளங்கு மொளி மணி யாய்ச் சசாதி முதலிய வேற்றுமை யின்றிப் புநித மாகத் தானே

தா ளுக விளங்கு மறிவாய்த், 'தத்துவமஸி' என்னும் பெருந் தொடர் மொழியா லுபதேசிக்கப் படுவ தாகு மெனத் தமது சித்தாந்த மாகவு மெடுத் துரைத்து, 'தத்துவமஸி' என்னும் தொடரில், 'தத்' என்பது, ஈசுரனை யுணர்த்துகின்ற சொல் லாகும். 'துவம்' என்பது சீவனை யுணர்த்துகின்ற சொல் லாகும் 'அஸி' என்பது இரு பொருளும் ஒரு பொருளே என, அவற்றின் ஒருமையை யுணர்த்துகின்ற சொல் லாகும். எனவும், இருவரும் ஒரு பொருளே என்ருல், பரோக்ஷ மாக வுள்ள ஈசுரனும், அபரோக்ஷ மாக வுள்ள சீவனும், எவ் வாறு ஒரு பொரு ளாவர், அவர்கட்கு எவ் வாறு ஒற்றுமை சம்பவிக்கும் என்று, கேள்வி யெழ லாம். அவர்கள், உபாதிகளினுல் பரோக்ஷ, அபரோக்ஷ ராக வேறு படக் காணப்படுகின்றனரே யன்றி, உண்மையில் ஒரு பொரு ளாகவே யுள்ளமையால், அப் பதங்கள், உபாதி நோக்கி லன்றிச், சொருப நோக்கில், ஒற்றுமை கூற வந்தன வே யாகும். உபாதி யோடு கூடிய நிலேயில், ஒற்றுமை கூற வந்தன இல்லே. எனவும், சொற்கள் தம் பொருளில், ஒரு பகுதியை விட்டு, ஒரு பகுதியை மட்டு முணர்த்தலு முண் டோ எனில், சக்தி விருத்தியிஞ லவ் வா றுணர்த்த மாட்டா, இலக்கணு விருத்தியிஞ லவ் வா றுணர்த்து மென்க என வும், சொற்கள் பொருள்களே யுணர்த்தும் போது, எந்தச் சொல், எந்தப் பொருளே யுணர்த்த வல்லதாகுமோ, அந்தப் பொருளே யுணர்த்தும். எந்த வன்மை (ஆற்றல்) அந்தச் சொல்லில் இருக்கிறதோ, அந்த வன்மையே, சக்தி எனப் படும் அதுவே, அபிதை முக்கியம் எனவும், சொல்லப் படும். அவ் வண்மை வாயிலாகச் சொல்லும், பொருளும், ஒரு தொடர் புடையன வாக இணேக்கப்படுதலால், அவ் வண்மையே சம்பந்த மெனப்படும். சம்பந்தமே விருத்தி

யெனப்படும். சக்தி விருத்தி யென்றால் சக்தி யாகிய சம்பந்தம் எனப்படும் எனவும், சக்தி விருத்தியினால் அறியப்படும் பொருளை சக்கியம் எனப்படும். அதுவே, அபிதேயம், முக்கியப் பொருள் எனவுங் கூறப்படும் எனவும், ஒரு சொல் தனக்குரிய பொருளை யன்றித், தன்னா லுணர்த்தப்படும் சக்கியப் பொருளுக்குச் சம்பந்த மான பொருளை, அச் சம்பந்த வாயிலாக வுணர்த்தலு முண்டு. அச் சம்பந்தமே இலக்கணா விருத்தி எனப்படும். அவ் விலக்கணா விருத்தியினா லுணர்த்தப்படும் பொருள், இலக்கிய மெனப்படும். இலக்கணா விருத்தி யென்பது சக்திக்கு (ஆற்றலுக்கு) வே றான சையோக முதலிய சம்பந்த மெனப்படும். (அவைகளே சக்கிய சம்பந்த மான இலக்கணா விருத்தி யெனப்படும்.) எனவும், இலக்கணா விருந்தியினால் பொருளைக் கொள்ளுவது (இலக்கியப் பொருளைக் கொள்ளுவது) சொல்லுவோனது தாற்பரியம் பொருந்தாத இடத்திலே தானாகும். கொண்டு கூட்டுப் பொருந்தாத விடத்திலே தான் இலக்கணா விருத்தியினால், இலக்கியப் பொருளை யுணர நேர்கின்றதென்னில், சில இடங்களில், அது பொருந்து மாயினும், 'குடத்தை யுள்ளே விடுக' என்பது முதலிய இடங்களில் கொண்டு கூட்டு இருந்தும், இலக்கணையால், அப் பொருளைக் கொள்ள வேண்டிய திருத்தலால், கொண்டு கூட் டின்மையாற் றான் இலக்கணையால் இலக்கியப் பொருளைக் கொள்ளுதல் நேர்கின்ற தெனல் பொருந்தாமையால், சொல்லுவோனது தாற்பரியம் பொருந்தாமையால், இலக்கணா விருத்தியினால், இலக்கியப் பொருளைக் கொள்ளுத னேர்கின்றது எனல் சாலப் பொருந்தும் எனவும், இலக்கணா விருத்தியினால் இலக்கியப் பொருளைச் சொற்க ளுணர்த்தும் போது, சக்கிய மாகிய தன் பொருளை யறவே விடுத்து, அவற்றின் சம்பந்தி யான

பிற பொருளை யுணர்த்தல் ஒரு வகை. இதனை விட்ட லிலக் கணை யென்பர். சக்கியப் பொருளை விடாமல், அப் பொரு ளோடு சம்பந்தி யான பிற பொருளை யுணர்த்தல் ஒரு வகை. இதனை விடாத இலக்கணை யென்பர். சக்கியத்தி லொரு பகுதியை விட்டு, அதன் சம்பந்தி யாகிய ஒரு பகுதியை மட்டும் உணர்த்தல் ஒரு வகை, இதனை விட்டு விடாத இலக்கணை யென்பர். எனவும், விட்டு விடாத இலக்கணை யினு லுணர்த்தப்படும் பொருள், சக்கிய முழுது மாகாது. அத னேக தேசப் பொரு ளாக இருத்தலால், சக்தி விருத்தி யினு லன்றி, இலக்கணு விருத்தியினு லுணர்த்தப்படு மென் றலே,நனி பொருந்து மென்பர் எனவும், முன்னர்ப் பார்த்த பொருளையே வேறிடத்திற் பார்த்த போது, அவ னிவன்ருன் என ஒருவன் சொல்லின், அங்கே, விட்டு விடாத (பாகத் தியாக) இலக்கணை யிருக்கிற தெனவும், சென்ற காலத்தி லும், வேறிடத்திலு முள்ள பொருள் (மகன்) அவன் என் னுஞ் சொல்லின் வாச்சியார்த்தம் (சக்கியார்த்தம்) ஆகும். நிகழ் காலத்திலும் சமீப இடத்திலு முள்ள பொருள் (மகன்), இவன் எனப்படும். ஆதலா, லவற்ருேடு கூடிய அப் பொருள் (அம் மகன்) இவன் என்னும் சொல்லின் வாச்சி யார்த்த மாகும். (சக்கியார்த்த மாகும்.) இங்குச் சென்ற காலத்தோடும், வேறிடத்தோடுங் கூடிய அவனே, நிகழ் காலத்தோடுஞ் சமீப நிலத்தோடுங் கூடிய இவ னுகும் என் பதே, அவ னிவன் ருன் என்பதன் பொரு ளாகும். அவ்வா ருயின், கால தேசங்களுக்கு விரோத மிருத்தலால், இரு பதங் களு மொருவனை யுணர்த்து மென்பது பொருந்தாது. ஆத லால், இரு பதங்களும் விரோத பாக மான கால தேசங்களை விட்டு (கால தேச வாச்சிய பாகங்களை விட்டு)ச் சொல்லு வோ னது தாற்பரியத்தை யநுசரித்து, ஆசிரயத் தன்மைத்

தாதாந்மிய சம்பந்த மாகிய இலக்கணை விருத்தியினால் புருட பாகத்தை மட்டும் உணர்த்துகின்றன எனல் பொருந்தும். இங்கு விட்ட சக்கிய சம்பந்தம் ஆசிரிதத் தன்மைச் சம்பந் தம், விடாத சக்கிய சம்பந்தம், தாதாந்மிய சம்பந்தம். அவ் வாசிரயத் தன்மைத் தாதாந்மிய சம்பந்தமே சக்கிய சம்பந்த மாகும். அச் சக்கிய சம்பந்தம் அவ் விரு பதங்களா லுணர்த் தப்படும் புருடனிடத்தி லிருப்பதால், அச் சம்பந்த வாயிலாக அவன் இவன் என்னுஞ் சொற்கள் அவனை (ஒரு புருடனை) யுணர்த்துகின்றன வாகும். 'தான்' என்பது ஏகத்துவத்தை நன் ருக விளக்குவ தாகும்.

அது போலத், 'தத்துவமஸி' என்னும் வாக்கியத்தை நோக்கும் போது, அதில், 'தத்' என்பது, சர்வஞ்ஞத்துவாதி களோடு கூடிய பரோக்ஷ ஈசுரனை யுணர்த்துகின்ற வாசக மாகும். அவ் வீசுரன், அவ் வாச்சியார்த்த மாகும். 'துவம்' என்பது, அற்பஞ்ஞத்துவாதிகளுடன் கூடிய அபரோக்ஷ சீவனை யுணர்த்துகின்ற வாசக மாகும். அச் சீவன் அவ் வாச்சியார்த்த மாகும். அஸி என்பது இரு பொருளு மொன்றேயென அவற்றின் ஏகத்துவத்தை யுணர்த்துகின்ற வாசக மாகும். இவ் வாறு, கொள்ளும்போது, சர்வஞ்ஞத் துவாதிகளுடன் கூடிய பரோக்ஷ ஈசுரனும், அற்பஞ்ஞத் துவாதிகளுடன் கூடிய அபரோக்ஷ சீவனும், ஒரு பொருளே என்பதே, அத் தத்துவமஸி மகா வாக்கியத்தின் பொருளாக முடியும். அவ் வா ருயின், சர்வஞ்ஞத்துவாதிகளும், பரோ க்ஷத்தன்மயும், ஆகிய இவைகளுக்கும், அற்பஞ்ஞத்துவாதி களும், அபரோக்ஷத்தன்மையு மாகிய, இவைகளுக்கும், விரோத மிருத்தலால், அவ் விரு பதங்களு மொரு பொருளை யே யுணர்த்து மென்றல் பொருந்தாது. ஆதலால், அவ் விரு

பதங்களும், அவ் விரு உபாதிகளும், அபரோக்ஷ பரோக்ஷத் தன்மைகளு மாகிய விரோத பாகங்களை விட்டு, தாற்பரி யத்தை யநுசரித்து அதிட்டானத் தன்மைத் தாதாந்மிய சம் பந்த மாகிய இலக்கணு விருத்தியினுல், விரோத மின்றிய சேதந பாகத்தை மட்டு முணர்த்துகின்றன எனில், பொருந் தும் இங்கு விட்ட சக்கிய சம்பந்தம் அதிட்டானத் தன்மைச் சம்பந்தம்; விடாத சக்கிய சம்பந்தம் தாதாந்மிய சம்பந்தம். அவ் வதிட்டானத் தன்மைத் தாதாந்மிய சம்பந்தமே சக்கிய சம்பந்த மாகும். அச் சக்கிய சம்பந்தம், தத் துவம் பதங் களா லுணர்த்தப்படும், சேதந பாகத்தி லிருப்பதால், அச் சம்பந்த வாயி லாக அப் பதங்கள் அச் சேதந பாகத்தை மட்டு முணர்த்துகின்றன வாகும். 'அஸி' என்பது அச் சேதநத்தின் ஏகத்துவத்தை விளக்குவ தாகும். எனவும், இங்குக் கூறிய சம்பந்தம் நேர் சக்கிய சம்பந்த மாக இருப்ப தால், இலக்ஷித இலக்ஷணை இங்கே கொள்ள வேண்டிய தில்லை யெனவும், இம் மகா வாக்கியம், கேட்பவருக்குக் கூடஸ்த பிரமங்களின் ஏகத்துவத்தை யுணர்த்துக என்னு மீசுர சங்கல்ப மநாதி யாக இருத்தலால், இது நிரூட இலக் கணையே. பிரயோசநவதி இலக்கணை யன்று எனவும்,

சிலர், தத்துவமஸி என்னும் மகா வாக்கியத்தி லுள்ள தத் துவம் பதங்கள் அகண்ட சைதந்யத்தை இலக்கணு விருத்தியினு லுணர்த்துகின்றன எனல் வேண்டிய தில்லை. சக்தி விருத்தியினுலேயே யுணர்த்துகின்றன எனல் தகும். அது, குடம் என்னுஞ் சொல், நித்திய மாகிய குடத் தன்மைச் சாதி விசேடணத்துடன் கூடிய குட வியக்தியை (குட வடிவப் பொருளை) யுணர்த்துவதாக இருந்தாலும், குடம் அநித்தியம் என்ற போது, குடம் என்னு மச் சொல் குடத்

தன்மை யாகிய நித்திய சாதியை விட்டு (விசேடண பாகத்தை விட்டு) குட வடிவப் பொருளை மட்டும் சக்தி விருத்தியிஞலே யுணர்த்துவதாகின்றது: குட வடிவப் பொருளே அநித்திய பொரு ளாதலின். அப்படியே, "குடம் தோன்றிற்று, குட மழிந்தது" மென்னு மிடங்களிலும், தோன்றுதலு, மழிதலு, மில்லாத சாதியை விட்டு விட்டுக், குட வியக்தியை மட்டு மக் குடம் என்னுஞ் சொல் உணர்த்துகின்ற தாகின்றது. அப்படியே, தத் துவம் பதங்களும் தனித் தனி யாக சர்வஞ்ஞத்துவாதிகளுடன் கூடிய பரோக்ஷ ஈசுரனையும், அற்பஞ்ஞத்துவாதிகளுடன் கூடிய அபரோக்ஷ சீவனையும், உணர்த்தத் தகுந்த வாசகங்களாயினும், அகண்ட சைதந்யத்தின் ஏகத்துவத்தை யுணர்த்து நோக்குடன் ஒன்றனை யொன்று கொள்ளுவன வாகக் காணப்படுதலால், விசேடண பாகத்தை விட்டு விசேடிய பாகத்தைச் சக்தி விருத்தியிஞலேயே யுணர்த்துகின்றன வாகு மாதலால் என்க என்பர். 'குடம் அநித்தியம் குடம் தோன்றிற்று, குட மழிந்தது' என்னு மிடங்களிலு, மிலக்கணு விருத்தியிஞ லுணர்த்தப்படுவதையே வழக்கின் மிகுதிப்பாட்டால், சக்தி விருத்தியிஞல், உணர்த்தப்படுவதாகக் கொள்ளுத லன்றிப், பிறி தில்லை யாதலால், அது பற்றித் தத் துவம் பதங்கள் இலக்கணு விருத்தியிஞ லன்றிச் சக்தி விருத்தியிஞல், சேதந பாகத்தை யுணர்த்து மென்றல் பொருந்தாது, அவ் வாறு கொள்ளின், முன்னேர் கொள்கையுடன் முரணுதலு மாகும். ஆதலால், இலக்கணு விருத்தியிஞலே யுணர்த்துகின்றன என்றலே பொருந்தும் எனவும்,

இனி, சிலர், தத் துவ பதங்கள் வாச்சியார்த்த இலக்கியார்த்தங்களை யுணர்த்து மென்பது போல, 'அஸி' என்னும்

பதமும், வாச்சியார்த்த இலக்கியார்த்தங்களை யுணர்த்துகின் றது எனக் கற்பிக்கின்றனர். சுபந்த மான பெயரில் வாச்சி யார்த்த மிலக்கியார்த்தங் கொள்ளப்படு மன்றித், திஙந்த மான வினையில், வாச்சியார்த்த, இலக்கியார்த்த மிரண்டுங் கொள்ளப்படுவ தில்லை. தமிழிலும், பெயரே, இயற் பெயர் ஆகு பெய ரென வருவ தன்றி, வினை, இயல் வினை ஆகு வினை என வருவ தில்லை. ஆதலால் 'அஸி' என்னும் வினைச் சொல் தத் துவம் பதங்களோடு கூடியவற்றை முடிக்குஞ் சொல் லாக, 'அது நீ யாகிறாய்' என, "முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத்தானே" என்றபடி நிகழ் காலத்தி னின்று, அவ் விரு பதப் பொருளும் என்று மொன் றெனத் தெற் றென விளக்க வந்த தாகும். 'அஸி' என்பது ஏகத்துவத்தை யுணர்த்துவதாலே தான். தத் துவம் பதங்கள் இலக்கியார்த்தத்தில் நோக்குடையன என விளக்க மாகக் கோடல் நேர்கின்றது. ஆதலால், அவ் வஸி பதத்தி லவ்விரு பொருளையு முணர்த்துந் தன்மை யுண் டெனல் பொருந்தாது. 'அஸி' பதம் இலக்கணை விருத்தி யினால், இலக்கியப் பொருளை யுணர்த்து மென்னில் விட்ட இலக்கணை, விடாத இலக்கணைகளை யுடைய சொற்களை முடிக்கவரும் (மஞ்சாக் குரோசந்தி சோண திஷ்டதி) குரோ சந்தி, திஷ்டதி முதலிய வினைச் சொற்களும், இலக்கணை விருத்தியினால் இலக்கியார்த்தத்தை யுணர்த்துகின் றன எனக் கோடல் வேண்டும். அவ் வாறு கொள்வ தில்லை. அது போல, 'அஸி' என்பதும் இலக்கணை விருத்தியினால், இலக்கி யார்த்தத்தை யுணர்த்து மென்றல் சாலா தெனவும்,

சில சான்றோர், 'அஸி' பதத்திலும் வாச்சியார்த்த மிலக்கி யார்த்த முண் டென ஒப்பி யிருக்கின்றனரே யெனில், அவர்

தங் கருத் தாகக் கூறுமல், பிறர் கருத் தாகக் கொண்டு கூறி னர்: பொருத்த மில்லாமையா லென்க. எனவும்,

தத் துவம் பதங்க ளிரண்டு மொரு நிலைக்களத் திருப்ப தால், (ஒன்றனை யொன்று முடிக்குந் தன்மை யுடையன வாக இருத்தலால்) இலக்கணு விருத்தியினுல் ஒரு பொருளை யே யுணர்த்த வல்லன வாகுமே. 'அஸி' என்னும் பத மெற்றுக் கென்னில், இரண்டும் ஒன் றென்பது நன்று விளங்கத், தொன்று தொட்டு வரு முறைபற்றி வந்த தென்க. எனவும், கூறித் தத்துவமஸி மகா வாக்கியம் உபதேசிக்கு முறை யிது வாகு மென்று, ஆராய்ந்தும், வெளிப்படவு முணரும்படி யுரைத்தருளுவா ரென்பதையும்,

இனி வாச்சியார்த்தம் சக்கியார்த்தம் முக்கியார்த்தம் அபிதேயார்த்தம் என்னும் பெயர்களா லன்றி, அசுத்தார்த் தம் என்னும் பெயராலுங் கூறப்படலா மென்பதையும், இலக்கியார்த்த மென்பது சுத்தார்த்தம் என்னும் பெயரா லுங் கூறப்படலா மென்பதையும், அவஸ்தைகள் நனவு கனவு உறக்கம் துரியம் என நான்கா வுள்ளன என்பதை யும், துரியம், சீவ துரியம், ஈசுர துரியம் என, இரண்டு வகைப் படு மென்பதையும், நனவிற் சுழுத்தி நிலை கைகூடில், பிரத் திய கபிந்ந பிரமப் பொருள் தெற் றென விளங்கு மென்ப தையும், இது மிக வியாகூலச் சித்த முடையவரைக் குறித் துக் கூறியதே யாகும். வியாகூல மற்ற சித்த முடையவர்க் கப் பொருள் விசார மாத்திரத்தாற் றோன்று மவரைக் குறித் துக் கூறவில்லை யென்பதையும், பிரத்திய கபிந்ந பிரமப் பொருளைக் குருபர ரருளிருந்தா லெளிதி லுணரலா மென்ப தையும், அவ ரருளின்றேல் எவர்க்கு மெளிதி லறிய இயலா தென்பதையும், தெள்ளத் தெளிய விளக்குகின்ற தென்க.

இனி, நனவு கனவு சுழுத்தி யென்னு மூன்றவத்தையுங் கடந்த துரிய நிலையில் விளங்கும் பிரத்திய கபிந்ந பிரமத்தை யுணர வேட்கை கொள்ளுதல் முதலிய நி-லை க ளை யு ம், உணர்ந்த நிலையினையும், உணர்ந் துணர்ந் துள்ள மொடுங்கு நிலைகளையும், சான்றோர்கள், ஞான சப்த பூமிக ளெனப் பகுத் திருப்பது போலத், தத்துவ ராய சுவாமிகளும், உள்ளம் உலகத்தி லீடுபடுகின்ற தன்மைகளோடு கூடி வெளிப்பட்டு நிற்கு நிலையினையும், வெளிப்படாது அகத்தே நிலவுகின்ற நிலையினையும், இரண்டு மின்றி ஓய்ந்த நிலையினையும், நனவு கனவு சுழுத்தி யெனக் கோடலோடு, அவ் வுள்ளந்தா னோய்ந்த நிலையை யுணர்ந்த பொருள் தான் மெய்ப் பொருள் என கண்டு நிற்கு நிலையினைச் சீவ துரிய மெனவும், அதுவே சர்வ சாட்சி யாகிய பிரம மாகக் கண்ட நிலையினை. ஈசுர சாக்கிரம் (நனவு) எனவும், இவ் வாறே, உள்ள மானது பரம் பொருளை நுணுகி நுணுகி யநுபவிக்கு நிலைகளை யெல்லா மொன்ப தாகப் பகுத்து, மொத்தம் பன் னிரண் டவத்தைக ளுள வெனக் கொண்டுள்ளார்கள். இது, "தானுட்டித் தனுது நிறுப்பே" என்னுங் கொள்கை பற்றிய தாகும். அஞ்ஞவதைப் பரணியிலும் பன் னிரண் டவத் தை கூறுதல் காண்க.

இந் நூலுக்குக் கோயிலூர் மரபைச் சேர்ந்த திருப் பூவண வேதாந்த மடாலயத் தலைவரும், வட மொழி, தமிழ் மொழிகளில், மிக வல்லுநரும், இந்தி முதலிய பிற மொழிப் பயிற்சி யுடையவரும், தருக்கம் பூருவ மீமாஞ்சை உத்தர மீமாஞ்சைகளில், சாலப் பயிற்சி யுள்ளவரும், பரசமய கோளரியார் ஞானாச்சார்யர் என்பன முதலிய சிறப்புப் பெயர்கள் பூண்டவரும், நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை

மொழி பெயர்த்தும், உரை யியற்றியும், புதி தாக நூல்க ளியற்றியும், தமி ழுலகிற் களித்த பே ராற்றல் படைத்தவ ரும், கோயி லூர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளின் மாணவர் பலருட் டலைசிறந்தாரு ளொருவரும், ஆகிய காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமி யவர்கள் ஒ ருரை யியற்றி யிருக்கின்றார்கள். இவர்கட்கு முன்னர்ப் பல ருரை யியற்றி யிருப்பினும், எல்லாரும் படித் துணரும்படி எளிய முறை யில் சான்றோர் கருத்துக்கு மாறுபடாமல், சுவாமிக ளுரை யியற்றி யிருப்பது போற்றத் தகுந்த தொன்றாகும். மேலும், நூலுக் குரையிடுவதற்கு முன்னர் நூலிலே யுள்ள ஒவ் வொரு பாவின் பொருளும் நன்கு விளங்கு மாறு பிண்ட மாகக் கொளு வென்று சொல்லும்படி திரட்டி யுரைக்கப் பட்டிருக்கின்றன. இச் செயல் நூற் பொருளை யுணரப் புகு வார்க்குப் பெரும் பய னளிக்கு மென்பதி லைய மில்லை.

இவ் வடிகளா ரிறையருளா னன்னிலை பெற் றின்னும் பல வுரைகளையும், நூல்களையும் இயற்றி நம்மனோர்க் களிப் பார்களாக என அவ் விறைவனை வேண்டி வாழ்த்துவ நன்றே நன்றே வாழ்த்துவோ மாக.

இங்ஙனம்,

(கோயி லூர் மரபு) பண்டித. சித நாராயண சாமி,

அறு பத்து மூவர் மடம்,

திரு வை யாறு.

# உபோத்காதம்.

உலகத்தில் உள்ள மநிதர்களால் விரும்பப் படுவது, "என்றும் துன்பம் வேண்டாம்" "என்றும் இன்பம் வேண்டும்" என்பதுவே ஆகும். "துக்கம்" என்பதை, 'ஆத்யாத்மீகம், ஆதி தைவீகம், ஆதி பௌதீகம்' என்றும், 'சாதி (ஆதி) - அநாதி' என்றும், 'இக லோக - பரலோகம்' என்றும், 'அதிகிருதம் - அநதிகிருதம்' என்றும், 'காரிய கதம் - காரண கதம்' என்றும், பல வேறு பிரகார மாக நூல்கள் கூறுகின்றன. அதன் நிவிர்த்தியையும், "லய ரூபம், தாத்காலிகம், அத்தியந்தம்" எனப் பல வேறு பிரகார மாக நூல்கள் கூறுகின்றன. இன்பமும், 'நிரதிசயம் சாதிசயம்' என்றும், 'சவிசேஷம் நிர்விசேஷம்' என்றும், 'விஷயம்-பிரஹ்மம்' என்றும், 'க்ஷணிகம் நித்தியம்' என்றும், 'சோபாதிகம் - நிருபாதிகம்' என்றும், 'இக லோகம் - பர லோகம்' என்றும், 'ஜநநம் மரணம்' என்றும், 'ஆபாசம் - பிரதிபிம்பம்' என்றும், பல வேறு பிரகார மாக நூல்களால் பகரப்படுகின்றது.

இந்த அநர்த்த நிவிர்த்தி ஆநந்த அவாப்தி யானது, பஞ்ச கோச விசார வாயிலாக, அபரோக்ஷ சாக்ஷாத்காரப் பிரஹ்ம ஞாநத்தினுல் அடையப்படும். இந்த ஞாந ரூப வித்தை, 'பர வித்தை - அபர வித்தை' என இரு வகைத்தாகக் கூறப் படும். அபர வித்தை, பர வித்தைக்குச் சாதநம் ஆம். பர வித்தையால், பரப் பிரஹ்மத்தினை தன் ரூப மாகவே அறிய லாம். தனது யதார்த்த ஸ்வரூபத்தினை சாதந சதுஷ்டய சம்பந்ந உத்தம அதிகாரிகள் சற் குரு கிருபா கடாக்ஷ வீக்ஷண்ய லேச மாத்திரத்தினுல், விரைவில் அறிந் தடைவர்.

விக்ஷிப்த சித்தம் உடைய மந்த அதிகாரிகள், தனது யதார்த்த ஸ்வரூபத்தினை எளிதில் அறிந் தடைய முடியாமையைக் கருதி, அந்த ஏழைகள்பால் வைத்த கருணையினால், சிதம்பரத்திற்கும், விருத்தாசலத்திற்கும், நடுவண் உள்ள, இறும் பூதூரில், இற்றைக்கு நான்கு நூறு வருடங்கட்கு முன் சமாகித ராக விளங்கிக் கொண்டிருந்த, ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகள் என்பவர்கள், தம் குரவர் திரு வுள்ளம் குளிர்வதற்கு, தம் குரவர் மீது, அடங்கன் முறை என ஒரு நூல் இயற்றினர். அந் நூலில், பல பிரபந்தங்க ளுள்ளன. அவற்றுள், மோகவதைப் பரணி என ஒரு பிரபந்தத்தை இயற்றி ஆசாரியரிடம் அறிவித்தனர் அதற்கு, ஆசாரியர், 'தம் திரு வுள்ளம் குளிர வில்லை' என்பதை உணர்த்துபவராய்க் குறிப்பாக, "மயிர் உள்ள சீமாட்டி வாரி முடித்துக் கொள்வாள்" என்னும், உலக வழக்கப் பழ மொழியையுரைத்து, அதன் மூலம், "இந் நூல், இலக்கியம் இலக்கணம் தர்க்கம் கற்ற உத்தம அதிகாரிகட்குப் பயன்படுமே யன்றி, இலக்கியம் இலக்கணம் தர்க்கம் கற்க வலியிலாத மந்த அதிகாரிகட்குப் பயன் படாது" என்று கூறினர். அது கேட்ட தத்துவ ராய சுவாமிகள், சமாதியினின்றும் உத்திதராய், அம் மோக வதைப் பரணியின்கண், 'பாபிகளும் மோக்ஷம் அடைவர்' என்னும் பிரசங்கத்தில், விருத்தாசலப் புராணத்திலும், சூத சம்ஹிதையிலும், உள்ள, சசி வர்ணன், சத்தீச்சுரத்தில், ஆசாரியரிடம் உபதேசம் பெற்றுப் பாப நிவிர்த்தி யுடைய அதிகாரியாய், அப் பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானத்தினை அடைந்த இதிகாசத்தினை, 110 செய்யுளில், மந்தரும் உணரு மாறு செய்து, ஆசாரியர் திரு வுள்ளத்தைக் குளிர் வித்தனர் என்பது கர்ண பரம்பரையாக வழங்கி வருவ தாம்.

இவ் விதம் பெருமை வாய்ந்த 'சசி வர்ந போதம்' என்னும் நூல், முமுக்ஷுக்களாகிய பிசாசுக்களுள், ஒரு பிசாசு. குரு வாகிய காளிகா தேவியைப் பார்த்துப், "பாபிகள் மோக்ஷம் அடைதல் கூடுமா" என்பதை ஆரம்பமாகக் கொண்டு, "பாபிகளும் மோக்ஷம் அடையலாம்" என்பதாகச், "சசி வர்நன் பாபியாக இருந்தான். ஞாநிகளின் கிருபா வீக்ஷண்ய லேசத்தினால் பாபம் நீங்கப் பெற்று, அதிகாரியாய், சர்வ மத சம்மத அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார ஞாநத்தினை அடைந்து, பிரத்யக் பிரஹ்ம ரூபம் ஆனான்" என்பதைத் தெளிவாகக் கூறுகின்றது. ஸ்தூல தேகம் முதல் பஞ்ச கோச விசாரதை, அநந்த யுக்தியோடு கூடப் பகமரத் தாணி போல் மந்தருக்கும் மநதில் பதியும் படி செய்விக்கின்றது. அவஸ்தைகளைப் பலபடப் பிரித்துக் கூறுகின்றது. விராகிகளுக்கும், சமாகிதகர்களுக்கும், மிக விருப் புடைய தாகும்.

கோவிலூர் மடத்தில், முறையாகப் பாடம் நடக்கும் பதினாறு நூல்களுள், இது மூன்றாவது ஆகப் பாடம் நடக்கும் நூலாகும். அத்வைதம், "கேவல-அத்வைதம், சிவ - அத்வைதம், விசிஷ்ட - அத்வைதம். சக்தி-விசிஷ்ட-அத்வைதம், சாக்த - அத்வைதம், நிர்க்குண - அத்வைதம், சுத்த-அத்வைதம், ஐக்ய வாத சைவம்" எனப் பல வேறு வகையாகக் கூறும் அத்வைதப் பிரிவுகளுள், சுத்த அத்வைத வேதாந்தி என்று, ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகளைச் சிலர் கூறுகின்றார்கள். ஆனால், அவர்கள் இயற்றிய, "பெருந் திரட்டு, குறுந் திரட்டு, பாடு துறை, அடங்கன் முறை, ஈசுவர கீதை, பிரஹ்ம கீதை" என்பன ஆதி நூல்களை நோக்கினால் மார்க்காந்தர மான அத்வைத வேதாந்தியாகக் காணப்படுகின்றனர்.

இச் சசி வங்ந போத நூலுக்கு ஓர் உரை யியற்ற வேண்டும் என்று கோவி லூர் மடத்தில் இருந்த பெருமாள் சாமி முதலிய பல சாதுக்கள் விருப் புற்று கேட்டுக் கொண்டபடி, 'பதார்த்த பாஸ்கரன்' எனப் பெயரிட்டு, 1911 வருஷம் ஓர் உரை யியற்றினும் இவ் வுரை யியற்றி 52 வருஷம் ஆகியும், அச்சு வாகநம் ஏரு திருந்து, இது போது திருக்களர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் திரு வருளினுல் அச்சு வாகநம் ஏறி அலங்கரிக்கின்றது.

இந் நூலுக்கு, 1. பிரஹறசை, அருணுசல சுவாமிக ளவர்கள் ஓர் உரையும், 2. ஈசூர், சச்சிதாநந்த சுவாமிக ளவர்கள் ஓர் உரையும், 3. சென்னை, கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் ஒரு வசநமும் 4 திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணுமூர்த்தி சுவாமிகள் மடாதிபதி, மதுரை, கோ. சித. ஸ்ரீ சிவாநந்த சுவாமிக ளவர்கள் (ஆந்த்ராத்த தீபிகை என) 41 செய்யுள் வரை உள்ள விருத்தி யுரை (முற்றுப் பெருத) ஒரு உரையும், 5. காஞ்சீ புரம், ஆ. செங்கல்வ ராய முதலியார் அவர்கள் 'தத்வப் பிரகாசிநி' என ஓர் உரையும், ஆக ஐந்து உரைகள் யியற்றி யிருக்கின்றூர்கள்.

ஐந்து உரைகள் பஞ்ச முக ஈசுவரன் போல் இருக்க, உண்மைப் பொருள் யாவருக்கும் நன்கு புலப்படாமையின், சூர பத்மனை அழிக்க ஷண்முகக் கடவுள் ஆவிர்ப்பவித்தது போன்று, அஞ்ஞாந இருளைப் போக்கி, உண்மைப் பொருளை விளக்க, ஆறுவ தாகப் 'பதார்த்த பாஸ்கரன்' என்னும் உரை செய்யப்பட்டிருக்கின்றது.

உரைகளின் அருமை பெருமைகள், ஒப்பிட்டு நோக்கும் அறிஞர் பெருமக்கட்கு புல னுகும்.

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப் பூ வணம்.

# சசி வர்ண போதச் செய்யுள் 112.

## முதற் குறிப்பு அகராதி.

**சசி வர்ந போத 'பதார்த்த பாஸ்கரன்' என்னும் உரை.**

சிறப்புப் பாயிரம்.

திருக்கள ரதனிற் சமாதியுற் றிலங்குஞ்
செய்யமா வீரசே கரன்றன்,
உருக்கிளர் பாதங் களைத்திநம் மநதி
லுன்னியே சசிவந்ந போதக்,
கருக்கிளர் பிறவி யொழிக்குறு நூலுக்
குரைதனைக் கருத்தெலாம் விளங்க,
மருக்கிளர் பதார்த்த பாஸ்கர னென்ன
வழங்கிட வுரைப்பனியான் மதித்தே.

| எண். | கவி. | எண். | கவி. | எண். | கவி |
|---|---|---|---|---|---|
| 1. வாத வூரர் புராணம் | 1 | 15. வாசிட்டம் | 1 | 29. ரிபு கீதை | 2 |
| 2. வராக உபநிஷத் | 1 | 16. சாட்டியாயநீ உபநிஷத் | 3 | 30. ஞாந சித்தி | 2 |
| 3. திரு மந்திரம் | 5 | 17. குறுந் திரட்டு | 7 | 31. திருப் போரூர் சந்நிதி முறை | 1 |
| 4. வேதாந்த சூடாமணி | 1 | 18. வைராக்கிய தீபம் | 1 | | |
| 5. பகவற் கீதை | 1 | 19. சூத சம்ஹிதை | 2 | 32. கைவல்ய நவநீதம் | 7 |
| 6. பிரஹ்ம ஞாநாவலி | 1 | 20. முண்டக உபநிஷத் | 1 | 33. பெரும் திரட்டு | 4 |
| 7. பிரஹ்ம கீதை | 5 | 21. தாயு மானவர் | 5 | 34. திருக் கோவையார் | 1 |
| 8. சிதம்பர புராணம் | 1 | 22. அஞ்ஞ வதைப் பரணி | 7 | 35. பெரியார் | 1 |
| 9. ஆத்ம போத உதயம் | 1 | 23. மணி மேகலை | 1 | 36. நன் னூல் | 2 |
| 10. நைஷதம் | 1 | 24. பைங்கள உபநிஷத் | 1 | 37. சிவ தருமோத்தரம் | 1 |
| 11. திருக் குறள் | 6 | 25. சாந்தோக்கிய உபநிஷத் | 3 | 38. ஞாந அமிருதம் | 2 |
| 12. திரு வாசகம் | 1 | 26. கல்ப்ப உபநிஷத் | 1 | 39. சூத கீதை | 1 |
| 13 விருத்தாசல புராணம் | 3 | 27. அவிரோத உந்தியார் | 2 | 40. பாடு துறை | 1 |
| 14. தொல்காப்பியம் | 5 | 28. புற நா னூறு | 1 | ஆகக் கவி 94 | |

**சசி வர்ண போத 'பதார்த்த பாஸ்கரன்' என்னும் உரை.**

## சிறப்புப் பாயிரம்.

திருக்கள ரதனிற் சமாதியுற் றிலங்குஞ்
செய்யமா வீரசே கரன்றன்,
உருக்கிளர் பாதங் களைத்திநம் மநதி
லுன்னியே சசிவர்ண போதக்,
கருக்கிளர் பிறவி யொழிக்குறு நூலுக்
குரைதனைக் கருத்தெலாம் விளங்க,
மருக்கிளர் பதார்த்த பாஸ்கர னென்ன
வழங்கிட வுரைப்பனியான் மதித்தே.

சசி வர்ண போத பதார்த்த பாஸ்கரன் உரை. உதாரண சாத்திரம் 40.

| எண். | கவி. | எண். | கவி. | எண். | கவி |
|---|---|---|---|---|---|
| 1. வாத வூரர் புராணம் | 1 | 15. வாசிட்டம் | 1 | 29. ரிபு கீதை | 2 |
| 2. வராக உபநிஷத் | 1 | 16. சாட்டியாயினீ உபநிஷத் | 3 | 30. ஞான சித்தி | 2 |
| 3. திரு மந்திரம் | 5 | 17. குறுந் திரட்டு | 7 | 31. திருப் போரூர் சந்நிதி முறை | 1 |
| 4. வேதாந்த சூடாமணி | 1 | 18. வைராக்கிய தீபம் | 1 | 32. கைவல்ய நவநீதம் | 7 |
| 5. பகவற் கீதை | 1 | 19. சூத சம்ஹிதை | 2 | 33. பெரும் திரட்டு | 4 |
| 6. பிரஹ்ம ஞானாவலி | 1 | 20. முண்டக உபநிஷத் | 1 | 34. திருக் கோவையார் | 1 |
| 7. பிரஹ்ம கீதை | 5 | 21. தாயு மானவர் | 5 | 35. பெரியார் | 1 |
| 8. சிதம்பர புராணம் | 1 | 22. அஞ்ஞ வதைப் பரணி | 7 | 36. நன் னூல் | 2 |
| 9. ஆத்ம போத உதயம் | 1 | 23. மணி மேகலை | 1 | 37. சிவ தருமோத்தரம் | 1 |
| 10. நைஷதம் | 1 | 24. பைங்கள உபநிஷத் | 1 | 38. ஞான அமிருதம் | 2 |
| 11. திருக் குறள் | 6 | 25. சாந்தோக்கிய உபநிஷத் | 3 | 39. சூத கீதை | 1 |
| 12. திரு வாசகம் | 1 | 26. கல்ப்ப உபநிஷத் | 1 | 40. பாடு துறை | 1 |
| 13 விருத்தாசல புராணம் | 3 | 27. அவிரோத உந்தியார் | 2 | ஆகக் கவி 94 | |
| 14. தொல்காப்பியம் | 5 | 28. புற நா னூறு | 1 | | |

**சசி வர்ந போத பதார்த்த பாஸ்கரன் உரை.** உதாரண நூல் 40. உதாரணக் கவி 94.

1. வாத வூரர் புராணம் 1

1 விரிந்த் சஞ்சித

2. வராக உபநிஷத் 1

2 यस्यानुभव

3. திரு மந்திரம் 5

3 ஞாநத்தின் மிக்க

4 எண் ணுயிரத் தாண்டு 3 - 8 - 6

5 முன்னைப் பிறவியில்

6 தன்னை அறிவது 10

7 சொற்றிடும் சிவ 8 - 28 - 250

4. வேதாந்த சூடாமணி 1

8 முத்தாப நெருப்பினுல்

5, பகவற் கீதை 1

9 அதி பூதம் க்ஷயோ பாவ: 8 - 4

6. பிரஹ்ம ஞாநாவலி

10 தேகத்திரய விலக்ஷண: தாபத்திரய விநிர்முக்த:

7. பிரஹ்ம கீதை 5

11 ஈசனு ஞாநி 4 - 59

12 இங்கு நாமறிய 7 - 3

13 வேத மாகம 9 - 10

14 வாக்கு மநமுங் 4 - 6

15 காட்சியை எல்லாம் 12 - 22

8 சிதம்பர புராணம் 1

16 உலகினிற் பாதக

9. ஆத்ம போத உதயம் 1

17 இப்பவ மதனி லீட்டும்

10. நைஷதம் 1

18 சுடந்த ஞாநியும் கடப்பரோ

11. திருக் குறள் 6

19 ஓதி உணர்ந்தும் 84 - 4

20 தற்கொண்டார் பேணி 6 - 6

21 ஐயுணர் வெய்தி 36 - 4

22 தம்பொருளென்ப, மக்கட் பேறு 4

31. திருப் போரூர் சந்நிதி முறை 1

74 சித்தொரு

32. கைவல்ய நவநீதம் 8

75 சுழுத்தியில் பிரள யத்தில் 1 - 55
76 தஞ்சமாம் குருவும் 1 - 83
77 குலவுசற் குருவின் 2 - 180
78 அசத்தில் எம்மட்டுண் 2 - 106
79 நீநானென் றிரண்டிலா 1 - 88
80 இவனதி காரி 1 - 5
81 அநுபவாநந்த வெள்ளத் 1 - 84
82 அரியமெய்ஞ் ஞானத் 2 - 98

33. பெருந் திரட்டு 4

83 அவனெனும், (மகாவாக்கியம்)
84 பதப்பொருளை
85 நவிடைத்துரியாதீதம், (நித்தியாநந்த தரிசநம்)
86 அருந்துயர்க் கிடமாம் (அநுபூதிவிளக்கம்)

34. திருக் கோவையார் 1

87 வினைவள நீறணி

35.

88 உயர்ந்த மெய்ஞ்

36. நன் னூல் 2

89 வினைமுற் றே
90 ஒருமொழி யொழிதன்

37. சிவ தருமோத்தரம் 1

91 முற்றவத் தாலே

38. ஞான அமிருதம் 2

92 ஞாலம் உண்டவன்
93 மேற்படி

29. சூத சம்ஹிதை 1

94 காவிற் காணும்

40. பாடு துறை 1

95 முகுந்தனு நாலு (36 மனோ ரதம்)

ஆக நூல் 40, கவி 95.

# சசி வர்ண போதம்

## முதல் நினைப்புக் கவி 112.

---

பன் னிரு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

மதிபருசொல் அலகைபுணர் எழிலாரு தந்தாப உவமிப் பின் ஏமம்புத — மலமேவி மிகமேவி தன்புத்தி ஒன்ருலும் ஒருமாத தானந்தமி, மதிமுடி ஈங்குன்றி கணியாத இட நன்முநி அருளேவ வெருவும்பிற — மரணபவ பெருமிதமெ அளவில்துக ளனுவெருவ பொறிபுணரி வாழிபரவ, மதி அபர ஆகமபு ராணஇய லறிநவிலு ஆகவறி ஐயறிவறிந் — மெய்ம்மைபூ சனையுமது தானெனும் எனதாடை தாளாக டக்குஞ்சரம், உதிஒருகூ கிளராநி முற்பாவை அறிகின்ற நிலமாகும் விழியைஅழலுண் — உண்ணும்பி ராணனுமல் கரணமொடு இனமுறவெ இடரின்பு ஜநிந்தியே. 1

நிந்திமுன் ருகஉன் ருலறிய அறியாப்பொ அறியும்பொ வேதப்பொருள் — நிமலஅரு உபாதிஈ சன்நிதி ஆகமுன் அகிலகா ரணசெறிந்த பிந்திஅசுத் தம்முரண் ஊக்ஓரில் மஞ்சுகூ சிவமேவு விட்டபோது-பிரியாவு கரணத்தி எந்தக்க வினவிற்ப திவிதத்த அகிலக்கரி, புந்திநிம லப்பொருள் தமர் பவள உதகத்து ஒழிநனவை புரணமாக — புரணமா கிய மரண எஞ்சலின் துரியமாப் புணர்சான்ம ரித்தஇறைஎன், எந்திபண் காட்சிஅரு எம்பிரான் ஆவியே ஆவல்இற என்றுபலகால்— ஏட்டில்வஞ் சவதேவ ஞாநிபதம் அநுதிந மும் யாவரும்இ றைஞ்சுவீரே.

ஆக விருத்தம் 2-க்கு நினைவுக் கவி 112.

# சசி வர்ண போதச் செய்யுட் கிரம விஷய அட்டவணை

---

1. சந்திரன் சூரியன் அக்நி நீர் வாயு ஆகாயம் பிருதிவி ஜீவன் என்னும் அஷ்டமங்கள மூர்த்தமாயும், இவற்றிற்கு அதிபதி யாகவும், இவ்வாறு, வியவகாரதசைக்கண் சர்வ ஆந்மகமாகவும், பரமார்த்ததசையில் நாமரூபாத்மக ஜகத் தொன்றும் விளங்காது சேதநரூப மாகவும் உள்ள வஸ்து வை மந வாக்குக் காயங்களால் வணங்குவாம் எனக் கூறல்.

2. சுருதி புராணம் தொல்லோர் நல் உரைகளாலும், தங்கள் புத்தியினுலும், தங்கள் மார்க்கமே நன் மார்க்கம், ஏனையோர் கூறும் மார்க்கம் நன் மார்க்கம் அன்று என்று கூறும் மநிதர்கள் அனைவருக்கும், அந்த அந்த மார்க்க ரூப மாக ஈசுவரன் இருக்கின்றது போல, யாருக்கும் அவிரோத மாக இருக்கவேண்டும் என்று கூறல்.

3. குரு ஆகிய தேவி, முமுக்ஷுக்க ளாகிய பிசாசு களைப் பார்த்துப் பயப்படாதீர்கள். ஏனெனில், பாபிகளும் கூடப் பாபம் நீங்கி, மோக்ஷம் அடைந்த தன்மையினை உங்கட்குக் கூறுகின்றேம் எனக் கூறல்.

4. அநந்த ஜந்மங்களில் செய்த பாபங்கள் அனைத்தும் ஞாநியின் திருஷ்டி பட்டமாத்திரத்தில் விரைவில் நாசமாம் எனக் கூறல்.

5 ஞாநிக்குப் பணிவிடை செய்யும் மாணவன் மோக்ஷத்தினை அடைவான். அவ் வாறிருத்தலால், ஞாநி யின் புகழை எவ்வாறு கூறுவது. அதனைத் தெரிவிக்கும்

பழைய இதிகாசம் ஒன்று உளது, அதை உங்கட்குக் கூறு கின்றேன், நீங்கள் கேட்பீர்க ளாக என்று கூறல்.

6. தாபத்திரயங்களும் நீங்கிய ஞானியின் பணிவிடை களைச் செய்த மாணுக்கன் அடைந்த பிரயோசநத்தை, மகா விஷ்ணுவுக்கு, சிவன் கூறிய தாம் எனக் கூறல்.

7. கொடிய பாப கர்மத்தினையே செய்துகொண் டிருந்த சசிவங்நன் என்பவன், ஞானியின் நேத்திரங்கள் பட்டு, பூர்வம் செய்த பாவ வினைகள் நீங்கி, உலகத்தில் பிரஹ்ம ரூப மோக்ஷத்தினை அடைந்த கதை யாம். எனக் கூறல்.

8. இந்தச் சசிவங்நன், நரகத்திற்குப் போகும் பாபிகள் அனைவருக்கும் மேம்பட்டவன். எதனுல் எனின், இவன் பெயரைச் சொல்வோர் குலமும் ரௌரவ நரகத்திற்குப் போகும்படியான தீய கர்மங்களைச் செய்துவந்தனன் எனக் கூறல்.

9. இவன் செய்த பாப கர்மத்தால், இவன் குலத்தில் பிறந்திருந்த பிதிர்க்களும், பிதிர்லோகத்தை விட்டு, கொடிய நரகத்தினைக் காணி ஆக்ஷி யாக அடைந்தனர் எனக் கூறல்.

10. அதிகரித்த புண்ணிய பாப வினைகளின் பலன், காலம் தாழ்த்தாது, இப்பொழுதே வரும் என்று சாஸ்திரங் கள் கூறுவதனுல், வைத்திய சாஸ்திரத்தில் கூறியுள்ள நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகளும் சசிவங்நனைக் கொல்லும்படியாக வந்து சூழ்ந்து கொண் டன எனக் கூறல்.

11. பாவ எஞ்ஞானுகிய பிதா, தன் மகன் என்கிற வாஞ்சையால், மந வருத்தம் அடைந்து, புத்திரனுகிய சசிவங்நனது துன்பம் எவ்வாறு நீங்கும் என்று, காற்ருடி

போல், உலகத்தைச் சுற்றி விசாரித்துக் கொண்டு வந்தான் எனக் கூறல்.

12. "அவன் அவன் செய்த பாப புண்ணிய வினைகளின் பலனை அவன் அவன் அநுபவித்துத் தீரவேண்டுமே அல்லது அநுபவியாது போக்க முடியாது" என்று சாஸ்திரங்கள் கூறினும், அதனைத் தான் அறிந்திருப்பினும், புத்திர வாஞ்சை நீங்க முடியாமையால், சசிவர்ணனைக் கூடையில் வைத்துத் தூக்கிக் கொண்டு எங்கும் சுற்றி வந்தனன் எனக் கூறல்.

13. பாவ யஞ்ஞனுடைய வருத்தத்தை, ஒரு தவசி பார்த்து, பிரஹ்ம ஞானிகள் கிருபாவீக்ஷண்யம் இந்தச் சசிவர்ணன் மீது படுமானால், அதுவே, இவனது வியாதி நிவிர்த்திக்கு மேலான மருந்தாம் எனக் கூறினார் எனக் கூறல்.

14. அந்தப் பிரஹ்ம ஞானி யாது கொடுப்பர். எங்குள்ளார். அவர் பெயர் யாது எனக் கேட்ட பாவ எஞ்ஞனுக்கு விடை யாக பரிபூர்ண பிரஹ்ம சொரூபத்தைக் கொடுப்பார், சத்தீச்சுரம் என்னும் ஊரில் வசிப்பவர், நந்திபராயணர் என்னும் பெயர் உடையவர், அவரே, உன் மைந்தனுக்கு வந்து பொருந்தி உள்ள வியாதிக்கு மருந்து எனக் கூறினர் எனக் கூறல்.

15. பாவ யஞ்ஞன், இது முடிவான உபதேசம் என்று கருதி, சத்தீச்சுரம் சென்று நந்திபராயண சுவாமிகளின் திரு வடியை அடைந்து, இந்தக் கொடியவனாகிய சசிவர்ணன், பாபத்திற்குப் யப்படாது பிறர்க்குச் செய்த துன்பங்கள். தேவரீருடைய சந்நிதானத்தில் சொல்லக் கூடாதன வாக இருக்கின்றன என்று கூறினன் எனக் கூறல்.

16. பாவ யஞ்ஞன், சசிவர்ணன் பிறர்க்குச் செய்த தீங்குகள் யாவும் தேவரீர் முன் கூற யோக்கியதை இல்லா

தன என்று கூறியவுடன், நந்திபராயண சுவாமிகள், சசிவந்நனுக்கு வந்து பொருந்திய வியாதிகள் அனைத்தும் நீங்கும்படியாக, தம் முடைய பிரஹ்மாநுபூதியில் உண்டா கின்ற திருஷ்டியை வைத்தனர் எனக் கூறல்.

17. அளவிடுதற் கரி தாகிய சம்சாரத்துக்கு விஷம் போன்ற திருஷ்டியை நந்திபராயண சுவாமிகள் சசிவந்நன் மீது வைத்த உடன், கொல்லும்படியாக அதிகரித்த வியாதிகள் அனைத்தும் முதலில் நீங்கிவிட்டன. அதனை உணர்ந்த நல்ல தந்தை யாகிய பாவ யஞ்ஞன், "நந்திபராயண சுவாமிக ளுடைய திரு வடிக்கு விசுவாசத்தோடு கூடிப் பணிவிடை செய்துகொண்டு இருப்பாயாக" என்று கூறிச் சசிவந்நனை, நந்திபராயண சுவாமிகளிடம் விட்டு விட்டுத் தாம் இருக்கும் இடத்துக்குப் பாவ யஞ்ஞன் சென்றனன் எனக் கூறல்.

18. சசிவந்நனும், நந்திபராயண சுவாமிகளுக்கு விருப்பத்தோடு ஸ்தாநப் பணிவிடை முதல், அங்கப் பணி ஈறாக வுள்ள நான்கு வித பணிவிடைகளையும் செய்து, சில காலத்திலேயே 'சசிவந்நன் தான், நந்திபராயண சுவாமிகளு டைய திரு மேனியைப் பாதுகாத்தற் குரியவன்" என்று எல்லாரும் கூறும்படியாக, நந்திபராயண சுவாமிகளோடு தேகச் சாயை போன்று, விடாது பின்பற்றி இருந்தனன் எனக் கூறல்.

19. நந்திபராயண சுவாமிகள் திருவடிகட்கு விருப்பத் தோடு நான்கு விதப் பணிவிடைகளும் செய்துவந்தமை யினால், அத்வைதப் பிரஹ்மப் பிராப்தியாகிய மோக்ஷத்தினை அடையத் தகுந்த உத்தம அதிகாரிகட்கு உரித் தாக உள்ள நான்கு சாதநங்களும், சசிவந்நனுக்கு, அவதி பரியந்தமாக உண்டாயின எனக் கூறல்.

20. சசிவர்ணன் தனக் குள்ள சில குறைகளை, நந்தி பராயண சுவாமிகளிடம் கூறும் கருத்துடையவனாய், சிரசில் கூப்பிய கையோடு இரண்டு கண்களிலும் நீர் தாரை தாரையாகக் கொட்ட, பல முறை பிரதக்ஷிணம் வந்து, நந்திபராயண சுவாமிகளின் திரு வடிகளில் வீழ்ந்து வணங்கினன் எனக் கூறல்.

21. (ஜீவ) காருண்யம் (ஈசுவர) பக்தி (பாச) வைராக்யம் (பிரஹ்ம) ஞானம் என்னும் நான்குமே ஓர் உருவாய் எழுந்தருளி உள்ள நந்திபராயண சுவாமிகள், சசிவர்ணன் கருத்தை உணர்ந்தும் உணராதவர் போன்று, " நீ வருத்தப் படும் காரணம் யாது" என்று சசிவர்ணனைக் கேட்க, அதற்கு அவன், "இந்தக் கொடிய சம்சார சமுத்திரத்திற்குப் பயந்தேன் எனக் கூறினன்" எனக் கூறல்.

22. முமுக்ஷுக்கள் பயப்படுகின்ற ஜந்ம மரண சமுத்திரத்தின் விஸ்தாரத்தை ஆதியில் வேதம் சாஸ்திரம் பகவத்கீதை முதலியன கூறும், ஆயினும், நந்திபராயண சுவாமிகளும் சசிவர்ணன் மநதில் கொள்ளும்படி யாகச் சுருக்கிக் கூறுவா ராயினர் எனக் கூறல்.

23. ஜநந மரண சம்சார சமுத்திரம் ஆனது. பிறப்பு இறப் பாகிய நீரை உடையது. சந்திரன் போன்ற நல்ல புத்தியை விழுங்குகின்ற ஆசை யாகிய (ராகு கேதுக்கள் என்னும்) பாம்பு பெரிதாக இருக்கின்றது. தத்தம் ஒழுங்கு தவறாது சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களாகிய விஷய ஆகாரத்தினைப் புஜித்துக்கொண்டு கூட்டம் கூட்டமாகச் செல்லுகின்ற இந்திரியங்களாகிய மீன்கள் மிகவும் துள்ளித் திரிகின்றன எனக் கூறல்.

24. கர்வம் என்று சொல்லுகின்ற பெருமை உடையது. வியாதிகள் என்று சொல்லப்பட்ட நீங்காத புலால்!

நாற்றத்தை வீசிக்கொண்டு இருக்கின்றது. சுக துக்கங்களாகிய ஆண் அலை பெண் அலைகள் வந்து (கரையில்) மோதுகின்றன. வஞ்சகத் தன்மையோடு கூடிய மாநம் என்னும் மகர மீன் வசிக்கின்றது எனக் கூறல்

25. அளவில்லாத (காரண—காரிய மூல தூல) அகங்காரமாகிய ஆமைகள் அளவு கடந்து இருக்கின்றன. அதிக ஆசையாகிய ஆழமானது அறிய முடியாதது. திருடாகிய நெருங்கிய பாறையும், மலையும், உடையன. கலகம் செய்வதென்று சொல்லப்பட்ட விஷக் கிருமிகள் நெளிந்துகொண்டிருக்கின்றன எனக் கூறல்

26. பிறத்தல் இறத்தல் பிறவிடையாதல் எச்சில் ஜாதி என்னும் பஞ்ச சூதகங்களாகிய தீமையான நுரைகளை உண்டாக்குவன. துறவு என்னும் சுக ரூப கரையை ஏறவிடாமல் தடுக்கின்ற பெண்களாகிய நீங்காத வலிமை பொருந்திய சுழலை உடைத்தாயிருக்கின்றது. எமனும் பயப்படும் படியான கோபம் ஆகிய வடவாநலம் ஜ்வலித்துக்கொண்டிருக்கின்றது எனக் கூறல்.

27. முமுக்ஷுக்களைப் பயப்படும்படி செய்கின்ற அருந்தல் பொருந்தல் என்னும் போகம் ஆகிய முதலையை உடைத்தாயிருக்கின்றது. ஆனதால், நாநாவிதமான மார்க்கங்களை அறிபவர்களுள், ஒருவருக்கும் சம்சார சமுத்திரத்தினைக் கடப்பதற்குச் சாமர்த்தியம் இல்லை. ஆனதால், சம்சார மாகிய ஜநந மரண ரூப மநுட வர்க்க சமுத்திரம் ஒன்றைக் கடப்பதற்கு ஆற்றல் இன்மையின், எழுவகை (ஊர்வன, மாநுடர், நீர்வாழ்வன—பறப்பன நாற்கால் மிருகங்களாகிய திரியக், தாவரம், தேவர்கள்) பிறப்பு இறப்பாகிய ஏழுவித சமுத்திரத்தினை விரித்துக் கூறுவதற்கு உலகில் சாமர்த்தியம் உடையவர்கள் ஒருவரும் இல்லை எனக் கூறல்

28. இந்திரியவழித்தாகப் பஞ்சவிஷயங்களில் சென்று மொத்துண்டு திரும்புகின்ற சவலைப் புத்தியைக் கொண்டு தம்மில் தாம் சண்டை போட்டுக் கொள்ளுகின்ற சைவம் வைஷ்ணவம் காணுபத்யம் சாக்தம் கௌமாரம் பிராஜாபத்யம் என்னும் ஷண் மதத்தர்களும் மீண்டும் மீண்டும் அந்தச் சம்சார சமுத்திரத்திலேயே வீழ்ந்து நாசமாவார்கள். ஆனதால், பிரஹ்மம் நாசம் ஆகாத நித்திய வஸ்து வாக இருக்கின்றது என்ற அநுபவ ரூப மாகிய கப்பலில் ஏறிச் செல்லும் மகான்கள் மாத்திரம் சம்சாரரூப சமுத்திரத்தினைக் கடப்பார்கள் எனக் கூறல்.

29. சம்சார சமுத்திரத்தினைக் கடந்து போக மார்க்க மறிந்தவர்கள் ஒருவருக்கும் ஆற்றல் இல்லை என்று நந்தி பராயண சுவாமிகள் உபதேசிக்கிற காலத்தில், சசிவர்நன் புலம்பிப் பிராணத் தியாகம் செய்வான் போல் இருந்தனன். அப்படிப் பிராணத் தியாகம் செய்வதற்கு முன்னர், பிரஹ்மம் நாசம் ஆகாத நித்திய வஸ்துவாக இருக்கின்றது என்ற அநுபவ ரூபம் ஆகிய கப்பலில் ஏறிச் செல்லும் மகான்கள் கடப்பார்கள் என்ற உபதேசத்தினை வழங்கி, நந்திபராயண சுவாமிகள், சசிவர்நனுக்குச் சந்தோஷத்தினை உண்டுபண்ணினுர்கள் எனக் கூறல்.

30. நந்திபராயண சுவாமிகளின் திரு அடிகளை "நீடூழி காலம் வாழக் கடவது" என்று, சசிவர்நன் துதித்து, "கருமாதீநமாக வருகின்ற சம்சாரம் ஆகிய சமுத்திரத்தினைத் தாண்டுகின்ற ஆத்ம ஞாநத்தினை அருள்வீராக" என்று சசிவர்நன் பிரார்த்திக்க, நந்திபராயண சுவாமிகள் மேல் வரும் விஷயங்களைக் கூறுவா ராயினர் எனக் கூறல்.

31. நித்தியமா யுள்ள பிரஹ்மத்தினை உணர்ந்த ஞாநிகள் (வித்தையை) பரவித்தை அபரவித்தை என்று

இரு பிரிவாகத் தெளிவாகக் கூறுவார்கள் எனக் கூறல்.

32. வேதம் முதல் புராணம் வரை உள்ள சகல சாஸ்திரங்களும் அபரவித்தை யாகும். சித்த விசிராந்தியைக் கொடுக்கின்ற பிரஹ்ம ஞானம் பரவித்தை யாம் எனக் கூறல்.

33. சாஸ்திரங்களினுடைய வேறுபாடுகளை அறிபவர் அபரவித்தையினை உடையவர் ஆவர். நித்தியாநந்தத்தோடு பிரஹ்மாநந்த நித்திரையில் உறங்குவோர், பரவித்தையினை உடையவர் ஆவர் எனக் கூறல்.

34. புராண இதிகாசம் முதலியவற்றிற்குப் பிராணனாக உள்ள பிரஹ்மப் பொருளை அறியாத இடத்து, புராணம் இதிகாசம் முதலியவற்றின் அறிவு, வாய்ப்புலப்பம் ஆக முடியும் எனக் கூறல்,

35. இயல் இசை நாடகம் என்பவற்றை அறிவது உலகத்தில் உண்டு. ஆனுல், தனக்கு வேருக உள்ள அவற்றை அறிவது ஞானம் அன்று, தனது ஸ்வரூபமான பிரஹ்மத்தினை உணர்தல் ஞானம் ஆம் எனக் கூறல்.

36. அறுபத்து நான்கு கலைகளை உணர்ந்த கலைக்ஞர்களும், ஜநந மரணம் அற்ற சுத்தப் பிரஹ்மத்தினை உணரமாட்டார்கள் எனக் கூறல்.

37. தேகமே ஆத்மா என்னும் புத்தி உள்ள அஞ்ஞர்கள், இந்த அறு பத்து நான்கு கலைகளையும் புருஷார்த்தம் எனக் கருதி அறிவர். அத்வைதப் பிரஹ்மத்தினைப் புருஷார்த்த மாக அறிந்த ஞாநிகள். இவற்றைப் புருஷார்த்த மாக அறியமாட்டார்கள். ஆனுல், விநோத விளையாட்டாக அறிவர் எனக் கூறல்.

38. பஞ்ச இந்திரியங்களின் தன்மையினை உணர்ந்து, அவற்றை நிக்கிரகித்தவராக இருக்கும் சமணரும், ஆத்ம

ஞாநம் அடையாவிடில், மோக்ஷம் அடையமாட்டார்கள் எனக் கூறல்.

39 தனக்கு அந்ய மாய் அபலாய், உள்ள பொருள் களை அறிவது உண்மை ஞாநம் அன்று. தனது ஸ்வரூபத் தினை அறிவதே அறி வாகும் எனக் கூறல்.

40. பூசனை, பூசைக் குரிய சாதநப் பொருள்கள். பூஜ்யன், பூஜகன் என்பவற்றை அபேத மாக அறிவதே ஞாநம் ஆம் என நந்திபராயண சுவாமிகள் கூறினர் எனக் கூறல்.

41. நான் என்று சொல்வது இந்த உடம்பையே ஆகும். அப்படி இருக்க, உடம்புக்கு அந்ய மாக நான் என்று சொல்லும் பொருள் ஒன்று இருக்கின்றதா ? அப்படி இருந்தால், அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும் என்று சசிவந்நன் கேட்ட தாகக் கூறல்.

42. பஞ்ச கோசங்களுள், அந்நமய கோச மாகிய தேகம் ஆத்மா அன்று என்று கூறுவதற்கு ஆரம்பித்து, எனது என்னும் சொல்லுக்கு விஷயமாவதை, யான் என்று மறந்தும் சொல்லக் கூடா தெனக் கூறும் வாயிலாக, என்னுடைய வஸ்திரம் - என்னுடைய பொருள் - என்னு டைய பூமி - என்னுடைய மகன் - என்னுடைய பெண்ஜாதி என்னுடைய குதிரை - என்னுடைய யானை - என் ப து போன்று, என்னுடைய கண் - என்னுடைய முகம் - என் னுடைய பாதம் - என்னுடைய கை - என்னுடைய சரீரம் என்று எப்பொழுதும் இந்த மாமிசமயமான சரீரத்தினைப் பிரித்து தன்னுடையதாகவே கூறுவான், ஆனதால், மறந் தும் தான் என்று சொல்லத் தக்கது அன்று என்று கூறல்.

43. ரத சாரதியை விட அந்நிய மாக ரதம் இருப்பது போன்று நடத்துவோனைப் பார்க்கிலும் சரீர மாகிய ரதம் வேருக இருக்கின்றது என்று கூறும் முகத்தால், சரீரத்தை ரத மாக உருவகித்துக் காட்டும் பொருட்டு, பாதங்கள் ஊர்ந்து செல்கின்ற சக்கரம் ஆகவும், முதுகின்கண் உள்ள எலும்பு, அஞ்சுராணி ஆகவும், வலிமை பொருந்திய நெஞ்சு, தேர் தட் டாகவும், அன்று அலர்ந்த பூவைச் சூடுகின்ற சிரசே, தலை அலங்காரம் ஆகவும், தலையில் உள்ள கூந்தலே, தேர்க்கொடியாகவும் உள்ள, தேகமாகிய ரதத்தை, நடத்து வோனைப் பார்க்கிலும் அந்நிய மாக இருக்கின்றது என்று ஒவ் வொரு நாளும் நீ சிந்திப்பாயாக எனக் கூறல்.

44. செயற்கை யானை போன்றதே மாநுட தேகம், செயற்கை யானையை ஒருவன் உள்நுழைந்து நடத்திஞல், இயற்கை யானை போல் அவயவங்களை அசைக்கும். அது போல், மநுட தேகத்தினுள் ஆத்ம தேவன் ஒருவன் உள் நுழைந்து அவயவங்களை அசைப்பித்தால் அசைக்கும். ஆத்ம தேவன் ஒருவன் உள் நுழைந்து அவயவங்களை அசைப் பியாவிடத்து தொழில் செய்யாது சடமா யிருக்கும் என்று கூறும் வாயிலாக, சிற்பஞல் மதம் ஒழுகும்படி யாகக் குஞ்சரம் செய்து, ஒரு புருடன் செயற்கை யானைச் சரீரத்தி னுள் நுழைந்து கை-கால்-காது-கண்களை, உண்மை யானை அசைப்பது போன்று அசைப்பிப்பன். ஒருவன் உள் நுழை ந்து அசைப்பியாத போது சட மாகக் கிடக்கும் அதஞல், செயற்கை யானை வேறு நடத்துவோன் வேறு. அது போல், இந்தச் சரீர ரூப யானையும், ஆத்ம தேவன் உள் நுழைந்து கை கால் காது கண்களை அசைப்பித்தால் அசையும், ஆத்ம தேவன் உள் நுழைந்து அசைப்பியாத காலத்து, தொழில் அற்றச் சட மாகி இந்தச் சரீர ரூப யானை கீழே கிடக்கும் எனக் கூறல்.

45. உண்ட அந்நம், தேகம் மலம் மநம் என மூ வித பரிணாமத்தினை அடைகின்றது அவற்றில், மலமும் மநமும் அந்ந காரிய பரிணாம மாகலின், ஆத்மா அன்றே, அவ்வாறே, அந்ந காரிய பரிணாம மாகலின், தூல தேகமும் ஆத்மா அன்று என நிஷேதம் செய்யும் வாயி லாகப் புசித்துச் சீரணித்த அந்நத்தின் ஒரு பாகம் மலம் ஆகப் பரிணமிக்கும். ஒரு பாகம் தூல சரீர ரூப பரிணாமத்தினை அடையும். ஒரு பாகம் மநம் ஆகப் பரிணமிக்கும். அவற்றில், மலமும், மநமும், உனது ஸ்வரூபம் ஆனால், நிந்திக்கத் தக்க மலம் நவத் துவாரங்களிலும் ஒழுகுகின்ற தூல சரீர பரிணாம பாகமும் உனது ஸ்வரூபம் ஆகும். அவ் விரண்டும் உனது ஸ்வரூபம் ஆகாமையின், தூல சரீரமும் உனது ஸ்வரூபம் அன்றும் எனக் கூறல்.

46. தூல தேகத்தில் ஆத்மா இருக்கும்போது, அந்நம் சுடுதலை அறிதலினாலும், தூல தேகத்தை விட்டு ஆத்மா நீங்கியிருக்கும்போது, அக்கினி சுடுதலை, தூல தேகம் அறி யாமையினாலும், தேகம் ஆத்மா அன்று என்று கூறு முகத் தால், மிகுந்த பிரியத்தோடு கூட புசிக்கின்ற அந்நம் சுடும் போது, கையை அந்நத்தின் சமீபத்தில் கூட வைத்திருக்கப் பொறுக்காது கோபித்தவ ரார். அவயவங்கள் ஒன்றும் குறையாது ஆத்மா மாத்திரம் தேகத்தினை விட்டுப் போக, அக்காலத்தில், அக்கினிப் படுக்கையின் மீது சூட்டைப் பொறுத்துக் கொண்டு நித்திரை செய்தவர் ஆர். இந்தத் தூல தேகமா. இதற்கு வேறாக ஆத்மா ஒன்று உளதா விசாரிப்பா யாக எனக் கூறல்.

47. தேகம், சாயை போன்றதாம். அதனால், ஆத்மா அன்று என்று கூறும் முகத்தால், நிழல் பாவையும், கண் ணாடியில் தோன்றும் பாவையும், கையையும், காலையும்,

நீட்டலும், முடக்கலும், செய்கின்ற தெல்லாம் புருடன் செய்கின்ற தொழிலி னிடத்தே உளவாம். பாவையி னிடத் தியற்கையி லிலவாம். அவை போன்றே, இந்தத் தூல சரீரம் செய்கின்ற தொழில்களும், பிரகாசம் பொருந்திய ஞான வடிவ ஆத்மாவின் தொழில்களாம். ஆதலின். தூல தேகம் சேதநம் அன்ரும். அதனால், ஆத்மா அன்ரும் எனக் கூறல்.

48. ஞேயமாக உணரப்படுகின்ற திரிசியப் பொருள், எப்பொழுதும் திருஷ்டாவைப் பார்க்கிலும் வேருகவே இருக்கும். ஆனல், இந்த மாமிச மயமான தூல சரீரத்தினை நான் என்னும் ஆத்மா என்று கூறலாமா ? கூறக் கூடாது. அதற்குத் திருஷ்டாந்தம் வந்து பொருந்தியிருக்கின்ற பக்ஷி அல்லவே கூடு. பக்ஷி வேறு. கூடு வேறு போல, அறிவற்ற தூல உடல் அறிவு ரூப உன்னைப் பார்க்கிலும் வேறு என்று பேத மாக உணர்வா யாக எனக் கூறல்.

49. தூல தேகம் பஞ்ச பூத வடிவமாக இருத்தலால் ஆத்மா அன்று என்று கூறு முகத்தால், இந்தத் தூல சரீரத் தில் கடிநம் என்று கூறப்படுவன, பிருதிவியின் அம்சமாம். திரவத்துவமா யுள்ளன, அப்புவின் அம்சமாம் தகிக்கும் நிலையுள்ளன யாவும் அக்கினியின் அம்சமாம். அசைவன யாவும் வாயுவின் அம்சமாம். துவாரங்களோடு கூடியவை யாவும் ஆகாசத்தின் அம்சம் ஆம். அதனல், அறிவற்ற இந்தத் தூலதேகம் பஞ்ச பூத உருவங்களே ஆகும். ஆத்மா அன்ரும் தூல தேகம் எனக் கூறல்.

50. மனோமய விஞ்ஞானமய கோசங்களுள், ஞான இந்திரியங்களே பதார்த்தங்களை அறிதலின், ஞான இந்திரி யங்களே ஆத்மாவாகும் எனக் கூறுதல் பொருந்தா தென்

னும் வாயிலாக, நேத்திர இந்திரியத்தினை ஆத்மா என்று கூறில், அது சூரியாதிப் பிரகாச வஸ்துக்களின் அபேக்ஷையினாலேயே பொருளை விளக்குகின்றது. பிரகாசங்களின் சகாயம் இல்லாத இடத்துப் பொருள்களை நேத்திர இந்திரியம் விளக்காமையினால் ஆத்மா அன்று என்று நீக்கப்படும். உருவங்களைக் கண்ட உன்னுடைய கண்ணுக்குச் சமானமாக, சுரோத்திரம் துவக்கு ரஸநம் கிராணம் என்னும் நான்கு இந்திரியங்களையும் ஆத்மா அல்ல என்று உணர்வாயாக எனக் கூறல்.

51. கர்ம இந்திரியங்களுள், வாக்கு இந்திரியம் ஆத்மா அன்று எனக் கூறும் வாயிலாக, அக்கினி புசிக்கிற பதார்த்தங்களில், மநிதன் புசிக்கும் பதார்த்தங்கள், எலும்பு, மூளை, வாக்கு என மூவித பரிணாமத்தை அடைகின்றன. முதற் பாகம் எலும்பும், நடுப் பாகம் மூளையும், கடைப் பாகம் வாக்கும் ஆகும் என்று நித்தியமாகவுள்ள வேதத்தின் முடிவான உபநிஷத்துக்கள் கூறுகின்றன. (ஆகலின், எலும்பும் மூளையும் ஆத்மா ஆகாதது போல வாக்கும் ஆத்மாவன்று) எனக் கூறல்.

52. பிராணமயகோசம் ஆத்மா அன்று என்று கூறும் வாயிலாக, மநிதன் குடிக்கின்ற ஜலம், மூத்திரம், ரக்தம், பிராணன் என மூவித பரிணாமத்தினை அடைகின்றது. முதற் பாக பரிணாம மூத்திரமும், நடுப்பாக பரிணாம ரக்தமும், உனது ஸ்வரூபம் ஆகுமாயின், கடைப்பாக பரிணாமமாகிய பிராணன் உனது ஆத்ம ஸ்வரூபம் ஆதல் கூடும் (மூத்திரமும், ரக்தமும், உனது ஸ்வரூபம் ஆகாமையின் பிராணனும் ஜல பரிணாமி யாகலின் உனது ஸ்வரூபம் அன்று) நீ இதற்கு விடை கூறுவா யாக எனக் கூறல்.

53. பிராணமய சோசத்தில், பிராணன் ஆத்மா அன்று என்று நிஷேதிக்கும் வேறு யுக்தி வாயிலாக, சுழுத்தி அவஸ்தையில், பிராணனுக்கு அறிவில்லாமையினுல், பிராணன் ஆத்மா அன்று. பிராண வாயு சுழுத்தி அவஸ்தையில் அறியாதிருப்பது. அறிதற்குச் சாதந மான இந்திரியங்களின் நீக்கத்திஞல் அறியவில்லை ஆகும். ஆனுலும், பிராணன் ஆத்மா என்று கூறுவாயாகில், அது பொருந்தாது என்று வேறு திருஷ்டாந்த வாயிலாக நிஷேதிப்பான் புகுந்து, பட்டணத்தில் பவனி வருங் காலத்தில் சதுரங்க சேனைகளும் அரசனை விட்டு விலகாது கூடவே வரும். (அதுபோல பிராணன் சுழுத்தி அவஸ்தையில் எஜமானனுகிய ஆத்மாவாக இருக்குமாயின், இந்திரியங்களாகிய சைந்ய ரூப சாதநங்கள், பிராண ரூப ஆத்மாவை விட்டு நீங்காதிருக்கும். இந்திரியங்கள் பிராணனைத் தனித்து விட்டு விட்டு நீங்கி விடுகிற படியால், பிராணன் ஆத்மா அன்று) எனக் கூறல்.

54. ஆயின், இந்திரியங்கள் ஒடுங்கியிருக்கும் சுழுத்தி யவஸ்தையில், பிராண வாயுவின் சஞ்சாரம் எப்படிக் கூடும் என்னின், (அதற்குச் சமாதாநம்.) தூல சரீரத்தைக் காப்பதற்கு பிராணவாயு சுழுத்தியில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும்படியாக ஈசுவரனுல் ஏற்படுத்தப்பட்டதாகும். அப்படிப் பிராணவாயு சுழுத்தி யவஸ்தையில் தூல சரீரத்தைக் காக்காவிட்டால், தூல சரீரம் மரித்து விட்டது என்று கருதிச் சுற்றத்தார்கள் மசாநத்தில், தகநம் செய்வதற்கு முன்னமே, கோணி யிருக்கின்ற வாலினை உடைய நாய் பற்றி இழுத்துப் போய்த் தின்று விடும். (ஆகலின், ஈசுவரனுகிய எஜமானது ஆஞ்ஞையால், தூல சரீர மாகிய வஸ்துவைச் சுழுத்தி யவஸ்தையில் பிராணனுகிய சேவகன் பாதுகாத்துக் கொண்டிருக்கிருன்) எனக் கூறல். (வாந சிம்மம்

புலி வேங்கை முதலியன வநத்திலிருந்து வந்து தின்பதற்கு முன்னர், கிராம சிம்மமாகிய நாய் பக்கத்தில் இருந்து வந்து சுலபமாகத் தின்று விடும் என்னும் லகு வான பொருள் தோன்றக் கூறியதாம்.)

55. மநோமய விஞ்ஞாநமய கோசம் ஆத்மா அல்ல என்று கூறும் வாயிலாக, கூட்டமாகப் பொருந்தி உள்ள அந்தக் கரணத்தில் மநமும் ஒன்று என்று எண்ணப் படுத லாலும், "இது என்னுடைய மநம்" என்று மமதா விருத் திக்கு விஷயமாகக் கூறப்படுதலாலும், முன்னர் 43-வது கவியில், அந்நத்தின் பரிணமம் மநம் என்று கூறப்பட் டிருத்தலாலும், சங்கற்ப விகற்ப ரூப மநம் ஆத்மா அன்று. அது போன்றே, நிச்சய ரூப புத்தியும் ஆத்மா அன்று எனக் கூறல்.

56. விஞ்ஞாநமய கோசத்தில், அகங்காரம் ஆத்மா அன்று என்று கூறும் வாயிலாக, சுகமும் துக்கமும் உடை யதாய் அசத்தாய், ஜடமாய், எண்ணப்படுகின்ற அந்தக் கரணங்களுள் ஒன்ருய், யாவரும் நெருங்கியிருக்கின்ற பிற விக்கு விதை என்று அறியப்படுகின்ற அகங்காரம் உனது ஸ்வரூப ரூபம் அன்று (ஆத்மா வன்று) என்று உணர்வா யாக எனக் கூறல்.

57. மநோமய கோசத்தில், சித்தம் ஆத்மா அன்று என்று கூறும் வாயிலாக, ஒரு வஸ்துவை "இஃதோ இஃ தன்ரோ" என்று சம்சயப்படுதலையும், "இதுவே" என்று நிச்சய மாக புத்தி உணர்தலையும், "தேகத்தில் நான்" என் றும், "தார புத்திர தநாதிகளிடத்து எனது" என்றும், அகங்காரம் அபிமாநித்தலையும் சிந்திப்பது, சித்தம் ஆம். அந்தச் சித்த ரூப அந்தக்கரண விருத்தி உனது ஆத்ம ஸ்வ ரூபம் அன்று என்று தெளிவா யாக எனக் கூறல்.

58. 40-வது செய்யுள் முதல் 55-வது செய்யுள் வரை 16 செய்யுள்களில், தேகம், இந்திரியம், பிராணன்—மநம்—புத்தி—சித்தம்—அஹங்காரம் என்னும் காரிய சப்த உபாதிகளும் ஆத்மா அல்ல என்று விரித்துக் கூறியதை, தொகுத்துக் கூறும் வாயிலாக, தூல சரீரம் முதலாக சித்தம் ஈருகக் கூறிய காரிய சப்த உபாதிகளாகிய வஸ்துக்கள் யாவும் உன்னுல் அறியப்படும் பொருள்களாக விளங்குகின்றதனுல், உனது ஆத்ம ஸ்வரூபம் அல்ல என நந்திபராயண சுவாமிகள் உபதேசித்தனர் எனக் கூறல்.

59. நந்திபராயண சுவாமிகளின் உபதேசத்தினைப் பெற்ற சசிவர்நன் வினவுதல் வாயிலாக, உன்னுல் அறியப்படும் திரிசியங்கள் யாவும் உன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் அல்ல என்று கூறினீர். அது எனக்கும் சம்மதமே ஆகும். நான் என்னும் சொல்லுக்குப் பொருள், என்னுல் அறியப்படாதிருக்கின்ற அதிரிசிய வஸ்துவா என்று சசிவர்நன் நந்திபராயண சுவாமிகளிடம் சங்கை செய்தனன். அச்சங்கைக்குச் சமாதாநம் நந்திபராயண சுவாமிகள் கூறுவாராயினர் எனக் கூறல்.

60. நந்திபராயண சுவாமிகள் கூற்ருக, அப்பிரத்தியக்ஷ வஸ்து ஜகத் காரண மாகிய மாயையாம். சுட்டி அறியக் கூடிய வஸ்து காரிய ரூப உலக மாம். இம் முறையால் விளங்குகின்ற நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிஷத்துக்கள் யாவும் இடையீடின்றி மாயையும் மாயா காரியமும் உனது ஆத்ம ஸ்வரூபம் அல்ல என்று கூறுகின்றன எனக் கூறல்.

61. அப்படியாயின், எனது ஸ்வரூபம் யாது எனக் கேட்ட சசிவர்நனுக்கு, நந்திபராயண சுவாமிகள் உபதேசித்தனர் என்னும் வாயிலாக, அறியப்படுகின்ற காரியப் பிர

பஞ்சமும், உனது ஸ்வரூபம் அன்று. அறியப்படாத காரணப் பிரபஞ்ச மாகிய மாயையும் உனது ஸ்வரூபம் அன்று, அறிவே உனது ஸ்வரூபம் ஆம் என வேதங்கள் கூறுகின்றன. திரிசிய அதிரிசிய விலக்ஷண வஸ்து, இந்திரிய கோசர சக்தி விருத்திக்கு விஷய மாவதோ அன்று, பின்னர், ஞாந திருஷ்டிக்கு, அதாவது, அகண்ட பிரஹ்மாகார லக்ஷுண விருத்திக்கு விஷய மாகும் வஸ்து வாம் எனக் கூறல்.

62. கர்மம் பக்தி ஞாநங்களைக் கூறும் வேத தாத்பரியங் கூறும் வாயி லாக. இப் பொழுது கூறியது, வேத தாத்பரிய மாம். இதற்கு வேருகச் சொல்லுகின்ற கர்மம் பக்திகள் யாவும் வேத தாத்பரியம் அல்ல என்றும், அற்பமும் பேதம் இல்லாத சித் ரூப வஸ்து. உபநிஷத்துக்களில் அலங்காரமாக விளங்குவதாம். ஆகலின், தத் த்வ மசி மகா வாக்கியப் பொருளே பரிசுத்த மான அர்த்த மாம் எனக் கூறல்.

63. மகா வாக்கியத்தில் உள்ள மூன்று பதங்களை அறிவிக்கும் வாயி லாக, தத் எனும் பதத்துக்கு அர்த்தம் நிர்மல ஞகிய ஈசுவர னுவன். த்வம் என்னும் பதத்துக்கு அர்த்தம் கிஞ்சிக்ஞ ஞகிய ஜீவ னுவன். அசி என்னும் பதத்துக்கு அர்த்தம் நின்மல மான ஜீவ ஈசுவரர்கள் இருவரின் ஏகத்வம் ஆவதே ஆகும் எனக் கூறல்.

64. சசிவர்நன் சங்கையின் வாயி லாக, பிரயாசைப் பட்டு அடையக் கூடிய பிரஹ்மம் பரோக்ஷம் ஆம். நிறைந்த ஜீவர்கள் அபரோக்ஷம் ஆவர். ஆனதால், பிரத்தியக்ஷ பரோக்ஷத்வ தர்மங்களோடு கூடிய ஜீவ ஈசுவர்களின் ஏகத்வம் அடைவது, எப்படிக் கூடும்? என்று சசிவர்நன் சங்கை செய்தனன் எனக் கூறல்.

65. ஜீவ ஈசுவரர்களுக்கு உண்டாகின்ற வேறுபாடு கள், சர்வஞ்ஞத் தன்மை கிஞ்ஜிஞ்ஞத் தன்மை யாகிய செயற்கையினால் ஆம். ஸ்வாபசித்த பேதம் அன்று. ஈசுவர னுக்கும், உபாதி உளதோ என்னும் சங்கை வாயி லாக, ஜீவனுக்கு கபம் முதலியவற்றிற்கு ஸ்தாநமா யிருக்கின்ற காரிய சப்த உபாதிகள் இருப்பன போல, ஈசுவரனுக்கும், சர்வ காரணத் தன்மை முதலிய சரீர ரூப காரண சப்த உபாதிகள் இருக்கின்றன. எனக் கூறல்.

66. ஈசுவர உபாதி யாகிய காரண சப்த உபாதிகளைக் கூறும் வாயி லாக, சர்வேசுரத் தன்மை-சர்வஞ்ஞத் தன்மை-சர்வ வியாபகத் தன்மை-சர்வ காரணத் தன்மை-கூறுகின்ற சர்வ சிருஷ்டித் தன்மை-சர்வ திதித் தன்மை-சர்வ சம்மாரத் தன்மை என்பன, காரண சப்த உபாதிகளாம்-எனக் கூறல்.

67. உபாதிகளை நீக்கு தற்கு, தத் த்வம் பதங்களில் உள்ள, சுத்த அசுத்தங்களைக் கூறும் வாயி லாக, சாஸ்திரத் தில் கூறிய கிரம மாக, காரிய சப்த உபாதி-காரண சப்த உபாதிகளை நீக்கும் பொருட்டு, நீ என்கின்ற பதத்தினிடத் தும், முதன்மை யான, அது என்னும் பதத்தினிடத்தும் உள்ள, அசுத்தார்த்த-சுத்தார்த்தங்களைக் கூறுவாம் எனக் கூறல்.

68. தூல சரீரம் முத லாக விளங்குகின்ற(சித்த பரியந்த மான) ஏழினையும். அகம் சப்த அர்த்த மான ஆத்மா என்று கருதுதல், நீ என்னும் பதத்தினிடத் துள்ள அசுத்தார்த்த மாம். துக்கம் நீங்கியிருக்கின்ற சாக்ஷியே நான் எனல், நீ என்னும் பதத்தினிடத் துள்ள சுத்தப் பொரு ளாம். எனக் கூறல்,

69. சர்வ காரணத் தன்மை முதலிய ஏழினையும், நான் என்னும் சொல்லுக்குப் பொருளாகிய பிரஹ்மம் என்று தியாகிக்குதல், அது என்னும் பதத்தின் அசுத்தப் பொருளாகும். சர்வ காரணத் தன்மை முதலிய காரண சத்த வுபாதிகளை யறியும் சாக்ஷி யான் என் றுணர்தல், அது என்னும் பதத்தின் சுத்தப் பொருளாகும் எனக் கூறல்.

70. நெருங்கி இருக்கின்ற காரண சப்த உபாதி-காரிய சப்த உபாதிகள் நாசம் ஆகி, அதன் பின் மிச்சமாய் உள்ள சித் ரூபம், தத் பத லக்ஷியார்த்த பிரஹ்மம், த்வம் பத லக்ஷியார்த்த கூடஸ்த ராக உணர்ந்த சம்ஸ்காரமும் நீங்கியிருப்பது, அசி என்னும் பதத்திற்குப் பொருளாம் எனக் கூறல்.

71. தத் பத த்வம் பதங்களின் அசுத்த (சுத்த) அர்த்தங்களை, வேறு சாஸ்திரங்களில், முக்கியார்த்தம் (வாச்சியார்த்தம் அபிதார்த்தம்) என்று கூறுவர். சுத்த அர்த்தத்தினை லக்ஷியப் பொருள் என்று நின் மல-மான பெரியோர் கூறுவர். எனக் கூறல்.

72. பரஸ்பரம் விரோத முடைய ஜீவ ஈசுவரர்களின் ஸ்வரூபங்கள், முக்கியார்த்தம் ஆம். ஜீவ ஈசுவரர்களிடத்து அபேத மாக இருக்கின்ற சித் ஸ்வரூபம் இலக்ஷியார்த்த மாம். எனக் கூறல்.

73. சர்வஞ்ஞத் தன்மை யாகிய உயர்வினை உடைய ஈசுவரன், (கிஞ்சிக்ஞத் தன்மை யாகிய தாழ்வினை உடைய) ஜீவர்கள் ஆகிய இருவர்களின், சரீரங்கள் இரண்டினையும். (பாகத் தியாக) லக்ஷண வாக்கியப்படி நீக்கினால், பிரஹ்மம் ஒன்றே உள தாம். எனக் கூறல்.

74. ஜஹத் லக்ஷணை, அஜஹத் லக்ஷணை, ஜஹத் அஜஹத் லக்ஷணை என மூன்று வித மாக லக்ஷணை உள்ளன

எனக் கூறும் வாயி லாக, விசாரிக்கும் இடத்து, விட்ட லக்ஷணை என்றும், விடாத லக்ஷணை என்றும், விட்டு விடாத லக்ஷணை என்றும், லக்ஷணையினை மூன்று விதமாக அபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானத்தினை உடைய பெரியோர்கள் கூறுவர். அவற்றைக் கூறு வாம் எனக் கூறல்.

75. விட்ட லக்ஷணையினைக் கூறும் வாயி லாக, கட்டில் கரைகின்றது என்று கூறுதல் போன்றும், வடதிசைக்கண் கங்கையில் பெரிய கோஷம் இருக்கின்றது என்றல், போன்ற வாக்கியங்கள். விட்ட லக்ஷணையினை உடைய வாக்கியங்க ளாம் எனக் கூறல்.

76. விடாத லக்ஷணையினைக் கூறும் வாயிலாக, சிவலை நிற்கின்றது, வெள்ளை போயிற்று, என்பன போன்ற வாக்கியங்களை, விடாத லக்ஷணைக்கு பொருந்துவன வாம் என்று கவலை யின்றி நீ கருத்தில் கொள்வா யாக எனக் கூறல்.

77. விட்டு விடாத லக்ஷணையினைக் கூறும் வாயிலாக, மகாவாக்கியத்தில் உபயோகமாகப் பொருந்துகின்ற, விட்டு விடாத் லக்ஷணையின் ஸ்வரூபம் என்ன என்று வினவில், அந்தத் தேவதத்தனே இந்தத் தேவதத்தன் (சோயம் தேவ தத்தன்) என்னும் பொருள் போல, உள்ள வாக்கியங்கள், ஜகத் அஜஹத் லக்ஷணைக்கு உதாஹரணம் உடையனவாம் எனத் தைரிய மாகச் சிந்தை செய்வா யாக எனக் கூறல்.

78. விட்ட லக்ஷணையினையும் (மகாவாக்கியத்திற்கு உபயோகம் இன்மையினால்) விட்டு, விடாத லக்ஷணையினையும் (மகா வாக்கியத்திற்கு உபயோகம் இன்மையினால்) விட்டு, (மகாவாக்கியத்திற்கு உபயோக மான) விட்டு விடாத லக்ஷணையினால், நீ நன் றாக உனது ஸ்வரூபத்தினை அறிவா யாக எனக் கூறல்.

79. பொருந்திய காலத்தினையும், தேசத்தினையும், (ஐக்கியத்துக்கு விரோதம் உண்டாதலின்) விட்டு, ஒரே தேவ தத்த னாகிய புருடனைக் கொள்ளும் தன்மை போல, கூறுகின்ற காரிய சப்த உபாதி, காரண சப்த உபாதிகள் (விசிட்ட சேதநங்களை) விரோத முடையன என்று கண்டு, அவற்றை விட்டு, மகாவாக்கியத்தின் உண்மைப் பொருளை அபரோக்ஷ மாக அறிவா யாக, எனக் கூறல்.

80 ஜீவனை விட்டு நீங்காத காரிய சப்த உபாதிகளும், ஈசுவரனிடத்துப் பொருந்தியிருக்கின்ற காரண சப்த உபாதி களும், இவற்றிற்குச் சாக்ஷி யாக இருந்த வாசனையும், நீங்கும்படி (யாம்) அறிவிக்கின்ற பிரகாரம் அபரோக்ஷ மாக அறிந்து கொள்வா யாக எனக் கூறல்.

81. கரண சமூகங்கள் பொருந்தி இருக்கின்ற சாக்கிர ஸ்வப்ந அவஸ்தையிலும், முன்னர்க் கூறிய பிரஹ்ம வஸ் துவை, அறியமுடியாது, கரண சமூகங்கள் நாசம் அடை கின்ற சுழுத்தி அவஸ்தையிலும், அந்தப் பிரஹ்மப் பொருளை அறிவதற்கு வழி யில்லை என்று நீ அறிவாயாக, (ஆதலால், சாக்கிர சொப்ந சுழுத்தி யவஸ்தை மூன்றிலும் பிரஹ்மம் அறியப்படாது.) எனக் கூறல்.

82. சர்வ இந்திரியங்களும் தத் தம் கோளகங்களில் இருந்து வியவ்காரத்தினைச் செய்வது, ஜாக்கிர அவஸ்தை யாம். இந்தச் சாக்கிர அவஸ்தை விஷயங்களின் பலத்தினால் மநம் (கண்ட ஸ்தாநத்தை) பொருந்தி அநுபவித்தல் ஸ்வப்ந அவஸ்தையாம். ஸ்திர அஸ்திர விஷயங்கள் நாசம் ஆகி யிருக்கின்ற நிலை (நித்திரை) சுழுத்தி அவஸ்தை யாம். (இவ் வாறு ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளை உணர்வா யாக) எனக் கூறல்.

83. பிரஹ்மத்தினைச் சாக்ஷாத்கரித்தற்கு எந்த அவஸ்தையில் கூடும் என்று கேட்கில், அவஸ்தையும், இந்திரியங்களின் வியாபாரங்களும் நீங்கி, நனவில் சுழுத்தி நிலை வருமாயின், அந்த நான்காவது அவஸ்தை யாகிய துரிய அவஸ்தையில், அந்தப் பிரஹ்ம வஸ்து நன்ருக அபரோக்ஷம் ஆகும் எனக் கூறல்.

84. 78-வது செய்யுளில், "காட்டும்படி" எனக் கூறிய, காரண சப்த-காரிய சப்த உபாதியினை உடைய, தத் பத த்வம் பதங்களி னுடைய விரோத நிவிர்த்தி கூறும் வாயிலாக, மூன்று வித மான அவஸ்தைகளை அறிந்த அந்தத் துரிய நிலை, ஜீவ சாக்ஷி யாகிய கூடஸ்த னும். இவ்வாறே, அந்த ஈசுவர னுடைய ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளை அறிந்த அந்தத் துரீய நிலை, ஈசுவர சாக்ஷி யாகிய பிரஹ்மம் ஆம். எனக் கூறல்.

85. "சாக்ஷி யாக இருந்தோம் என்ற சம்ஸ்காரமும் கழிய" என்ற, அசி பதப் பொருளை உபதேசிக்கும் வாயிலாக, சர்வ அவஸ்தைக்கும் சாக்ஷி யாகிய கூடஸ்தரே. ஈசுவர துரிய அவஸ்தையில் விளங்காநின்ற பிரஹ்மம் ஆம். ஈசுவர துரிய அவஸ்தையில் விளங்குகின்ற பிரஹ்மமே, ஜீவ துரியத்தில் விளங்காநின்ற கூடஸ்தர் ஆம் என்னும்படி, ஆவதுவே, கூறிய தத் த்வம் அசி என்னும் மூன்று பதத்தின் முடி வான அர்த்தம் ஆம் எனக் கூறல்.

86. நிர்மல மான பிரஹ்மப் பொருளை வேதத்தில் கூறிய பிரகாரம் அடையும்படி கிருபா நிதி யாகிய நந்தி பாராயண சுவாமிகள் உபதேசிக்க, (அதற்கு சசிவர்ணன்), நிர்மல மான பிரஹ்மப் பொருளை (எனது ஸ்வரூப மாக யான்) அடையமுடியாது என்று கூறி, திரு அடிகளில்

வீழ்ந்து நமஸ்கரிக்க, (நந்தி பாராயண சுவாமிகள் உப தேசிப்பா ராயினர்.) எனக் கூறல்.

87. பாதோதக தீக்ஷை வாயி லாக, சப்த ரூப மாக இருக்கின்ற சாஸ்த்திரத்திற்கு அளந் தறியக்கூடாத அந்தப் பிரஹ்ம வஸ்துவினை கொடுத்தற்பொருட்டு, தேவர்களும் (மகிமையினை) அளந் தறியக் கூடாத பாதங்களில் விட்ட உயர்வு பொருந்திய உகத்தினைக் கொண்டு அபிஷேகம் செய் வித்து, எனக் கூறல்.

88. (பரிகல தீக்ஷை, பஸ்ம தீக்ஷை வாயி லாக, சசி வந்நனுக்கு) பவளம் போன்ற சிவந்த அதரத்தினை உடைய வாயில் வைத்து எடுத்த அமிர்தம் போன்ற பரிகல சேஷத்தினைக் கொடுத்து, மிகுந்த பிரியத்தோடு சரீரத்திற் குரிய நோய் முதலிய மத வாதிக ளாகிய விரோதிகள் அத்தி யந்தம் நாசம் ஆகுதற்கு, பெருமை பொருந்திய வெண்மை யான விபூதியை கஞ்சுகம் (சட்டை) போலச் சரீரம் முழுதும் பூசி. எனக் கூறல்.

89. (திரு அடி தீக்ஷை வாயி லாக) ஜல பூர்வ மாக உடல் பொருள் ஆவி மூன்றினையும் நன் ருகத் தத்தம் வாங்கிக்கொண்டு, ஒரு க்ஷணத்தில், பாவம் ஆகிய அஞ்ஞாந சப்த பூமிகளையும் நீக்கும் பொருட்டு, (சசிவந்நன்) சிரசின்மீது இரண்டு கையினொடு, இரண்டு பாதங்களையும் பொருந்தும்படி செய்து. என்க் கூறல்,

90. விஷய திருஷ்டி நாசம் ஆகும்படியாகவும், உபநிஷத் அர்த்த மாகிய பரமாத்மா அபரோக்ஷ மாக விளங் கும்படியாகவும், உள்ள ஞாந நேத்திரத்தினைக் கொடுத்து, மூன்று பதங்களின் அர்த்தங்களையும் தெளி வாகக் கூறுக

என்று நந்தி பராயண சுவாமிகள் ஆஞ்ஞை செய்தனர். எனக் கூறல்.

91. நந்தி பராயண சுவாமிகள் உபதேசித்தபடியே ஜீவ ஜாக்கிரம் முதல், சிவ துரியம் முடிவாக, மநம் முதலிய சகல கரணங்களும் நீங்கி, சிதாகாசத்தினை அநுபவித்த அநுபவ சாமர்த்தியத்தினைக் கூறுவா னயினன் எனக் கூறல்.

92. பாகிய மாய் உள்ள சம்பூர்ணம் ஆன, தச இந்திரியங்களும், அந்தக் கரணமும், ஆகிய யாவும் (தத் தம் கோளகங்களில் இருந்து) வியவகரிக்கின்ற அவஸ்தையை, ஜீவனது ஜாக்கிர அவஸ்தை என்று உணர்ந்தேன், எனக் கூறல்,

93. பாகிய மாய் உள்ள சம்பூர்ணம் ஆன, தச இந்திரியங்களும் நீங்கி, அந்தக்கரண விருத்திகள் யாவும் வியவகரிக்கின்ற அவஸ்தையை, ஜீவனது ஸ்வப்நா அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

94. மரணம் ஆகிய தசை இது என்று கூறும்படி, மநம் முதலிய சகல கரணங்களும் நாசம் அடைந்து, அஞ்ஞாந ரூப மாய் இருக்கின்ற அவஸ்தையை, ஜீவனது சுழுத்தி அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

95. குறைதல் இல்லாமல், சகல கரணங்களும் நாசம் அடைந்து, இருண்டு இருந்த, சுழுத்தி அவஸ்தையினை உணர்ந்த, ஞாந ரூப மாகிய சேதநம் விளங்கும் அவஸ்தையினை, ஜீவனது துரிய அவஸ்தை என்று உணர்ந்தேன். எனக் கூறல்.

96. ஜீவ துரிய அவஸ்தையில் விளங்குவ தாகிய சேதநம், அற்பமும் சலநம் இன்றி, எல்லாவற்றிற்கும் சாக்ஷி

மாத்திர மாக நின்ற அவஸ்தையினை, ஈசுவரனது சாக்கிர அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

97. அநந்த ஜந்துங்களில் பொருந்திய இந்தப் பிரபஞ்சத்தினை நிவிர்த்தித்து, நிவிர்த்தித்ததனை அறிந்த சாக்ஷி ரூப வஸ்துவினை அறிந்த அவஸ்தையினை, ஈசுவரனது ஸ்வப்ந அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

98. சாக்ஷியும், சாக்ஷியமும், நீங்க, "ஆத்மா இவ்வாறு இருந்தது" என்னும் தன்மையும் விளங்காத அவஸ்தையினை, ஈசுவரனது சுழுத்தி அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

99. ஈசுவரனது ஜாக்கிர அவஸ்தை நாசம் ஆயிற்று என, அறிந்து கூறிய ஈசுவர ஸ்வப்நமும், இறந்த, ஈசுவர சுழுத்தி அவஸ்தையில், எந்தச் சேதநம் விளங்குகின்றதோ, அந்த அவஸ்தையினை, ஈசுவரனது துரிய அவஸ்தை என உணர்ந்தேன் எனக் கூறல்.

100. அடியேனை தடுத்தாட்கொண்டருளிய சுவாமியே, ஈசுவரன் என்று கூறும் வஸ்து விளங்குகின்ற துரிய அவஸ்தையினையே, வேத முடி வாகிய உபநிஷத்துக்கள் கூறும் அசி என்னும் பதத்திற்கு அர்த்த மாகிய (சிவனது) ஜாக்கிர அவஸ்தை என்று உணர்ந்தேன். எனக் கூறல்.

101. பூர்வம் பொருந்தியிருந்த ஜகத்தின் சம்ஸ்காரம் ஆகிய தோஷங்கள் நீங்கி, எல்லாத் திரிசியப் பொருளையும் திருக் மாத்திரம் ஆக உணர்ந்த அவஸ்தையினை, (சிவனுடைய) ஸ்வப்ந அவஸ்தை என்று உணர்ந்தேன் எனக் கூறல்.

102. திரிசிய வஸ்துக்கள் எல்லாவற்றையும், திருக் ரூபமாக உணர்ந்து, அந்தத் திருக் ரூபத் தன்மையும் நீங்கிய

பெருமை பொருந்திய, (வாக்கினாலும் மனத்தினாலும்) அறியக்கூடாத வஸ்து விளங்கும் அவஸ்தையினை, (சிவனது) சுழுத்தி அவஸ்தை யாக உணர்ந்தேன் எனக் கூறல்.

103. அடைதற்கரிய தவத்தினை உடைய ஸ்வாமிகளே! வேதங்களின் முடிவாகிய (மனத்தாலும் வாக்காலும் உணர ஒண்ணாத வஸ்து விளங்கும் அவஸ்தை யாகிய) சிவனது துரிய அவஸ்தையில், தேவரீர் வீற்றிருந்தருளிய விதத்தையும், (அடியேனுக்கு உபதேசிக்காமல்) உபதேசித்த விதத்தையும் எப்படிக் கூறுவேன். எனக் கூறல்.

104. திருக் கூட்டத் தலைவ ராகிய எம் சுவாமிகளே! (தாங்கள்) ஜீவ ஜாக்கிர அவஸ்தை முதல், சிவ துரிய அவஸ்தை பரியந்த மாக உள்ள, த்வாதச (பன்னிரண்டு) அவஸ்தைகள் தோறும், அந்த அந்த அவஸ்தா ரூபம் ஆகியும், அந்த அந்த அவஸ்தா விஷயமாயும் இருந்து, (தேவரீர்) நிர்த்தனம் செய்த விதத்தினைக் கூறும் வழியை உணராதவனாக இருக்கின்றேன் எனக் கூறல்.

105. (எனது) பிராண ரூப மாகிய ஸ்வாமிகளே! தேவரீருக்கு அடிமை யாகிய யான் செய்கின்ற பிரதிப்பிரயோசனம் என்னை என்று கேட்பீர் ஆகில், பாவி யாகிய அடியேனுடைய தாக இருந்த, உடல் பொருள் ஆவி மூன்றும், தேவரீரைச் சரணாகதி யாக அடைந்த காலத்திலேயே, தேவரீ ருடையதாகிவிட்டன, எனக் கூறல்.

106. (ஆனால்) அடியேனது சரீரம் இருக்கும் வரையும், தேவரீரது (முற் சரண் புகுந்த) அடியவர்கட்கு, விருப்புற்று (அவர் ஏவும்) பணிவிடைகளை இயற்றி வருவதே அல்லாமல், வேறு ஒரு உபாயத்தினையும் யான் அறிந்திலேன். எனக் கூறல்.

107. தேவரீருக்கு நல்ல பணிவிடைகளைச் செய்யும்படி (எனக்கு) கிடைக்கின், நாசம் இன்றிய தான உயர்வினை உடைய மோக்ஷத்தினையும் அடைய விரும்பேன், எப்பொழுதும் பிறப்பினையே விரும்புவேன். எனக் கூறல்.

108. அபக்குவ ஞாகிய அடியேனை (பக்குவனாகிய) அதிகாரி என்று உணர்ந்து அநேக பிரகாரமாக உபதேசித்தனர் (எனக் கருதி) சசிவர்ணன் பக்தியோடு கூட மநம் (அநலில் காட்டிய மெழுகும் கல் என்று கழறும் ஆறு) நெகிழ்ச்சி உற்று, பன் முறை (பிரதக்ஷிணம் செய்து) நமஸ்கரித்தனன். எழுந்து நின்றனன். (சந்நிதியின் முன்) நின்று, (கையால் தொழுது வாக்கால்) தோத்திரம் செய்தனன். ஆநந்தக் கண்ணீர் விட்டனன். எனக் கூறல்.

109. சாஸ்திரத்தில் உண்டாம் (பரோக்ஷ) ஞாநம் இல்லாமலும், பிரஹ்மத்தினது (அபரோக்ஷ) ஞாநம் இல்லாமலும், இந்தச் சரீரத்தோடு கூடவே (அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப) மோக்ஷத்தில் இருக்கின்ற சசிவர்ணனை, (இந்தத் தூல சரீரம் நீங்கிய) பின், மோக்ஷத்தினை அடைவான் என்று (யாம்) கூறேம். எனக் கூறல்.

110. சசிவர்ணன் செய்த பாப கர்மத்தின் சாமர்த்தியத்தால், (கொடிதாகிய) நரகத்தில் வீழ்ந்த தென்புலத்தார்கள், அந்த நரகம் சூநிய மாகப் போகும்படி, உயர்வு பொருந்திய (சசிவர்ணன் அடைந்த அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார) ஞாநத்தின் சாமர்த்தியத்தினால், தேவேந்திரர் முதலியோர்க ளிருக்கும் ஸ்வர்க்க லோகம், சத்ய லோகம், முதலிய லோகங்களை யாவரும் அடைந்தனர். எனக் கூறல்.

111. இந்தச் சசிவர்ந ஞுடைய பணிவிடைகளை (பார்த்து) தேவர்களும், மநிதர்களும், ஆச்சரியத்தினை அடைந்து கூறக்கூடியதோ, (பிரஹ்மா விஷ்ணு ருத்திரன்) என்னும் மும் மூர்த்திகளும் கிரீடத்தோடு கூடவே (அவ னது பாதங்களில் வீழ்ந்து, அஷ்டாங்க, பஞ்சாங்க, திரி அங்க, சிர அங்க, நமஸ்காரங்களைச் செய்து, அந்தச் சசிவர்ந னுக்குப் பணிவிடைகளைச் செய்வதற்கு (ஒருவருக் கொரு வர்) முந்துவார்கள் எனக் கூறல்.

112. உலகத்தில் உள்ளார் (யாவரும்) மோக்ஷத்தினை அடைதற் பொருட்டு, (சர்வஞ்ஞத் வாதி கல்யாண குணங் களை உடைய காரணப் பிரஹ்ம மாகிய) சிவன், கிருபை யினுல், திவ்ய மங்கள மாநுஷ அநுக்கிரக லீலா விக்கிர கத்தினைத் தரித்துக்கொண்டு, பரிபூரணப் பிரஹ்ம ரூபத் தினை கொடுத்ததற்கு, எழுந்தருளி வருவன் என, உபநிஷத் துக்கள் கூறுகின்றன. (அதனுல்) பிரஹ்மம் உணர்ந்த பெரியோரை, மநிதன் என்றும், தேவன் என்றும், கூருது, (பிரஹ்மமே என அறிந்து) விடுக எனக் கூறல்.

*சசிவர்ந போத செய்யுட் கிரம விஷய*

*அட்டவணை முற்றுப் பெற்றது.*

*முதலில் தோத்திரச் செயயுள் 2. நூல் செய்யுள் 110*

*ஆக்க கஷி 112.*

---

# மோக வதைப் பரணியி லுள்ள சசி வந்ந போதம்.

## அவதாரிகை.

தான் செய்யப் புகுந்த நூல் இனிது நிறைவேறும் பொருட்டும், கற்போர் விக்கிநம் இன்றி இனிது கற்கும் பொருட்டும், இப் பாவாலும், அடுத்த பாவாலும், சேரச் சகுண நிர்க்குண ரூப வஸ்து நமஸ்கார மங்கலத்தினைச் செய்கின்றார்.

1 *மதிபருதி யெரிநீர்கால் வானவனி*
*யியமாநன் வடிவா யெல்லா,*
*அதிபதியா யனைத்துமா யல்லாத*
*வறிவுருவை யகத்துள் வைப்பாம்.*

(இ – ள்)

மதி— (சோடச கலைகளை யுடைய) சந்திர னும்,
பருதி— (சகஸ்ர கிரணங்களை யுடைய) சூரிய னும்,
எரி— (உஷ்ண ஸ்வபாவ முடைய) அக்கி யாயும்,
நீர்— (சீதள ஸ்வபாவ முடைய) ஜல மாயும்,
கால்— (சலந ஸ்வபாவ முடைய) வாயு வாயும்,
வான்— (இடங் கொடுத்தல் ஸ்வபாவ முடைய) ஆகாய மாயும்,
அவனி— (யாவரையும் தாங்குஞ் சுபாவ முடைய) பிருதிவி யாயும்,
இயமாநன்— (சேதந ரூப மான) ஜீவனு மாகிய இவற்றின்,
வடிவு— ஸ்வரூபம்,
ஆய்— (அஷ்ட மங்கள மூர்த்தம்) ஆகியும்,
எல்லா— சர்வத்திற்கும்,
அதிபதி ஆய்– (அதிஷ்டாந ரூப) மாயும்,
அனைத்தும் ஆய் (வியவகார தசைக்கண்) சர்வாத்மக மாயும்,

அல்லாத— (இவ் வாறு பாரமார்த்திக தசைக்கண் மேற் கூறியன வொன்றும்) அல்லாத தாயும் (இருக்கின்ற).

அறிவு உருவை- சேதந ஸ்வரூபத்தை,

அகத்துள்— மநத்தின்கண்,

வைப்பாம்— (யாம்) வைத்துத் தியாநிப்பாம், (வாக்கால் துதிப்பாம், காயத்தால் வணங்குவாம்) எ-று.

"சசிவந்த போதம்" என்பது, சந்திரன் போன்ற வெண் ணிறம் கொண்ட ஒருவனது ஞாநத்தைத் தெரிவிக் கும் நூல். அதாவது, அவனடைந்த ஞாநத்தைத் தெரிவிக்கு நூ லென உணர்த்துவதாய், ஆறும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை யாகு பெய ராக இந் நூற் கமைந் துள்ளது.

சசி – சந்திரன் (போன்ற), வந்த – (வெண்) ணிற முடையவன் அடைந்த, போதம் – (அப் பிரதிபந்த அப ரோக்ஷ சாக்ஷாத்கார) ஞாநம்.

இறைவன் அஷ்ட மங்கள மூர்த்தி யாக வுள்ளான் என்பது விளங்க, "நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான், உலகேழ் எனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடா மோ." (தோள் நோக்கம் 5) என மாணிக்க வாசக சுவாமி களும் தமது திரு வாசகத்தில் கூறியிருத்தலையும் உணர்க.

[இதுவு மது]

2 *சொல்லாற்றம் மதிவிரகாற் றாயதித்*
*தியதித் தென்னு மாக்கள்,*
*எல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும்*
*படியேயா யிருக்க வென்றே.*

## பதார்த்த பாஸ்கரன் உரை.

(இ - ள்)

சொல்லால்— ( சுருதி ஸ்மிருதி புராணம் (தொல்லோர்களுடைய) நல் லுரைகளினுலும்,
தம்— தம் முடைய,
மதி— புத்தியினது,
விரகால்— (யுக்தி யாகிய) சாமர்த்தியத்தினுலும்,
இது — (யாம் கூறும்) இம் மார்க்க மானது,
தூயது— பரிசுத்த முடையது,
இது— (ஏனையோர் கூறும்) இம் மார்க்கமானது,
தீயது— பரிசுத்தம் இல்லாதது,
என்னும்— என்று கூறுகின்ற,
மாக்கள்— மனிதர்கள்,
எல்லார்க்கும்— யாவர்க்கும்,
அது அது ஆய்— அந்த அந்த மார்க்கத்தில் கூறும் அந்த
இறை— பரமேசுவரன், [அந்த தேவதா சொரூப மாய்,
இருக்கும்படியே ஆய்—இருக்கின்ற பிரகார மாக,
இருக்க— (யாமும்) இருக்க வேண்டும்,
என்று— எனக் கருதி (சேதந ஸ்வரூபத்தினை மநத்தின் கண் வைத்து யாம் தியானிப்பாம்) எ-று.

(ஏ - அசை)

இச் செய்யுள் குளகம். “குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்” என்பதனுல், பல பாடல்கள் தொடர்ந்து ஒரு வினை கொண்டு முடிவது ஆகும்.

“சொல்லால்” என்பது, சப்தப் பிரமாணத்தினுல், அதாவது, வேதம் ஸ்மிருதி புராணம் பெரியோர் வாக்

கியங்களால் எனப் பொருள்பட்டு, பரிச்சிந்ந உருவங்களா கிய, கணேசர் சுப்பிரமணியர் சிவன் விஷ்ணு பிரஹ்மா தேவி வீரபத்திரர் லக்ஷ்மி சரஸ்வதி முதலியவற்றையே புருஷார்த் தம் எனக் கூறும் வாக்கியங்களைக் கொண்டு என உணர்க.

"மதி விரகால்" என்பது, யுக்தி சாஸ்திர மாகிய கணாத கௌதமர் இயற்றிய தர்க்க சாஸ்திரம். நியாய சாஸ்திரம் முதலியவற்றைக் கொண்டு. வாத விவாத ரூபமாகக் கூறும் ஆற்றல்கள். ஆய் என்னும் வினை எச்சங்களுள் இறையிருக் கும்படியே யாய் என்பது, ஆக என்னும் பொருள தாக நிற்கின்றது. எல்லாருக்கு மிறைவன் அவிரோத மாக இருப் பது போன்று, யாமும் அவிரோத மாக இருக்கவேண்டு மென்று வேண்டி, சகுண நிர்க்குண வடிவப் பொருளை அகத்துள் வைப்பாம் என்பது கருத்து. 2

[அ. கை.]

பாபிகளும் மோக்ஷம் அடைவார்கள் என்கிறார்.

2 *அலகை யச்சம றவக வான்களும்,*
*உலகின் முத்திபெ றும்பரி சோதுவாம்.*

(இ — ள்)

அலகை— (முமுட்சு வாகிய) பசாசுகளே,
அச்சம்— (உமக் குண்டா யுள்ள) பயத்தினை விட்டு,
அற— நீங்குவீராக,
அகவான்களும்—பாபிகளும்,
உலகில்— பூலோகத்தில்,
முத்தி— (அநர்த்த நிவிர்த்தி, யாநந்தப் பிராப்தி ரூப மான) மோக்ஷத்தினை,
பெறும்— அடைந்த,

பரிசு— தன்மையினை,
ஓதுவாம்— (உமக்கு யாம்) கூறுவாம். எ-று.

"அகவான்களும்" என்ற உம்மை, இழிவு சிறப்பு ம்மை. அலகை என்பது. சாதி யொருமை யாக நின்று, பேய் களை புணர்த்துகின்றது; "விலங்கொடு" (திருக் குறள் 41. கல்லாமை. 10.) என்பது போல, அது விளியாக நின் றது. 'அற' என்பது அறு என்ப தடி யாகப் பிறந்த வியங் கோள் வினை முற்று. 'அ' என்பது வியங்கோள் விகுதி யாகும். அற-அறுக. என்னும் பொருள் பயந்து நின்ற தென்க.

"அச்ச மற" என்பதற்கு சம்சார சாகரத்தை யெப் படிக் கடந்து முத்தி யடைவோ மென உங்களுக் குண் டான அச்ச மானது நீங்குவதற்கு எனப் பொரு ளுரைப் பாரு முளர். 1

பாபம் நீங்கினு லன்றோ சித்த சுத்தி மூல மாகத் தத் துவ ஞானம் பெற்று மோட்ச மடையலாம்

[பாவம் எதனுல் நீங்கும் எனில் கூறுகின்றார்.]

2 புணர்ந்த பாவமெ லாம்பரி பூரணம்,
உணர்ந்த ஞானிவி ழிபட வோடுமே.

(இ - ள்)

புணர்ந்த— (ஜந்மாந்தரங்களில்) பொருந்திய,
பாவம்— பாவங்கள்,
எலாம்— யாவும்;
பரிபூரணம்— (யாண்டும்) நிறைந்திருக்கின்ற பிரஹ்மத்தினை,
உணர்ந்த— (திடாபரோக்ஷ ஞானத்தால்) அறிந்திருக்கின்ற,

ஞாநி— ஞாநியினது,
விழி— (கிருபா) நேத்திர மானது,
பட— (அவர்கண்மீது) தங்க,
ஓடும்— (பஞ்சுப் பொதியில் நெருப்புப் பற்றியது போன்று விரைவில்) கெடும். எ-று.

(ஏ — அசை)

ஞாநி விழிபடப் பாவம் போம் என்பதற் குதாரணம்:

வாதவூரர் புராணம், "விரிந்த சஞ்சித வினைகளன் புடனும் விழிக்க வெந்தது விரும்பிமுற் சநநம், புரிந்த வல்வினை யுடலுட னகலும் புந்தி சேரருள் வல்வினை போக்கும், அருந்தும் அப்பொருள் உயிருடம் புனதே யல்ல நம்மன வாகுமிங் குனைப்போல், இருந்த நம்பெரு வடிவைநின் கருத்துள் இருத்து வாய்பொருள் இதுவென வுரைத்தான்." என்பதாம்.

*வராக உபநிஷத் 4-வது அத்தியாயம்.* "यस्यानुभव पर्यन्ता बुद्धिस्तत्त्वे प्रवर्तते । तदृष्टि गोचराः सर्वे मुच्यन्ते सर्व पातकैः ॥ ४३ ॥ खेचरा भूचराः सर्वे ब्रह्मविद्दृष्टि गोचराः । सद्य एव विमुच्यन्ते कोटिजन्मार्जितैरघैः ॥ ४४ ॥

"எவனுக்கு தத்துவத்தில் அநுபவ பரியந்த மான புத்தி உண்டாகின்றதோ, அவனது திருஷ்டியில் பட்ட யாவரும் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகின்றனர். (43). பிரஹ்ம வித் திருஷ்டியில் பட்ட பூ லோக சஞ்சாரி, ஆகாய சஞ்சாரி யாகிய யாவரும் கோடி ஜந்மங்களில் சம்பாதிக்கப்பட்ட பாபங்களி னின்றும் அப் பொழுதே விடுபடுகின்றனர்." 44 என்க.

[விழியால் நோக்கிய மட்டில் பாபங்களைப் போக்கவல்ல ஞானியினிடத்து யாது மகிமை யுள தெனிற் கூறுகின்றார்.]

3 எழிலாரு ஞானி புகழென்னை கூற
வுயர்வீடு வன்சொல் வழிசெய்,
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்று சொலவே.

(இ - ள்)

இவன்— இந்த ஞானி யானவன்,
சொல் வழி— கூறுகின்ற பிரகாரம்,
செய்— (ஆப்தம் அங்கம் ஸ்தானம் சத்பாவம் என்னும் சதுர் வித பணிவிடைகளையும்) செய்கின்ற,
தொழிலாளர்- மாணாக்கர்களால்,
சேர்கை— அடையப்படுவது,
உயர்— (சச்சிதானந்த வடிவப்) பெருமை பொருந்திய,
வீடு— மோக்ஷ மாம்,
எழில்— (ஆகலின், மைத்திரியாதி) சோலைகள்,
ஆரும்— பொருந்தியிருக்கின்ற,
ஞானி— ஞானியினது,
புகழ்— பெருமையினை,
என்னை— எவ் வாறு,
கூற— சொல்வதாம் (சொல்லொணா தென்பது கருத்தாம்.)

[அப்படிச் சிஷ்யன் மோக்ஷ மடைந்ததைத் தெரிவிக்கும் இதிகாசம் உளதோ வெனில் கூறுகின்றார்]

முன்னை— பூர்வம்,
இதிகாசம்— (மோட்ச மடைந்த) கதை,

ஒன்று — ஒன்றை,
சொல— (யாம்) கூற,
அது— அதனை,
கேள்— (நீ ஏகாக்கிர சித்தத்தோடு) கேட்பாயாக

எ-று.

(ஏ - அசை)

'சேர்கை' என்பதில், 'ஐ' செயப்படு பொருளுணர்த்தும் விகுதி. 'ஞானி புகழ்' என்பதற்கு, உதாரணம், ஞானாமிருதம், "ஞால முண்டவன் றலைமிசை சுமப்பன்மெஞ் ஞானிவேண் டுவவெல்லாம், ஆலம் உண்டவன் அவன்பினே திரிகுவன் அவனடித் துகட்கன்றே, சில மன்னரு மற்றுள தேவருந் திசைதிசை பணிந்தேத்தக், காலி ரண்டையுந் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்" என்பதனுல் உணர்க.

'புகழ்' என்ப தீண்டுப் பெருமையை யுணர்த்துகின்றது. 'இவன்' என்பதும், 'ஞானி' என்பதும், சாதியொருமை வாசகங்கள். இவன் என்பதும், அவன் என்னும் பொருட்டாய் நின்றது அன்றி, அண்மைக்கண் கூறப்படும் "பரிபூரணம் உணர்ந்த ஞானி" என்னும் ஞானியைச் சுட்டுதலால், 'இவன்' என்றார் எனினு மாம். எவன் என்னும் வினுப் பெயர், என்னை எனத் திரிந்து, எப்படி என்னும் பொருளைக் குறித்து நின்றது. 'கூற' என்பது, 'இயலும்' என்னும் சொல்லெச்சத்தை அளாவி நிற்கின்றது. என்னை கூற — எவ் வாறு கூற இயலும் எனப் பொருள் கொள்க. ஞானி புகழ் அளவிடப்படாததும், உயர்வுடையது மாகும், ஆதலால், கூறுவதற் கியலாத தாம் என்ப தாம்.

[இவ் விதிகர்சம் யாருக்கு யார் கூறிய தெனில் கூறுகின்றார்]

4 தந்தாப மற்றப ரனேவல் செய்த
வவனுற்ற பேறு தனைமுன்,
செந்தாம ரைக்கண்மு தல்வர்க்கெ மண்ணறி
ருவாய்ம லர்ந்த திதுவே.

(இ-ள்.) மேற் கூறிய இதிகாசம், தாபம் - (அத்தியாத்மம் ஆதிபௌதிகம் ஆதிதைவீகம் என்கின்ற தாபத் திரயங்களும், அற்ற-நீங்கியுள்ள, பரன்-ஞானிக்கு, ஏவல் - (சதுர்விதப்) பணிவிடைகளையும், செய்த அவன்-இயற்றிய மாணுக்கன், உற்ற-அடைந்த, பேறுதனை-பிரயோஜநத்தினை, முன்-பூர்வ காலத்தில், செம்-சிவந்த, தாமரை-கமலம் (போன்ற), கண்-கண்களை யுடைய, முதல்வர்க்கு- (புருஷோத்தம ராய) பகவானுக்கு, எம்-எங்க ளிறைவ னுகிய, அண்ணல் (பெருமையிற் சிறந்த) பரமசிவன், திரு வாய் மலர்ந்தது-திரு வாக்கினுற் கூறியதாம் எ-று.

தன், ஏ, தம் - அசை நிலையின.

'செய்த அவன்' செய்த என்னும் பெயர் எச்சம், அவன் என்னும் பெயர் கொண்டு முடிந்தது. ஞானிக்குத் தாபத்திரயங்களும் இல்லை என்பதற்கு உதாரணம்,

(திருமந்திரம்) "ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை, ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று, ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவால், ஞானத்தின் மிக்கார் நரரின் மிக் காரே." என்று ஞானி மநிதரில் சிரேஷ்டன் எனக் கூறுகின்றது.

'தந் தாபம்' என்பதற்கு, அஞ்ஞான காலத்தில் நம்பாலுற்ற தாபங்கள் எனப் பொருள் கூறலுமாம். "தம்" என்

பது உயர்த்தக்கண் வந்த பன்மை வாசக மாகும். மக்களிற் சிறந்தான் ஞாநி யாதலின், 'பரன்' என வழங்கினர். கூறு பவள் காளி யாதலின், தமைய னுகிய திருமாலை செந் தாம ரைக் கண் முதல்வர் எனவும், நாயக னுகிய சிவனை எம் மண்ணல் எனவும், சிவ பெருமானுக்குச் சத்திகள் பல ராத லின், "எம்" எனப் பன்மை யாக்கியும் கூறினுர். இனிச் செந் தாமரைக் கண்ணுடைய இந்திரனைக் குறியாதிருக்க, "செந் தாமரைக் கண்ணர்" என்னுது, திரு மாலைக் குறிக்க, "செந் தாமரைக்கண் முதல்வர்" என்ருர் என் றக்கருத்துப் பட வுரை யெழுதின மென்க. அக் கருத்தும் பொருந்து கின்றது.

தாபம் – அத் யாத்மம், ஆதி பௌதிகம், ஆதி தெய்வீ கம் என மூன்ரும். இம் மூன்றும் தூல சரீரத்துக்கு வரும் தாபமாம்.

அத்யாத்மம்–தூல தேகம். (வியாதி பசி) அதி பூத சம் பந்தம் ஆதி பௌதிகம், பாம்பு முதலியன, தூல தேகத் திற்கே. அதி தெய்வ சம்பந்தம்–ஆதி தெய்வீகமாம். கட்டி டம் விழுதல். தூல தேகத்திற்கே.

இம் மூவித துக்கமும், ஞாநிக்கு ஞாநம் வந்தபோதே, தேகத்திரய விலக்ஷண சொருபமாக விளங்கலின் இன்ரும். தாபம் மூன்று என்பது, கை வல்ய நவ நீதம் 1வது படலம் 5 கவி.

"இவனதி காரி யானேன் இந்திரி யங்க ளாலும், புவந தெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும், தவநம்மூன் றடைந்து" என்பதனுனும், வேதாந்த சூடாமணி.

"முத்தாப நெருப்பினுல் வெந்து" என்பத னுனும் பகவற் கீதை 8-வது அத்தியாயம் 4-வது சுலோகம் அதி

பூதம் க்ஷரோ பாவ: என்றதனுலும் உணர்க. அத்யாத்ம துக்கம் சூக்ஷ்ம சரீரத்துக்கும் வரும்.

"தேகத்திரய விலக்ஷண:", "தாபத்திரய விநிர் முக்த" என்று பிரஹ்ம ஞாநாவலீ என்னும் நூல் ஞாநிக்குத் தாபத் திரயமும் இல்லை என்று கூறுகின்றது. 4

[அஃதியா ரடைந்த இதிகாச மாமாலோ வெனிற் கூறுகின்றார்]

5 உவமிப்பின் ஞாநிவி ழிபட்டு முன்னே
வினை விட்டு முத்தி யுலகிற்,
றவமற்ற வெய்யவி னையேபு ரிந்த
சசிவர்ந னெய்து கதையே.

(இ ள்.) உவமிப்பு இல் - (ஒருவாற்றானும்.) உவமை கூறுதற் கில்லாத, ஞாநி - (பிரஹ்ம) ஞாநியினது, விழி - (கிருபா) வீக்ஷண்யம், பட்டு - தங்கி, முன்னை-(அக்காரணத் தினுல்) பூர்வம் செய் துள்ள, வினை - (பாவ) கர்மங்கள் (யாவும்), விட்டு-நீங்கி, உலகில்-பூமியின்கண், தவம்-புண் ணியம், அற்ற-இன்றிய, வெய்ய-கொடிய, வினையே-(பாப) கர்மத்தினையே, புரிந்த - செய்த, சசி வர்நன் - சசி வர்நன், முத்தி - (பிரஹ்ம ரூப) மோக்ஷத்தினை, எய்து - அடைந்த, கதை-கதையாம் எ-று. (ஏ - அசை)

"உவமிப்பில் ஞாநி" என்றதற்கு உதாரணம் :—
(பிரஹ்ம கீதை) "ஈசனு ஞாநி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத், தேசிகன் ஏவல் செய்பவன் கால்என் சென்னியில் இருப்பது மன்னி, மாசிலாப் பரம ஞாநியா முநிக்கு மகேசனும் ஒப்பலன் மதிக்கில், ஆசிலா அரியும் ஒப்பலன் நானும் ஒப்பலன் ஏவர்ஒப் பாரே." (4–59)
என்பதாம்.

உலகில் தவமற்ற வெய்ய வினையே புரிந்த சசிவர்ணன் உவமிப்பில் ஞானிவிழி பட்டு முன்னை வினைவிட்டு, முத்தி யெய்து கதை எனக் கூட்டிப் பொருள் காண்க. முன்னை வினை யென்பது, ஞானி விழிபடு முன்னாக அடைந்த பிறவி யில், ஈட்டப்பட்டு நின்ற வினையும், முற்பிறப்பில் ஈட்டிய வினையும், வினையால் ஏற்பட்ட வாசனையுங் குறிக்க நின்றது. ஆற்றலால் வினை யென்பது பாப வினையை யுணர நிற்கின் றது. 5

[சசி வர்ணன் செய்த பாபம் யா தெனிற் கூறுகின்றார்.]

**6 ஏமம் புடிவா ருளபா தகரா**
**மியாவர்க் குளுமிக் கவனா குமிவ,**
**ஞமம் புகல்வார் குலமும் மெரிவாய்**
**நரகம் புகுமா றுநடந் தனனே.**

(இ ள்.) ஏமம்-நரகத்தை, புகுவார்-அடைபவர்களாக, உள - உள்ள, பாதகர்ஆம் - பாவிகளாகிய, யாவர்க்குளும், எல்லாரினும், இவன் இந்தச் சசிவர்ணன், மிக்கவன் ஆகும்- உயர்ந்தவனாவன், [எக் காரணத்தினால் எனிற் கூறுகின்றார்] நாமம்-(இந்தச் சசிவர்ணனது) பெயரை, புகல்வார்-கூறுபவர் களது, குலமும் வம்சத்தாரும், எரி வாய் நரகம்-அக்நி ஜ்வா லிக்கானின்ற நரகத்தினை, புகும் ஆறு-அடையும்படி, நடந் தனன்-(துஷ்ட காரியங்களைச்) செய்து வந்தனன் எ-று.

(ஏ - அசை)

'குலமும்' என்றதில் உள்ள உம்மை, இறந்ததுதழீய எச்சம். நரகம் புகுவாரில் உயர்வுடையோன் என்பதற் குதாரணம், சிதம்பர புராணம். "உலகினிற் பாதக முள்ள வெ லாந்திரண் டோரெனவாங், கலதியர் தங்களில் அக்கிர னாகிய காத்தன்பேர், இலகவு ரைத்தவர் கோத்திரம் யாவு

மெ ரிநர்கின், உலவின் டந்தனன் பாதகர் தங்கட்கு யர்ந்த வனே." என வருதலால் காண்க. ஆக என்பது சொல் லெச் சத்தால் வருவிக்கப்பட்டது. 6

[சசிவங்ந னிழைத்த பாப கர்மத்தின் பலத்தினால், அவன் குலத்தா ரடைந்தது எப் பயனே எனிற் கூறுகின்றார்.]

7 மலமே விய தீ வினையின் வலியான்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்,
குலமே வியதென் புலவா ணர்களுங்
கொடிதா நரகங் குடியே றினரே.

(இ-ள்.) மலம்-குற்றம், மேவிய பொருந்திய, தீ வினை யின்-பாவ கர்மத்தின், வலியால்-சாமர்த்தியத்தினால், மகிழ்-சந்தோஷத்தோடு, உம்பர் பதத்தில் - தேவ பதவியில், இருந்த - வீற்றிருந்த, இவன் - இந்தச் சசிவங்கனது, குலம்-குல சம்பந்தத்தை, மேவிய - அடைந்த, தென் புல வாணர் களும் - பிதுர்க்களும், கொடிது ஆம் - அக்கிப் பொறியை வீசுகின்ற, நரகம்-நரகத்தினை, குடி-காணியாட்சியாக, ஏறி னர்-அடைந்தனர் எ-று. (ஏ - அசை)

"தென்புல வாணர்களும்" என்றதில் உள்ள, உம்மை உயர்வு சிறப்பும்மை. வாழ்நர் - வாணர் என், 'அம்பல வாணர்' என்பது போல மருவிற்று. 'மகிழ் உம்பர் பதம்' என்பதற்கு, மகிழ்ச்சியைத் தரும் தெய்வ லோக பதவி எனப் பொருள் கோடல் சிறந்தது என்க. இங்கு 'மகிழ்நன்' என்னும் தனி மொழியை விரித்துக் கூறும் வழிப் பொருள் படுமாறு போல; "மகிழ் உம்பர் பதம்" என்புழியும் விரித் துப் பொருள் கூறுகின்றது என்க. 7

[ இவன் செய்த பாபத்தினுல் இம்மையி லடைந்த தி து வெனக் கூறுகின்ருர்.]

8 மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயன்மே லொருகா லமுரு,
இகமே வருமென் பதனு லுளநோ
யெல்லா மிவனைச் செறவெய் தினவே.

(இ-ள்.) உள- (வைத்திய சாஸ்திரத்திற் கூறி) உள்ள, நோய்-வியாதிகள், எல்லாம் - நா லாயிரத்து நா னூற்று நாற்பத் தெட்டும், இவனை - இந்தச் சசிவந்நனை, செற - கொல்லும்படி, எய்தின - (வந்து) பொருந்தின, [பாபத்தினுல் ஆயினும், இந்தச் செந்மத்தின்கண்ணே வியாதிகள் வந்து பொருந்தலாமோ எனில், அதற்குக் காரணம் கூறுகின்ருர்.] மிக-அதிக மாக, மேவிய-பொருந்திய, புண்ணிய புண்ணிய, பாவம்-பாவம், எனும் - என்று கூறும், வினையின் - கருமங்களின் பயன்-பிரயோஜநங்க ளாய (சுக துக்கங்கள்), மேல்-பின், ஒரு காலம் - ஒரு ஜந்மத்தினைக் கொடுத்து, உருது-(அதன்கண் வந்து) பொருந்தாது, இகமே - இந்தச் செந்மத்தின்கண்ணே, வரும் - வந்து பொருந்தும், என்பதனுல் - என்று சாஸ்திரங்கள் கூறுவதனுல் (என் றுணர்க.) எ-று.

(ஏ - அசை)

ஈண்டு மேல் (பின்) என்றது, பின் வருங் காலப் பொதுமையை யுணர நின்றது. ஒரு காலம் என்றது பயனை யநுபவிக்க வரும் பிறப்பின் காலத்தை யுணர நின்றது. (ஆத்மபோதோதயம்), "இப்பவ மதனி லீட்டு மிருவினைப் பயனளித்தல், எப்பவத் தென்னு மைய மிதயமே யெண்ண னன்ரே, ஒப்புற விரை தெ ளித்தா லுடன் பல னளித்தல் போல, இப்பவ மீட்டும் பாவ மிம்மையே யளிக்கு மன்றே" எனக்

கூறுவதால், "மிகமேவிய வினையின் பய னிகமே வரு" மென்றல் வலியுறல் காண்க. 8

[இவன் பிதா யாது செய்தனர் எனிற் கூறுகின்றார்.]

9 தன்புத் திரனே யம்விடா மையினுற்
றவருற் றவிவற் பெறுதந் தையுளந்,
துன்புற் றினியென் னைகொலோ புதல்வன்
றுயர்தீர் வகையென் றுசுழன் றனனே.

(இ-ள்.) தவறு உற்ற-(இங்ஙனம் வந்த பின் வருணாச்சிரம தருமங்களி னின்றும்) நீங்கியிருக்கின்ற, இவன் — இந்தச் சசிவந்நனை, பெறு - ஈன்ற, தந்தை - பாவயஞ்ஞன், தன் தனது, புத்திரன்—மகன் (என்கின்ற), நேயம் - பிரியத்தினை, விடாமையினால் - விடுதற்கு இயலாமையின், உளம்— மநத்தின்கண், துன்பு—வருத்தத்தினை, உற்று - அடைந்து, இனி - மேல், புதல்வன் - புத்திரனது, துயர்—துக்கத்திற்குக் காரண மான வியாதி, தீர் வகை - நீங்குவதற்கு உபாயம், என்னை கொலோ — எவ் வண்ணமோ (யான் அறியேன்), என்று - என, சுழன்றனன் — வியாகூலத்தை யடைந்தனன் எ-று. (கொல், ஏ - அசை)

"புத்திரன் நேயம் விடாமையினால்" என்பதற்கு உதாரணம் "கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள்மேற் காதல்" என் (நைஷதம்) ப தாம். துயர் — வியாதியினால் ஏற்படும் துன்பம் எனப் பொருள் கூறினும் பொருந்தும். துயருக்குக் காரண மான நோயைத் துய ரென்ற தாகு பெயர். 9

[சாஸ்திரஞ்ஞ ராய பிதா வருந்தியதற்குக் காரணங் கூறுகின்றார்.]

10 ஒன்று லும்வினைத் துயர்துய்ப் பதலால்
ஒழிவிக் குமுபா யமுனக் கிலதே,

என்ரு லும்மறிந் தவனன் புவிடா
திவனேக் கொடுழன் றனனெங் கணுமே.

(இ-ள்.) வினை-(பாப) கர்மங்களிறு லுண்டாம் துயர்-துக்கத்தினே, துய்ப்பது அலால்- அநுபவித்துத் தீரவேண்டுமே அல்லாமல், ஒழிவிக்கும் - (பாபங்களை) நிவிர்த்திக்கும், உபாயம்-மார்க்கம் (பலவற்றுள்), ஒன்ரு லும் - ஒன்ரு லும் கூட, உனக்கு-(பிதாவாகிய) உனக்கு (நீங்கும்படி செய்யுந் தன்மை), இலது - உள வாகாது (உண்டாகாது), என்ரு லும்-என்று (சாஸ்திரங்களும், பெரியோர்களும்) கூறினும், அறிந்தவன் - (சாஸ்திரங்களும் பெரியோர்களும் கூற உணர்ந்த) பாவ யஞ்ஞன், அன்பு-(புத்திர னிடத்துள்ள) விருப்பமானது, விடாது (தன்னை விட்டு) நீங்காமையினுல் இவனே-இந்தச் சசிவந்நனே, கொடு-(கூடையில் வைத்துத் தோளில் தூக்கிக்) கொண்டு, எங்கணும்-எவ்விடங்களிலும், உழன்றனன் - (நிவிர்த்தித்தற் குரிய உபாயத்தைத் தேடிச்) சுற்றி வந்தனன். எ-று. (ஏ, ஏ - அசை நிலையின)

"என்ருலும்" என்பதில் உள்ள உம்மை, அருமை உணர்த்தும் உம்மை ஆகும். ஏன் எனில், 'என்ருலும்' ஏன்பது, என்று நூல்களும், சான்ருேர்களும், கூறுவதை உணர்ந்தும், என்னும் பொருளேத் தருதலின், அஃது உணர்தலின் அருமையை விளக்கல் காண்க.

'ஓதி உணர்ந்தும் பிறர்க் குரைத்தும்" (திருக் குறள் 84-4) என்பது முதலியவற்ருல் வரும் உம்மைகள் போன்றது இது, உயர்வு சிறப் பும்மையில் அடக்க லாம். 'ஒன்ருலும்' என்பதில் உம்மை, முற்றும்மை யாகும். இவன் செய்த பாபங்கள் கொடியனவும், மிக்கனவு மாக இருத்தலால், பாபங்களைப் போக்குதற்கு என விதித்த கழுவாய்கள்

ஒன்றினாலும், (பிராயச் சித்தங்களாலும்) அவை போக்கத் தக்கன அல்ல என்பார், "ஒழிவிக்கும் உபாயம் ஒன்றுலும் உனக்கு இலதே" என்றனர். "நீங்கும்படி செய்யுந் தன்மை" என்ற தொடர் இசை எச்ச மாய் நின்றது. 10

[ஒரு தவசி ஔஷதங் கூறல்.]

11 ஒருமா தவன்மற் றிவன்வே தனைகண்
டொழிவற் றுளவொன் றையுளத் துணரும்,
பரமா கியஞா னிகள்கண் ணுறலே
பரமா அமிழ்தமென் றுபகர்ந் தனனே.

(இ-ள்.) இவன் - இந்தப் பாவயஞ்ஞனது, வேதனை- (சுழன்று திரிதலால் உண்டாகும்) துன்பத்தினை, ஒரு - ஒரு, மா தவன் - பெருந் தவ முடைய மஹான், கண்டு பார்த்து, ஒழிவு அற்று- நீக்கம் இன்றி, உள - உள்ள ஒன்றை-(அத்வைத) பிரஹ்மத்தினை, உளத்து-மநத்தின்கண், உணரும்- (அகம் பிரமாஸ்மி யென்னு மகண்டாகார விருத்தியினால்) அறிந் திருக்கின்ற, பரம் ஆகிய - மே லாகிய, ஞானிகள் - மஹான்களினது, கண்-(கிருபா) வீக்ஷண்யம், உறலே-தங்குதலே, பரம-(அந்த வியாதியை நிவிர்த்திப்பதற்கு) மேலான, அமிழ்தம்-(பூபதி ஔஷதம் போன்ற) மருந் தாம், என்று- என, பகர்ந்தனன்-உபதேசித்தனன் எ-று.

ஏ, மற்று - அசை நிலையின

தேச கால வஸ்து பரிச்சேத மின்றிய தாய்ப் பிரத்திய கபிந்நமா யிலகும் பிரமம் என்பார், "ஒழிவற்றுள ஒன்று" என்றனர். அபரோக்ஷ மாக அறியு வென்பார், "உணரும்" என்றனர். விருத்தி வியாத்தி யன்றிப் பல வியாத்தி யின் றென்பார், "உளத்துணரும்" என்றனர். 11

[அவ் வாருய ஞாநி யாது கொடுப்பர் எங் குள்ளார்
நாமம் யாது எனிற் கூறுகின்ருர்.]

12 தானந் தமிலா ததனைத் தருவான்
சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ்,
மாநந் திபரா யணரென் பவர்நின்
மைந்தற் குறுநோய்க் குமருந் தெனவே.

(இ-ள்.) அந்தம் இலாத – நாசம் இன்றிய. தனை – (பரி பூரண பரமாத்மா வாகிய) தன்னை. தருவான் – (முன் வரு வார்க்கு) கொடுத்தற் பொருட்டு சத்தீச்சுரம் – கோகுலா புரம், என்னும்-என்று கூறும். இடந்தனில்-ஊரில், வாழ்-வசித்துக் கொண்டிருக்கும் மா – பெருமை பொருந்திய, நந்தி பராயணர் – நந்தி பராயண ஸ்வாமிகள், என்பவர் ஏ – என்று கூறும் பெரியாரே நின் – உனது, மைந்தற்கு – புத்திர ஞகிய சசி வர்ணனுக்கு, உறும் – பொருந்தி யிருக்கின்ற, நோய்க்கு-வியாதிக்கு, மருந்து-ஔஷதமாவர், என-என்று, (கூறினன்) எ–று.

தான் என்பது கட்டுரைச் சுவைபட நின்றது. அஃ தசை.
ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

"தருவான்" என்பதில் உள்ள 'வான்' எச்சப் பொருட்டு, உபாதியால் உள வாகும் ஈசத்துவம் சீவத்துவ மழியினும், உண ருரு வாகிய ஆன்மா என்று முளதாதலின், "அந்த மிலாத தனை" என்றனர். ததீசி சிபி முதலாயவர்கள் அழியு முடலை யீந்தது போ லன்றி, அழியாத அத்வைத பரம் பொரு ளாய தன்னையே தர வல்லவன் என்பதாம். 12

[பிதா வாகிய பாவ யஞ்ஞரது கிருத்தியத்தினைக் கூறல்.]

13 முடியா வுபதே சமிதென் றவனு
முநிவன் பதமெய் திமொழிந் தனனிக்,

கொடியான் வெருவா துகுயிற் றியநோய்
கூறற் கரிதா யகொடுந் தொழிலே.

(இ-ள்.) அவனும் – (பின்) பாவ யஞ்ஞனும், இது-தவ சிரேஷ்டர் கூறிய உபதேசம், முடியா உபதேசம் – ஒருவ ராலுங் கூற முடியாத (அருமையான) உபதேச மாகும், என்று-எனக் கருதி, முநிவன்-(சத்தீச்சுரம் சென்று) நந்தி பராயண ஸ்வாமிகளின், பதம்-திரு வடிகளை, எய்தி-அடைந்து, இக் கொடியான்–இந்தப் பாவியான சசிவந்நன், வெருவாது – (பாபத்திற்குப்) பயப்படாது, குயிற்றிய – (பிறர்க்குச்) செய்த, நோய் துன்பச் செயல்கள், கூறற்கு-(தேவரீர் சந்நிதாநத்தில்) அறிவித்தற்கு அரிது ஆய-யோக்கியம் இல்லாத, கொடும்-கெட்ட, தொழில்-செயல்க ளாகும், மொழிந்தனன்-(என்று) விண்ணப்பித்தனன் எ–று.

(ஏ – அசை)

'அவனும்' என்றதில், உள்ள உம்மை, இழிவும், இரக்க முங் குறித்து நின்றது. ஐயோ அவ்வா றன்பினுல் சுழன்ற அவனும் என்ப தாம். 'முடியா' என்ற ஈறு கெட்ட எதிர் மறைப் பெய ரெச்சச் சொல், "அருமையான" என்னும் பொருள் பயந்துநின்றது.

'நோய்' என்பது, நோயை யுளவாக்கும் தீச் செயல்மே னின்ற தாகு பெய ராக. "பறைச்சியை மனைவி யாக்கிப் பாதக ரிணக்கஞ் செய்து" (விருத்தாசல புராணம்) என்பது முதலியவற்ருல், அவன் தீச் செயல் ஒரு வாறு கூறப்பட் டுள்ளது. 13

[பாவ யஞ்ஞன் கூறியதனை யுணர்ந்து, நந்திபராயண ஸ்வாமி கள் கிருபா வீக்ஷணஞ் செய்தனர் எனக் கூறுகின்ருர்.]

14 ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
இவனெய் தியதீ வினையென் னவெலா,

நீங்கும் படிதன் னநுபூ தியிஞ
னிகழும் விழிவைத் தனனின் மலனே,

(இ-ள்.) இவன்-இந்தச் சசிவர்நன், எய்திய-அடைந்த தீ வினை-பாப கர்மங்கள், ஈங்கு-இவ் விடத்து, உன்-தேவரீரது, திரு முன் திருச் சந்நிதானத்தில் பகரும்படியோ-சொல்லும் தகுதி யுடையன வாகுமா (ஆகா). என்ன - என்று (பாவ யஞ்ஞன்) கூறலும், நின்மலன் - பரிசுத்த முடைய ஙந்தி ப்ராயண ஸ்வாமிகள். தன் - தனது, அநுபூதியினுல்- ப்ரஹ்மா நுபவத்தோடு, நிகழும் - விளங்கா நின்ற, விழி - திருஷ்டியை, எலாம்-சர்வ வியாதிகளும், நீங்கும்படி நாசமாம் ஆறு, வைத்தனன் - (சசி வர்நன் மீது) சாத்தினார் என்று. (ஏ - அசை)

பவித்திர மாகிய இவ்விடம் என்பார், "ஈங்கு" என்றனர். சான்றோர்கள் தங்கு மிடத்தில் தீமை சிறிது நிகழாதாதலால், தீமை நிகழாத இவ்விடத்தில் என்பதாம். சதாசார முள்ள தேவரீர் என்பார், "உன்" என்றனர். குற்றமற்றவனே குற்றத்தைப் போக்க வல்லவன் என்பார். "நின்மலன்" என்றனர். "மலம்" என்பது ஈண்டு வினை மலத்துடன் விக்ஷேப ஆவரணங்களையு முணர்த்தி நிற்கின்றது.

மணி மந்திர மௌடதங்கள், நோயைப் போக்கினும் ஒவ் வொரு நோயைப் போக்கு மன்றி, எல்லா நோய்களை யுஞ் சேரப் போக்கமாட்டா, இஞ் ஞானியின் க்ருபா வீக்ஷண யம் எல்லா நோய்களையுஞ் சேரப் போக்க வல்லதாகலின், அவ்வாறு போக வீக்ஷித்தனன் என்பதாம்.

'எய்திய' என்பது, 'செய்த' என்னும் பொருளது. 14

[நந்திபராயண ஸ்வாமிகளின் கிருபா வீக்ஷணத்தினால் சசி வர்ணன் அடைந்த பிரயோஜநத்தையும், பிதா வாகிய பாவ யஞ்ஞரது கிருத்தியத்தினையுங் கூறுகின்றார்.]

15 **கணியா தபவக் கடுவா னதிருக்**
**கண்வைத் தலும்விட் டனகா துகடும்,**
**பிணியா வையுநல் லபிதா விறைதான்**
**பேணிப் பணியென் றுபெயர்ந் தனனே.**

(இ-ள்.) கணியாத - அளவிடுதற் கரிய, பவ-சம்சாரத்தை யொழிப்பதற்கு, கடு - விஷம், ஆன-போன்ற, திருக்கண் - திருக் கிருபா வீக்ஷண்யத்தினை, வைத்தலும் - சாத்தலும், காது - கொல்லும்படி, கடும் - கொல்லுதல் போல வருத்துகின்ற (கொடிய), பிணி-வியாதிகள், யாவையும்—எல்லாம், விட்டன-நீங்கின, நல்ல பிதா - சத் பிதா வாகிய பாவ யஞ்ஞன், இறை - குரு வாகிய நந்திபராயண ஸ்வாமிகளது, தாள் - (திரு வடிகளுக்கு). திரு வடிகளை, பேணி-(விருப்புற்று), ஆத்த முதலிய பணிகளா லுபசரித்து, பணி-நமஸ்காராதி சேவைகளைச் செய் வாயாக, என்று - (அடங்கி நடப்பாயாக), எனக் கூறி, பெயர்ந்தனன் – (அவ்விடம் விட்டுத் தம் மூருக்குச்) சென்றனன் எ—று. (ஏ - அசை)

"வைத்தலும்" என்ற உம்மை, வினை யெச்சப் பொருளது; "**காண்டலு மிதுவே செய்யும்**" என்பது போல்வது.

நந்திபராயண ஸ்வாமிகளை ஆத்த முதலிய பணிகளா லுபசரித்து நல் லடியவ னாக அடங்கி நட என்பார், "**இறை தாள் பேணிப் பணி**" என்றனர். பேணுதல் உபசரித்தல். "**தற் கொண்டார்ப் பேணி**" (திருக் குறள், 6-6) என்புழி அப் பொரு டரல் காண்க. இனி இறையைப் பேணி அவரது திரு வடியை வணங்கி நடப்பாயாக என மாற்றிப் பொரு

ளுரைப்பினு மமையும். இறை பேணி தாள் பணி என மாற்றுக. 15

[ஆசாரியருக்குச் சதுர் விதப் பணிவிடைகளுஞ் செய்தனன் எனக் கூறுகின்றார்.]

16 இடனே முதலா கவுவந் திறையோ
னேவும் பணிசெய் திவனுஞ் சிலநா,
ளுடனே யிவனே திருமே னிதனக்
குரியா னெனவுற் றனனும் பனொடே.

(இ-ள்) இவனும்-இந்தச் சசிவர்ணனும், இறையோன்-நந்திபராயண ஸ்வாமிகட்கு, உவந்து - விருப்பத்தோடு, இடன் முதல் ஆக - ஸ்தாநப் பணி ஆதி யாக, ஏவும் பணி- அங்க சேவை இறுதி யாகக் கூறும் நான்கு பணிவிடைகளை யும், செய்து - இயற்றி, சில நாளுடனே - சொற்ப காலத்தி லேயே, திரு மேனி தனக்கு - நந்திபராயண ஸ்வாமிகளினது திவ்விய சரீரத்தினைப் பாதுகாத்தற்கு, இவனே - இந்தச் சசி வர்ணனே, உரியான்-தகுதியானவன், என-என்று (யாவருங்) கூறு மாறு, உம்பனொடு - உயர்ந்த ஆசாரியரோடு, உற்ற னன் - (தேகச் சாயை போன்று விடாது) பொருந்தி யிருந்த னன் எ-று. (ஏ, ஏ - அசை நிலையின.)

இவனும் என்ற உம்மை இழிவு சிறப்பும்மை. தன் அசை.

ஆத்தம் அங்கம் ஸ்தாநம் சத்பாவம் என வரும் பணிக ளுள், செய்யுட் கேற்ப ஸ்தாநப் பணியை முற் கூறினர். 16

[குரு சேவையினால் நான்கு சாதநங்களும் உண்டாயின எனக் கூறுகின்றார்.]

17 நன்றாய் முனிதாள் வழிபா டதனா
னாநா விதமா னபிறப் பினைவிட்,

டொன்று கியவீ டுணருத் தமர்கட்
குளசா தநநா லுமுதித் தனவே.

(இ-ள்.) முநி-நந்திபராயண ஸ்வாமிகளின், தாள்-திரு வடிகளுக்கு, நன்று ஆய் - மிகவும், வழிபாடதனல்-(சதுர் விதப்) பணிவிடைகளையும் செய்து வந்ததனுல், நாநா விதம் ஆன - எண் பத்து நான்கு நூ ருயிரம் யோநி பேத மான, பிறப்பினை-ஜந்மங்களை, விட்டு-கடந்து, ஒன்று ஆகிய-ஏக ரூப மாகிய, வீடு-மோக்ஷத்தினை, உணர்-அறிகின்ற உத்த மர்கட்கு - முமுக்ஷுக்கட்கு, உள - (உரித் தாய்) உள்ள, சாதநம் நாலும் - நான்கு சாதநங்களும், உதித்தன-(சசிவந்ந னுக்கு) உண்டாயின எ—று.

(ஏ - அசை) நாலும் முற் றும்மை.

"நன்று பெரிது" என்பது தொல் காப்பியம் ஆதலின், நன்று என்பதற்கு மிகவும் என வுரை கூறப்பட்டது. இனி நன் றென்பதற்கு, அவர் விரும்பும்படி ஒழுங்காக என வுரைப்பினும் அமையும். 'ஆக' என்பது 'ஆய்' எனத் திரிந்து நின்றது.

சாதநம் நான்கு, நித்தியாநித்திய வஸ்து விவேக முதலி யன என்பது வெளிப்படை. சச்சிதாநந்தப் பிரம்மமே மோக்ஷ மாதலின், "ஒன்ருகிய வீடு" என்றனர். பஞ்ச கோச முதலிய எல்லாவற்றையும் விட்டவிடத்து நிற்பது பரிபூரண மாகிய பரமாதலின், அது வீடு எனப்பட்ட தென்க. 17

[தன தபிப்பிராயத்தினை ஆசாரியரிடத்து வெளியிடுவதற்காக நமஸ்காரஞ் செய்தனன் என்கின்றார்.]

18 முநிவன் றிருமுன் புளதன் குறைதான்
மொழிவன் சிலவஞ் சலிகுஞ் சியதாய்ப்,

பணிவந் திருகண் கள்பதங் களிலே
பலகால் வலம்வந் துபணிந் தனனே.

(இ-ள்.) முநிவன்-(இவ் வித சாதந பிராப்தியின் அநந்தரம் சசி வர்நன்) நந்திபராயண ஸ்வாமிகளின், திரு முன்பு-திவ்விய சந்நிதாநத்தில், தன் - தனக்கு, உள - உள்ள, சில குறை - சில குறைகளை, மொழிவன் - கூறுதற் பொருட்டு, (சொல்பவனாக), அஞ்சலி-கூப்பிய கைகள், குஞ்சியதாய்-சிரசிலே நிலவ, இரு கண்கள் - இரண்டு நேத்திரங்களிலும், பனி - ஜலம், வந்து-(தாரை தாரை யாக) ஒழுக, பல கால்-பன் முறை, வலம் - பிரதக்ஷிணம், வந்து - செய்து, பதங்களில் - திரு வடிகளில், பணிந்தனன் - வீழ்ந்து நமஸ்கரித்தனன். எ-று. (தான், ஏ, ஏ - அசை நிலையின.)

"மொழிவன்" என்பது எச்சப் பொருட்டு, "வினைமுற் றேவினை யெச்ச மாகலும், குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே." (நன்னூல்) என்பதை நோக்குக.

"கைகள் தலைமே லேற" என்பது போல, "அஞ்சலி குஞ்சிய தாய்" என வழங்கப்பட்டிருக்கிறது. தலைமேல் கூப்பிய கைகளை யுடையவனாக என்னும் பொருடந்து நின்றது. 'வர' என்பது, வந்து எனத் திரிந்தது. 18

[ஆசாரியர் வினவலையும், சிஷ்யன் விண்ணப்பித்தலையுங் கூறுகின்றார்.]

19 அருளே வடிவா கியமா முநிதா
னறியா தவர்போ லவழுங் கலுறும்,
பொருளே தெனமைந் தனடுங் கினனிப்
பொல்லா தபவப் புணரிக் கெனவே.

(இ-ள்.) அருளே - ஜீவகாருண்யம், ஈச்வர பக்தி, பாச வைராக்கியம், பிரஹ்ம ஞாநம் என்னும் நான்குமே, வடிவு

ஆகிய - ஸ்வரூப மாகிய, மா-பெருமை பொருந்திய, முநி - மாந சீலராகிய நந்திபராயண ஸ்வாமிகள், அறியாதவர்போல- (தெரிந்தும்) தெரியாதவர் போல, அழுங்கல் உறும் பொருள்- நீ வருந்துகின்றனை, வருந்துதற்குக் காரண மான பொருள். ஏது-யாது, என-என்று (நந்திபராயண ஸ்வாமிகள்) வினவ லும், மைந்தன் - சசி வர்ணன், இப் பொல்லாத - இக் கொடி தான, பவ - சமுசாரம் ஆகிய, புணரிக்கு- சமுத்திரத்திற்கு, நடுங்கினன்-(யான்) பயந்தேன், என-என்று கூற. எ-று.

(தான், ஏ - அசை)

அழுங்கலுறும் பொருள் ஏது - வருத்தத்தால் தெரிவிக் கும் பொருள் யாது. எந்தப் பொருளைக் குறித்து வருந்து கின்றனை என்பதாம். பவப் புணரிக்கு நடுங்கினன் - எல்லை யின்றிய பிறவி யாகிய கடலைக் கடப்பது எப்படி என்று எண்ணி, கடப்பதற்கு வழி ஒன்று மறியாமையால் நடுங் கினன் என்ப தாம். 19

[வேதம் முதலியவற்றிற் கூறும் சம்சார சமுத்திரத்தினைச் சுருக்க மாகக் கூறுகின்றேம் எனக் கூறுகின்றார்.]

20 வெருவும் பிறவிக் கடல்வித் தரமுன்
வேதா கமகீ தைவிளம் புமதைக்,
குருவுந் தனதன் பன்மாநத் தளவிற்
கொளுமா றுதொகுத் திவைகூ றிடுமே.

(இ-ள்.) வெருவும் - (முமுக்ஷுக்கள்) பயப்படுகின்ற, பிறவி - ஜந்மம் ஆகிய, கடல் - சமுத்திரத்தினது, வித்தரம்- விரிவை, முன்-பூர்வமே, வேத ஆகம கீதை-வேதங்களும், ஆகமங்களும், பகவற் கீதை (முதலியனவும்), விளம்பும்- பிரதிபாதிக்கின்றன, அதை - அவற்றிற் பிரதிபாதிப்பதனை, குருவும் - நந்திபராயண ஸ்வாமிகளும், தனது-தன்னுடைய,

அன்பன் - சசி வந்நனது, மாந்து அளவில் - மாநிற்குத் தகுதி யாக, கொளும் ஆறு-கொள்ளும்படி, தொகுத்து - சங்கிர கித்து, இவை - மேற் கூறுவனவற்றை, கூறிடும் - உபதே சிப்பா ராயினர் எ-று. (ஏ - அசை)

"குருவும்" என்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சம். வேதாகம கீதைகளே யன்றி குருவும் கூறிடும் என்பதாம்.

[ இது 21 முதல், "வெரு வரு கின்ற" என்னும் 25-வது செய்யுள் வரை, தேவர் முதல் தாவரம் ஈருகக் கூறப்பட்ட ஜநநத்தினைச் சமுத்திர மாக வர்ணிக்கத் தொடங்கி, இக் கவியில் ஜலம் சர்ப்பம் மீநம் என்னும் மூன்றும் சம்சார சமுத்திரத்திருக்கின்ற தென்கின்றார்.]

21 மரண பவங் களான புனலை யுடையது
மதியை விழுங்கு காம வரவு பெரியது,
கரண வொழுங்க றுது விடய விரை நுகர்
கணமொ டியங்கு மீந மிகவு முகள்வதே.

(இ ள்.) மரண பவங்கள் ஆன- ஜநந மரணங்களான, புனலை - ஜலத்தினை, உடையது - உடைத்தாயிருக்கின்றது, மதியை - சந்திரன் (போன்ற நல்ல) புத்தியை, விழுங்கு - கவர்கின்ற, காம-பெரிய-அரவது - ஆசை யாகிய, பெரிதா யிருக்கின்ற அரவை யுடையது, ஒழுங்கு அறுது-(தத் தம்) நெறி தவறுது, விடய-(சப்தாதி) விஷயங்க ளாகிய, இரை- ஆகாரத்தினை, நுகர்-புசித்துக் கொண்டு, கணமொடு-கூட்ட மாக, இயங்கும் - நிகழ்கின்ற, கரணம்-இந்திரியங்க ளாகிய, மீநம் மச்சங்கள், மிகவும்-அதிகமாக, உகள்வது - துள்ளித் திரிதலை யுடையது எ-று. (ஏ - அசை)

"மீநம் உகள்வது" என்பது ஜாதி யொருமை.
காமம் என்பது ஆசைக்குப் பெயர்.

காம அரவு பெரியது— ஜன்மக் கடல் காம மாகிய பெரிய பாம்பை யுடையது. இவ் வாறு பொருள் கூறி யமைக. 'பெரியது' என்பதி லுள்ள துவ் விகுதியை அரவு என்ப துடன் பிரித்துக் கூட்டிப் பொருள் கூறினம் காண்க.

இவ் வாறு பொருள் கூருதிருப்பின், 'புனலை யுடையது' என்பதனேடு மாறுபடு மென்க. 21

[சம்சார சமுத்திரத்தில், கெம்பீரம், புலா ஞற்றம், அலை, மகர மச்சம், என்னும் நான்கும் இருக்கின்றன வென்கின்ருர்.]

22 பெருமித மென்று கூறு பெருமை யுடையது
பிணிக ளெனுங்கெ டாத புலவு கமழ்வது,
வருமிட ரின்ப மான திரைகள் பொருவது
மாமெனும் வஞ்ச ராஜ மகர முறைவதே.

(இ—ள்.) பெருமிதம் - கர்வம், என்று - என, கூறு - சொல்லும், பெருமை-கெம்பீரம், உடையது - உடைத்தா யிருக்கின்றது, பிணிகள்-வியாதிகளா லுண்டாகும் நாற்றம், எனும்-என்று கூறும், கெடாத-நீங்காத, புலவு-புலா ஞற்றம். கமழ்வது - நாறப் பெறுவது, வரும்–(கருமாதீனமாக) மாறி மாறி வருகின்ற இடர் இன்பம் ஆன - சுக துக்கங்க ளான, திரைகள்-(ஆண் அலை பெண் அலைக ளாகிய) அலை கள், பொருவது - மோதப் பெறுவது, வஞ்ச - வஞ்சகத் தன்மை யுடைய, மாம்-மாம், எனும்-என்று கூறப்பட்ட, ராஜ மகரம்-மீன்களுக்கு யஜமான ஞகிய மகர மீன், உறைவது-வசித்தற் கிடமா யுள்ளது எ—று. (ஏ - அசை)

'பிணிகள்' என்பது, பிணிகளா லுள்வாகும் நாற்றத் தை யுணர நின்றது. குஷ்டம் குன்மம் முதலியவற்ருல் ஏற்படும் விரணம் கத்தி முதலியவற்ருல் நாற்ற முண்டாதல் காண்க. 22

[அச் சமுத்திரத்தில், ஆமைகள், ஆழம், பார்கள், மலைகள், கிருமிகள், என்னும் ஐந்து வகையும் இருக்கின்றன என்கின்றார்.]

23 அளவி லகந்தை யாமை யபரி மிதமுள
தவாவு நிறைந்த வாழ மறிய வரியது,
களவு நெருங்கு பாரு மலையு முடையது
கலக விடங்கண் மேவு கிருமி நெளிவதே.

(இ-ள்.) அளவில் - அளத்தற் கரிய, அகந்தை-(நான் நான் என் றெழும்) அஹங்கார மாகிய, ஆமை கூர்மங்கள். அபரிமிதம் - எண் ணிறந்தன வாக, உளது- (வசித்தற் கிடமாக) வுள்ளது, நிறைந்த – (தன்க)ணிறைந்த, அவாவு– ஆசையின், ஆழம்- ஆழ மானது, அறிய - தெரிதற்கு, அரியது - இயலாதா யிருக்கப் பெறுவது, களவு - திருடாகிய, நெருங்கு - ஒன் றுக் கொன் று நெருங்கி யுள்ள, பாரும் மலையும் - (விவேக மாகிய கப்ப லுடைக்கும்) திடல்களையும், மலைகளையும், உடையது-உடைத்தாயிருக்கின்றது, கலக - கலக மாகிய, விடங்கள் மேவு - விஷயங்கள் பொருந்திய, கிருமி - பூச்சிகள், நெளிவது - நெளிந்துகொண்டிருக்கப் பெறுவது. எ-று. (ஏ - அசை)

அகங்காரம் பல வென்பது = மூல அகங்காரம் – காரண அகங்காரம் எனவும், காரிய அகங்காரம் தூல அகங்காரம் எனவும் கூறும் இட பேதத்தாலும், விருத்தி பேதத்தாலும் உண்டாவனவற்றை என உணர்க. 23

[அதில், போகம், தீரம், சுழி, வடவாநலம், என்னும் நான்கும் இருக்கின்றன என்கின்றார்.]

24 துகளெனு நன்க லாத நுரைக டருவது
த றவெனு மின்ப மான கரையை விடவகல்,

மகளிரெ னுந்த வாத வலிய சுழியது
மறலியு மஞ்சு கோப வடவை யெரிவதே.

(இ-ள்.) துகள்- (பிறத்தல், இறத்தல், பரவிடையாதல் எச்சில், ஜாதியாகிய) குற்றங்கள், எனும் - என்று கூறும், நன்கு அலாத-தீமையான, நுரைகள்-பேதங்களை, தருவது-உண்டாக்குவது. துறவு-(ஈஷணாத் திரயங்களை விடுதலாகிய) சந்நியாசம், எனும்-என்று கூறும் இன்பம் ஆன - ஆநந்தரூபம் ஆன, கரையை-(கரையாம் அந்தக்) கரையை, விடா-து றவிடாமல் (நீங்கும்படி செய்கின்ற), மகளிர்-பெண்கள், எனும்-என்று கூறும், தவாத-கெடாத, வலிய-சாமர்த்தியம் பொருந்திய, சுழியது - சுழியுடைத்தாயிருக்கின்றது, மறலியும்-எமதர்ம ராஜனையும், அஞ்சு-பயப்படும்படி செய்கின்ற, கோப-கோபமாகிய, வடவை-வடவாநலமானது, எரிவது-ஜ்வலித்துக்கொண்டிருக்கப் பெறுவது எ-று. (ஏ - அசை)

'மறலியும்' என்ற உம்மை உயர்வு சிறப்பு. இன்பத்திற்குக் காரண மான துறவாங் கரையை, 'இன்பமான கரை' யென்றது உபசார வழக்கு.

மகளிராய சுழி சம்சாரக் கடலில் ஒரு காலத்து மில்லா திருத்தல் அரி தாகலின், 'தவாத' எனவும், உலக நீர்க் கடலின் சுழியினின்றும் ஒருவாறு தப்பினும் தப்பலாம் மகளிராய சுழி, "சுந்தர ஞானியர் தீரர் சூரரை யெல்லா மிமைப்பிற் றுரும்பு செய்யுந்" (வாசிட்டம் 1 வை 69) தன்மையதாதலின், ஒரு சிறிதுந் தப்பமுடியாத வன்மையது என்பார், 'வலிய' எனவும், உலகக் கடலிற் சுழி ஏகதேசத்தி லிருப்பது போலன்றி, மகளிர் சுழி, சம்சாரக் கடல் முற்றிலுமிருத்தலின், "அகல் மகளிர்" எனவுங் கூறினார்.

துறவு உயர் உடையது என்பதும், இன்பம் உடையது என்பதும், சாட்டியாயநீய உபநிஷத் 30-31-32-வது மந்திரம்
शतं कुलानां प्रथमं बभूव तथा पराणां त्रिशतं समग्रम् । एते भवन्ति सुकृतस्य लोके येषां कुले संन्यसतीह विद्वान् ॥ ३० ॥ त्रिंशत्परां त्रिंशदपरां त्रिंशच्च परतः परान् । उत्तारयति धर्मिष्ठः परिव्राडिति वै श्रुतिः ॥ ३१ ॥ संन्यस्तमिति यो ब्रूयात्कण्ठस्थप्राणवानपि । तारिताः पितरस्तेन इति वेदानुशासनम् ॥ ३२ ॥
"நூறு குலங்களை முன்னர் உண்டான அவ்வாறே மேல் 300 எல்லாம் புண்ணிய லோகத்தில் இவ்வாறு உண்டாகின்றன. எவரது குலத்தில், ஈண்டு வித்வான் ஈண்டு சந்யாசம் செய்கின்றனர். 30. முன் முப்பது, பின் முப்பது, பின் பின் முப்பது குலங்களை தர்மிட்டன் உத்தாரணம் செய்கின்றான். பரிவிராட் டென்பது சுருதியாம். 31. தொண்டையி லிருக்கும் பிராணன் உடையவனுயினும், சந்யாசம் பண்ணிக் கொண்டேன் என்று எவன் கூறுகின்றானே, அவனால், பிதாத் தாண்டுவிக்கப்பட்டார் என்று வேத அநுசாசநம். 32" எனப் பெருமை கூறுகின்றன. 24

[அதில், நக்கிரம் இருக்கின்றது என்கின்றார்.]

25 வெருவரு கின்ற போக முதலை யுடையது
விவிதம நந்த மான துறையு மறிபவர்,
ஒருவர்க டந்து போக விரகி லெழுபவ
வுததிவி ளம்ப யாவ ருலகி லறிஞரே.

(இ ள்.) வெருவருகின்ற — (முமுக்ஷுக்கள் கண்டு) பயப்படுகின்ற, போகம்-அருந்தல் பொருந்த லாகிய, முதலை-நக்கிரத்தினை, உடையது - உடைத்தாயிருக்கின்றது, [இந்தச் சாகரத்தை, யாவர் கடப்பர் எனில், மார்க்க ஞாந முடை

யோர் கடவார் என்கின்றார்.] விவிதம் – நாநா விதமாயும், அநந்தம் ஆன-அநேக மாயும், உள்ள, துறை-மார்க்கங்களை. அறிபவர் – உணர்பவருள், ஒருவர் உம் – ஒருவருக்கும், கடந்து போக-தாண்டிச் செல்ல, விரகு-சாமர்த்தியம், இல்-இல்லை. [இங்ஙனம் ஒரு வாறு இதனை தொகுத்துக் கூறினோம். எழு வகைச் சம்சார சமுத்திரனைக் கூறிமுடியா தென்கிறார்.] எழு பவ – எழு வகைச் சென்ம மாகிய, உததி - சமுத்திரத் தினையும், விளம்ப – கூறுவதற்கு, உலகில் – பூமியின்கண், அறிஞர் – மஹான்கள், யாவர் ? – யாவர் (இருக்கின்றார்கள் ஒருவரும் இலர் என்பது கருத் தாம்.) எ–று. (ஏ - அசை)

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. வெவ் வேறான பல மார்க்கத்தை, "விவிதம் அநந்தம் ஆன துறை" என்றார். "மரண பவங்களான புனலை யுடையது" என்பது முதல், இது வரை உள்ள செய்யுட்களில், "சமுசார சமுத்திரம் உடையது" "சமுசார சமுத்திரத்தில் இருக்கின்றது" என்று கூறியிருப்பது, "பருவதம் நெருப்புடைத்து", "பருவதத் தில் நெருப் பிருக்கின்றது" என்பது போன் றென உணர்க. "எழு வ உததியும்" என வரவேண்டிய முற் றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. 25

[அந்தச் சாகரத்தைச் சமய வாதச் சழக்கர் கடவா ரெனக் கூறுகின்றார்.]

26 பொறிவழி சென்று மீளும வலம திகொடு
பொருசம யங்க ளாறும றியவி ழுமதில்,
அறிவழி யொன்றி லாதபொ ருளதெ னவுள
வநுபவ வங்க மேறு மறிஞர கல்வரே.

(இ-ள்.) பொறி-இந்திரியங்களினது, வழி-வாயி லாக, சென்று - (பஞ்ச விஷயங்களிற்) சென்று, மீளும் - (மொத்

துண்டு) திரும்புகின்ற. அவல-சவலை, (ப்), மதிகொடு-புத்தியினைக்கொண்டு, பொரு-(தம்மிற்) சண்டையிட்டுக் கொள்ளுகின்ற, சமயுங்கள் - (சைவம் முதலிய) மதங்களை யுடையோர், ஆறும்-அறுவரும், மறிய-மீண்டும், அதில்-சமுசார சமுத்திரத்தில், விழும்-வீழ்ந்து அழுந்துவார்கள்,

[பின் யாவர் கரை ஏறுவர் எனிற் கூறுகின்றார்.]

அறிவு-சிதாகாரப் பிரஹ்மம், அழிவு-நாசம், ஒன்று இலாத-சிறிது மில்லாத, பொருளது-வஸ்துவா யிருக்கின்றது, என-என்று, உள-உள்ள, அநுபவ திட அநுபவ மாகிய, வங்கம்-கப்பலில், ஏறும்-ஏறிச் செல்கின்ற, அறிஞர் மஹான்கள், அகல்வர்-(சமுசார சமுத்திரத்தினை) கடப்பார்கள். எ-று.

ஏ - அசை. பொருளது, 'அது' பகுதிப் பொருள் விகுதி.

"சமயங்கள் ஆறும் விழும்" என்பது, அக் கொள்கையுடையவரை யுணர்த்தலின், தொழி லாகு பெய ராகக் கொள்க. ஆறு சமயங்க ளாவன - சைவம், வைஷ்ணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம், சாக்தேயம் என்னும் அறு சமயத்தவர் கொள்ளும் மதம் அறு சமயம் ஆம். சமயங்கள், என்பதற் கேற்ப, 'விழும்' எனச் செய்யுமென்னு முற்றுக் கொடுத்தனர். தேகாதிப் பிரபஞ்சங்கள் அனைத்தும் தனக்கு அந்நியம் இல்லாமல் ஏக மாக அறிகின்ற அறிவே பர அறி வாகும். அதுவே பிறவிக் கடலைக் கடப்பதற் குரிய சிறந்த வங்கம் ஆகும்.

### பிறவிக் கடல், குறுந் திரட்டு.

சாதல் வாழ்தலெனு மேவியசலத்தை யுளதாய்க்,
கோதை மாதரொடு கோண்முதலை யாக வுளதாய்,
நோத லாகவரு நோய்நுரைய தாக வுளதாய்க்,
காத லாநிலைக லங்கவரு கா லுமுளதாய்.

வுறுமி குத்துவரு கோபவட வங்கி யுளதாய்,
வித்ம ளப்படும்வி ரோதநதி வீழ வுள்தாய்ச்,
சுகமுர றப்படுசு கந்திவலை வீசி யுள்தாய்,
மதமெ னப்படும் காமகரம் வாழ்வ துளதாய்.

திவாவி ரரவிடய சிந்தைதிரை யாக வுள்தாய்த்,
தவாத வாறுதொழின் மேவிவரு சங்க முளதாய்,
அவாவென் யாவரும ளப்பரிய வாழ முளதாய்,
விவாத மாமலையெ றிந்தவொலி விஞ்சி யுளதாய்.

இடும்பை யாமளவி லாதமலை யெங்கு முளதாய்க்,
குடும்ப மாகியவ ரால்கள்பல கூடி யுள்தாய்,
உடம்ப தாகியபு லாலொழிவி லாமை யுள்தாய்,
விடங்கள் சேர்விவித மானவினை மீன முள்தாய்.

அவச மாகவிடு காமமெனு மால முளதாய்,
நவைசெய் போகமெனும் வேகவிள நாக முளதாய்ச்,
சுவைசெய் துண்டுவிடு சுற்றமெனு மட்டை யுளதாய்ப்,
பவம கோத்திப குப்பெவர்ப கர்ந்து முடிவார்.

வெருவாரு மெழிற்பிறவி வேலையில்வீழ்ந் தழியாமே,
திருவாரு முத்தியெனுந் தீரத்தைச் சேர்வுறுதற்,
கொருஞான நாவாய்கொண் டோங்கருளா லேயுய்க்கும்,
குருவாகும் மீகாமற் கூடுநர்க்குக் கூடுமால்.

எனக் கூறுவ திங் குணர்தற்பால தாம். 26

[நந்தி பராயண ஸ்வாமிகள் சசி வங்னனுக்குச் சம்சார சமுத்திரத்தினைத் தாண்டுதற்கு மார்க்கம் இல்லை யென்று கூறுங்கால், "அவன் எவ் வா றிருந்தனன்" என, முமுட்சு வாகிய பிசாசு குரு வாகிய தேவியைக் கேட்க, " பிராணனைத் தியா

கஞ் செய்வான் போற்" காணப்பட்டமையின், அதற்கு மறுமொழி, "மஹான்கள் கடப்பர்" என்னும் உபதேசத்தினைச் செய்தன ரெனக் குரு வாகிய தேவி முமுக்ஷு வாகிய பிசாசுக்குக் கூறினள் எனக் கூறுகின்றார்.]

27 புணரி கடந்து போக விரகி லெனமொழி
பொழுது புலம்பி யாவி புதல்வ னிறுமுனம்,
உணர்வென் னும்வங்க மேறு மறிஞ ரகல்வரென்
றுரையை வழங்கி நாத னுவகை யருளவே.

(இ-ள்.) புணரி – சமுசார சமுத்திரத்தினை, கடந்து – தாண்டி (ச்), போக – செல்ல, விரகு – சாமர்த்தியம், இல்–இல்லை, என-என்று, மொழி பொழுது-உபதேசிக்குங் காலத்தில், புலம்பி - வருத்த முற்று, (அவ் வருத்தத்தால்), புதல்வன் - சசிவர்நன், ஆவி - பிராணன், இறும் - அழிவதற்கு, முனம்-முன்னர், உணர்வு-(அபேத) ஞாநம், எனும்-என்று கூறுகின்ற, வங்கம்-கப்பலில், ஏறும்-ஏறிச் செல்லுகின்ற, அறிஞர்-மஹான்கள், அகல்வர்-கடப்பார்கள், என்ற-என (முன்னர்க் கூறியுள்ள), உரையை-உபதேசத்தினை, நாதன்–நந்திபராயண ஸ்வாமிகள், வழங்கி–உபதேசித்து, உவகை–சந்தோஷத்தினை, அருள-கொடுத்தார்கள். எ-று. (ஏ-அசை)

'அருள' என்பது எச்சம். அடுத்த கவியில் முடிவு பெறும்.

'ஆவி' என்பதைப் பிரித்துக் கூட்டுக.

'சாத்தன் கா லொடியு முன்', என்பது போல, "புதல்வ னாவியிறு முனம்" என்னுந் தொடர் வந்துள்ளது என்க.

"உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறு, மதனொடு சார்த்தி னத்திணை முடியின" என்பதனால், அவ்வாறு முடிந்ததென்க.

[அங்ஙனஞ் செய்த, ஆசாரியரைத் துதித்துச் சம்சார சமுத்
திரத்தினைத் தாண்டும் ஞாநத்தினை வினவினன் எனக்
கூறுகின்றார்.]

28 வாழியென விறைவனடி தொழுதுவரு பவமாம்,
ஆழியினை யகலுமறி வருளுகென வவரே.

(இ-ள்.) இறைவன்-நந்திபராயண ஸ்வாமிகளது, அடி-திரு வடிகளை, வாழி - நீடூழி காலம் வாழக் கடவது, என-என்று கூறி, தொழுது - (சசிவர்நன்) வணங்கி, வரு-(கருமாதீந மாக) வருகின்ற, பவம் ஆம்-சம்சார மாகிய, ஆழியினை-சமுத்திரத்தினை, அகலும்-கடக்கின்ற, அறிவு- ஞாநத்தினை, அருளுக - அநுக்கிரகஞ் செய்க, என - என்று (சசிவர்நன்) விண்ணப்பிக்க, அவர்-நந்திபராயண ஸ்வாமிகள். எ-று.

(ஏ - அசை) "அருளுகென" என்பதில், செய்யுள் விகாரத்தால் அகரம் தொக்கது. "அவர்" என்பதற்கு, "பூசனையும்" என்னுஞ் 38-வது செய்யுளில் உள்ள, "ஏன" என்பதனோடு, அந்நுவயமாம். 28

[ஆசாரியர், ஞாந மாவ திஃதெனக் கூறத் தொடங்கிப் பெரியோர்கள் ஞாநம், அபர ஞாநம், பர ஞாநம், என இருவகை யாக உள்ள தெனக் கூறுவர் என உபதேசஞ் செய்தன ரெனக் கூறுகின்றார்.]

29 பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத்,
திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே.

(இ-ள்.) பர அறிவும் - (வித்தையை) பர வித்தையும், அபர அறிவு உம்-அபர வித்தையும், என-என்று, இரு பரிசா (க) - இரண்டு பிரகார மாக, திர அறிவை - சத்தியமாயுள்ள பிரஹ்மத்தினை, அறியுமவர்-சாக்ஷாத் கரித்திருக்கின்ற

பெரியோர்கள், தெளிவு உற - நன்றாக, மொழிவர் - கூறுவார்கள். எ-று. (ஏ - அசை)

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. 29

[அபர ஞாந, பர ஞாநத்தின் இலக்கணங்களைக் கூறுகின்றார்.]

30 அபரவுணர் வருமறைகண் முதலகில கலையும்,
உபரமம தறவுதவு முணர்வுபர வுணர்வே.

(இ-ள்) அரும் - அரிய, மறைகள் முதல் - (இருக்காதி நான்கு) வேத முதல் (புராணம் வரை யுள்ள), அகில-சகல, கலையும்-சாஸ்திரங்களும், அபர உணர்வு-அபர வித்தையாம், அற-மிகவும், உபரம மது - சித்த விசிராந்தியினை, உதவும்-கொடுக்கின்ற, உணர்வு - ஞாநம், பர உணர்வு-பர வித்தையாம். எ-று. (ஏ - அசை)

"உபரமமது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. "தேர்ந்திடி னபரம் பரமென விரண்டாய்த் திகழ்தரு ஞாநமாங் கவற்றா, லோர்ந்திடு மறையா தியகலை யபர முயிர்பர னெறுவிர வயிக்கங், கூர்ந்துண ருணர்வே பரம்." என்று (25-வது கவி). வைராக்ய தீபத்திலும், "இங்குநா மறிய வேண்டுவ திரண்டு விச்சையவ் விரண்டினு மொன்று, பங்கமா மபரை பரையெனப் படுவ தொன்றதிற் பழமறை நாலு, மங்கமா றுண்மை யமையிதி காச மாதிக ளபரையா மற்ற, தெங்குமாய் நின்ற தொன்றையா தொன்ற லெய்தலா மதுவிறை யருளால்." என்று பிரஹ்ம கீதை (7-3) யிலும், "வேதவே தாங்கமா திகளபர வித்தைபர மார்த்தத் திற்குப், போதமாம் உபநிடதம் பரவித்தை என்றுரைப்பர் புந்தி சான்றோர், ஏதமிலப் பரவித்தை யாற்றுசேர் தியங்களுக்கும் எட்டா தாயும் ஓதவ்விந் தியங்களிலா தர்யுமுறை மெய்ய்

பொருளை யுணர்த லாமால்." சூத சம்ஹிதையிலும் கூறி யிருத்தலைப் பிரமாண மாக உணர்க. வித்தை, ஞானம், உணர்வு என்பன ஒரு பொருட் கிழவி.

तस्मै स होवाच ॥ द्वे विद्ये वेदितव्ये इति ह स्म यद्ब्रह्मविदो वदन्ति परा चैवापरा च ॥ ४ ॥ तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्ववेदः शिक्षा कल्पो व्याकरणम् निरुक्तं छन्दो ज्योतिषमिति ॥ अथ परा यया तदक्षरमधिगम्यते ॥ ५ ॥ यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णमचक्षुःश्रोत्रं तदपाणिपादं नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं तदव्ययं तद्भूतयोनिं परिपश्यन्ति धीराः ॥ ६ ॥

முண்டக உபநிஷதம் முதல் முண்டகம் முதல் கண்டம். "எதனால் பிரஹ்ம வித்துக்கள், பராவும், அபராவும், என இரண்டு வித்தைகள் அறியத் தக்கன என்று கூறுகின்றனரோ, 4. அவற்றுள், அபரை ரிக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வ வேதம், சிக்ஷை கல்ப்பம் வியாகரணம் நிருக்தம் சந்தம் ஜ்யோதிஷம் என ஆம். அதன் பின், பரை, எதனால் அந்த அக்ஷரம் அடையப்படுகின்றதோ, 5. அந்த இது, அத்ரேசியம், அக்கிராகியம், அகோத்ரம், அவர்ணம் அசக்ஷு, அசுரோத்ரம். அது அபாணி பாதம். நித்யம் விபு, சர்வ கதம், நல்ல சூக்ஷமம். அது அவ்யயம், எது பூத யோநி. தீரர்கள் நன்றாகப் பார்க்கின்றனர். 6." எனக் கூறுதலும் உணரத் தக்கது. 30

[அபரஞான பரஞானங்களை யுடையவர் இவ ரெனக் கூறுகின்றார்.]

31 ஆகமவி தங்களறி வாரபர மறிவாரீர்,
யோகமொடு றங்குமவ ரேபரமு ணர்ந்தோர்.

(இ-ள்.) ஆகம-(வேத வேதாங்கங்கள் முதலிய) சாஸ்திர, விதங்கள் - பேதங்களை, அறிவார் - உணர்பவர்கள்,

அபரம் - அபர வித்தையினை, அறிவார் - உணர்பவ ராவர், யோகமொடு - நிதித்தியாசநத்தோடு கூட, உறங்கு மவரே - (பிரஹ்மாநந்த) நித்திரையி லிருக்கும் பெரியோரே, பரம் - பரவித்தையை, உணர்ந்தோர்-அறிந்தோ ராவர். எ-று.

"சின்னஞ் சிறியுார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்,
மன்னும் கலைஞாந மார்க்கம் பராபரமே." (187)

"யோகியர்க்கே ஞாநம் ஒழுங்காம்பேர் அன்பான,
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே." (90)

என்று தாயு மானவர் கூறுவதும் உணரற்பாற்று.

ஆகமங்கள். 28.

காமிகம் 1, சிந்தியம் 2, யோக சம் 3, காரணம் 4, அசிதம் 5, தீப்தம் 6, சூக்ஷமம் 7, சகஸ்ரம் 8, அம்சுமான் 9, சுப்பிர பேதம் 10, விஜயம் 11, சந்திர ஞாநம் 12, ஸ்வாயம் புவம் 13, விமலம் 14, வீரம் 15, விம்பம் 16, புரோத்கீதம் 17, லலிதம் 18, நிசுவாசம் 19, அநலம் 20, ரௌரவம் 21, சித்தம் 22, மகுடம் 23, சந்தாந சர்வோத்தமம் 24, பார மேசுவரம் 25, கிரணம் 26, பேதம் 27, வாதுளம் 28. என் பன வாம்.

இவை மந்திரம் தந்திரம் சித்தாந்தம் எனப் பெயர் பெற்று, ஒவ்வொன்றும் கோடி கோடி கிரந்தங்கள் உள் ளன வாம்.

இவை சிவ பெருமானுக்கு முறையே 1. காமிகம்-பாத மும், 2. சிந்தியம்-பாத விரல்களும், 3. யோக சம்-கணைக் கால்களும், 4. காரணம்-கெண்டைக் கால்களும், 5. அசிதம்-முழந் தாள்களும், 6. தீப்தம் - தொடைகளும், 7. சூக்ஷ மம்-குஹ்யமும், 8. சகஸ்ரம்-கடிதடமும், 9. அம்சுமான்-

முதுகும், 10. சுப்பிரபேதம் - தொப்புழும், 11. விஜயம் - உதரமும், 12. சந்திர ஞாநம்-மார்பும், 13. ஸ்வாயம்புவம்-முலைகளும், 14. விமலம்-கைகளும், 15. வீரம்-கழுத்தும், 16. விம்பம்-திருமுகமும், 17. புரோத்கீதம்-நாவும், 18. லலிதம்-கபோலங்களும், 19. நிசுவாசம் - நாசியும் 20. அநலம்-கண்களும், 21. ரௌரவம்-செவிகளும், 22. சித்தம்-நெற்றியும், 23. மகுடம்-சிரசும், 24. சந்தாந சர்வோத்தமம்-குண்டலங்களும், 25. பாரமேசுவரம்–உபவீதமும், 26. கிரணம்-ரத்நாபரணமும், 27. பேதம்-புடபுாரமும், 28. வாதுளம்-பரிவட்டமும், ஆகும்.

இவை அன்றி, காலோத்தரம் முதலிய உப ஆகமங்கள்-திருமேனிப் பூச்சும் பரிமளத் திரவியங்களும், சைவ சித்தாந்தம்–நைவேத்தியமும், வேதாந்த சித்தாந்தம் எதார்த்த ஸ்வரூபமும் ஆகும் என அறிக. 31

[பரஞாந முதியாவிடத்து அபரஞாநத்தாற் பயனின்றெனக் கூறுகின்றார்.]

32 புராணமிதி காசமெவை யும்பொருளனைத்தின்,
பிராணனறி யாதுளவி டத்திவைபி தற்றே.

(இ-ள்.) புராணம் - (பதினெண்) புராணங்களையும், இதிகாசம் - (ராமாயணம் பாரதம் முதலிய) இதிகாசங்களையும், எவையும்- ஏனையவற்றினையும், அனைத்தின்-(அறிந்தாராயினும்) எல்லாவற்றிற்கும், பிராணன் - பிராண ரூபமாயுள்ள, பொருள்-[பிரஹ்ம மாகிய) வஸ்துவினை, அறியாதுள இடத்து-உணராத காலத்து, இவை–(புராணம் இதிகாசாதி ஞாநம்) யாவும், பிதற்று-(வாய்ப்) புலப்பமே யாம். எ-று.

(ஏ - அசை) புராணம்—புராணம், உப புராணம், உப புராண உப புராணம் என மூ வகையில், ஐம் பத்து நான்

காம். புராணம் 18. 1. பிரஹ்மம் (பத்தாயிரம்) 2. பத்மம் (ஐம் பத் தைந் தாயிரம்) 3 விஷ்ணு 4. சைவம் 5. ஸ்ரீமத் பாகவதம் 6. நாரதீயம் 7. மார்க்கண்டேயம் 8. ஆக்நேயம் 9. பவிஷ்யத் 10. பிரஹ்ம வைவர்த்தம் 11. லிங்கம் 12. வராகம் 13. ஸ்காந்தம் 14. வாமநம் 15. கூர்மம் 16. மத்ஸ்யம் 17. காருடம் 18. பிரஹ்மாண்டம் என்பன ஆம். இந்தப் பதினெண் புராணத்திற்கும், வியாசர் கர்த்தா ஆவர், இவை சர்க்கம் பிரதி சர்க்கம் வம்சம் மன்வந்தரம் வம்சாநுசரிதம் என்னும் பஞ்ச இலக்ஷணத்தையும் வைதிக தருமம், தாந்திரிக தருமம், என்பவற்றையும் கூறும்.

உப புராணம் 18—1. சநத் குமாரம் 2. நாரதீயம் 3. நந்தி 4. துர்வாசம் 5. சிவ தருமம் 6. நாரதீயம் 7. காபிலம் 8. மானவம் 9. ஔசநம் 10. வாசிஷ்டலைங்கம் 11. வாருணம் 12. காளிகம் 13. சாம்பேசம் 14. சௌரபியம் 15. சௌரம் 16. பராசரம் 17. பார்க்கவம் 18. தேவி பாகவதம். இப்பதின் எட்டும் லக்ஷம் கிரந்தங்களை உடையது.

உப புராண உப புராணம் 18 — 1. சுதர்சந புராணம் 2. சூரிய புராணம் 3. பிருஹத் ஸ்வயம்பு புராணம் 4. மகா பாகவத தேவி புராணம் 5. ஹரிவம்ச புராணம் 6. பிருஹத் தர்ம புராணம் முதலியன ஆம்.

இதிகாசம், பாரதம், ராமாயணம் முதலியன. சிவ ரஹஸ்யம், பக்த விலாசம், பக்த லீலாமிருதம், சிவ லீலாமிருதம், சங்கர திக் விஜயம், பக்த விஜயம் முதலியனவும் ஆம்.

பிரஹ்ம கீதை– “ வேதமா கமபு ராண மிருதிகள் வேறு மார்க்கம், ஓதுமா கமங்கள் தர்க்கம் ஒன்றொண்டொன்றெவ்வா தாகும், ஈதெலாம் ஒக்கப் பண்ண லாவதன் றிதய

துக்கம், ஆதலா லனைத்தும் விட்டிங் கனைத்துமாஞ் சிவத்தைப் பார்ப்பாய். (9–10)

"படித்து மறைகள் பொருள்படுத்திப் பயனில் எட்டிப் பாராதே வடித்த கிளிபோல் வருமாயா வாதப் பேய்க்கும் வாரீரே." அஞ்ஞ வதைப் பரணி (கூழ் வார்ப்பு 8) ஆத்மா எல்லாவற்றிற்கும் பிராண ரூபமாயிருத்தலால் என உணர்க.

1. பத் தாயிரம் 2. ஐம் பத் தைந் தாயிரம் 3. ஆ றுயிரம் 4. இரு பத்து நா லாயிரம் 5. பதி னெட் டாயிரம் 6. இரு பத் தைந் தாயிரம் 7. முப் பத் திராயிரம் 8. எட் டாயிரம் 9. முப் பத்தோ ராயிரம் 10. பன் னீ ராயிரம் 11. பதி னொரு ஆயிரம் 12. இரு பத்து நா லாயிரம் 13. நூ றுயிரம் 14. பதி னு லாயிரம் 15. ஆ றுயிரம் 16. பதினு லாயிரம் 17. ஆறுயிரம் 18. பன் னீர் ஆயிரம். ஆக நால் நூற்று எண்ணுயிரம் கிரந்தம் என்று கூறப்படுகிறது. சுலோகம் வேறு, கிரந்தம் வேறு. எட்டு உயிர் எழுத் தாகச் சேர்த்தால் ஒரு கிரந்தம் எனக் கணக்கிட வேண்டும். முப் பத்து இரண்டு லக்ஷத்து அறு பத்து நா லாயிரம் உயிர் எழுத்துக்களைக் கொண்டது பதின் எண் புராணம் ஆகும்.

இதில், சிவனுக்கு, 1. சைவம் 2. மார்க்கண்டேயம். 3. பவிஷ்யம் 4. லிங்கம் 5. வராஹம் 6. ஸ்காந்தம் 7. வாமநம் 8 கூர்மம் 9. மச்சம் 10. வாயவ்யம் என்னும் பத்துப் புராண மாம்.

விஷ்ணுவுக்கு, 1. வைஷ்ணவம் 2. பாகவதம் 3. நாரதீயம் 4. காருடம் என்னும் நான்கும் ஆம்.

பிரஹ்மாவுக்கு, 1. பிரஹ்மம் 2. பத்மம் என்னும் இரண்டும் ஆம்.

அக்நிக்கு, 1. ஆக்நேயம் என்னும் ஒன்று ஆம்.

சூரியனுக்கு, 1. பிரஹ்ம வைவர்த்தம் என்னும் ஒன்று ஆகும். ஆக ஐந்து தேவதைதையைக் குறித்துக் கூறும் புராணம் பதினெட்டாம்.

1. பத்ம புராணம், 628 அத்தியாயம் 48452 சுலோகம்
2 அக்கினி புராணம், 383 அத்தியாயம் 11457 சுலோகம்.
3. மத்ஸ புராணம், 298 அத்தியாயம் 14062 சுலோகம்.
4. வாயு புராணம், 112 அத்தியாயம் 10991 சுலோகம்.
5. பிரஹ்ம புராணம். 245 அத்தியாயம் 13783 சுலோகம்.
6. விஷ்ணு புராணம், பராசரர் செய்தது. 32

[இயல் இசை நாடகம் என்னும் முத் தமிழினையும் அறிவது பரஞான மன் றெனக் கூறுகின்றார்.]

33 **இயலறிவ திசையறிவ தினமறிவ துளவாம்,**
**அயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே.**

(இ ள்.) இயல் - (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, என்னும் பஞ்ச இலக்கண ளாய) இயலினை, அறிவது-உணர்தலும், இசை-(ச ரி க ம ப த நி என்னும் சப்த ஸ்வரங்க ளாய) இசையினை, அறிவது-உணர்தலும், இனம்-நாடகத்தினை, அறிவது - உணர்தலும், உள - (உலகத்தின்கண்) உள்ளன, அயல் - (ஆயினும் தனக்கு) அந்நியமாயுள்ள பதார்த்தங்களை, அறிவது - உணர்த லாம், அறிவு - (அது) பர ஞானம், அல-அல்ல, [பின்னை எதனை அறிவது அறி வாம் எனிற் கூறுகின்றார்.] அறிவு-சேதந ரூபப் பிரஹ்மத்தினை, அறிவது - உணர்வதே, அறிவு - பர ஞான மாம். என்றவாறு. ஆம். (ஏ - அசை)

ஐந்தாவது, "அறிவது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

இயல் தமிழ்—தொல்காப்பிய முதலியனவும், சங்கச் செய்யுள்கள் முதலியனவு மாகும்.

இசைத் தமிழ்—பண்ணொடு கலந்து பாடுந் திறத்தினைத் தெரிவிக்கும் நூல்களும், அச் செய்யுள்களு மாகும்.

நாடகத் தமிழ்—ஆட்டஞ் செய்து உறுப்புக்களின் குறிப்பினால், இறை. வர லாறு முதலியவற்றைக் காட்டுந் திறத்தினைத் தெரிவிக்கும் நூல்க ளாகும். தெளிந்த அறிவுடையாருக்கு இயற் றமிழும், நடுத்தர அறிவுடையார்க்கு இசைத் தமிழும், மந்தமதியினருக்கு, நாடகத் தமிழும் பய னுறுத்துவன வாக அமைந்துள்ளன.

இங்கு நாடக மென்றது, இப் பொழுது பரத நாட்டியம் எனக் கூறப்படும் கூத்தினைக் குறிப்ப தாகும். இக் கூத்துத் தான் பண்டைக் காலத்திற் றமிழகத்தில் பரவியிருந்தது. இது, "வேத்தியல் பொதுவியல் என் றிரு திறத்துக் கூத்தும்," (மணிமேகலை) என்பது முதலியவற்றாற் புல னாகும். மலையாளத்தி லிஃது 'கதை களி' யென வழங்கப்பெறுகின்றது. அக் காலத்தில், ஆண்களே பெரும்பா லும் இக் கூத்து செய்துவந்திருப்பதாக ஆய்வார்க்குப் புல னாகும்.

இனித் தமிழர்கள் வழக்கு மொழி யாகவும், செய்யுள் மொழி யாகவும், வழங்கும் மொழி, இயற் றமிழ் எனப்படுதலோடு, அவற்றி னியல்பை யாராய்ந் துரைக்குந் தொல்காப்பிய முதலியனவும், அவை விதித்த வாறு இயலும் சங்கச் செய்யுள் முதலியனவும், இயற் றமிழ் எனப்படும்.

தமிழர்கள் பயிலு மிசை, இசைத் தமிழ் எனப்படுதலோடு, அதைப் பற்றி யாராய்ந் துரைக்கும் நூல்களும், அவ் விசை புலப்பட யாத்த செய்யுள்களும், இசைத் தமிழ் எனப்படும்.

தமிழர்கள், இறைவன் வரலாறு முதலிய வரலாறுகள் புலப்பட உறுப்புக்களாற் காட்டி ஆடும் ஆட்டம் நாடகத் தமிழ் எனப்படுதலோடு, அதனைப் பற்றி யாராய்ந்து கூறும், நூல்களும், ஆடுதற் கேற்ப அமைத்த செய்யுள்களும், நாடகத் தமிழ் எனப்படும்.

தமிழர் கூத்து, பரத நாட்டியம் போல்வதே யாகும். வடமொழியில், திருசிய காவியம் ஏற்பட்டிருப்பது போலத் தமிழி லில்லை. இக் காலத்து அவ் வாறு சில யாப்புக ளிருப் பினும், பழங் காலத்தி லில்லை என்பதே தேற்றம். நாடகப் பாட்டுத் தமிழில் நட்டுவர் பாடும் பாட்டுப் போல்வதாகவே அமைந்திருக்கும் என்பார் சிலர்.

இயல் இசை யிரண்டு மின்றிக் கூத்து நிகழா தாதலால், 'இனம்' என்றனர். 33

[அறு பத்து நான்கு கலை ஞான முடையோரும்
பரஞானிய ரல்லர் என்கின்றார்.]

34 நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும்,
பவலயம தறுசுத்த பரமமறி யாரே.

(இ-ள்.) நவிலு - (நூல்களாலும் சான்றோர்களாலும்,) கூறப்படுகின்ற. கலை அறு பத்து நாலும்-அறுபத்து நான்கு கலைகளையும், அறிவாரும் - உணர்பவர்களும், பவ- ஜந்மம், லயமது-மரணம், அறு- இன்றிய, 'சுத்த பரமம்'-சுத்தப் பிரஹ்மத்தினை, அறியார்-உணரமாட்டார்கள். எ-று. (ஏ - அசை)

"அறிவாரும்" என்ற உம்மை உயர்வு சிறப்பு. அவ் வும்மையால், ஏனையர் உணரார் என்பது தெளிவு. 'லய மது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. 'கலை அறு பத்து நாலும்' என்றதில் உள்ள உம்மை முற் றும்மை.

அறு பத்து நான்கு கலை ஆவன :— 1-அக்ஷர லக்ஷணம் 2-லிகிதம் 3-கணிதம் 4-வேதம் 5-புராணம் 6-வியாகரணம் 7-நீதி சாஸ்திரம் 8-ஜோதிஷ சாஸ்திரம் 9-தர்ம சாஸ்திரம் 10-யோக சாஸ்திரம் 11-மந்திர சாஸ்திரம் 12-சகுந சாஸ்திரம் 13-சிற்ப சாஸ்திரம் 14-வைத்திய சாஸ்திரம் 15-ரூப சாஸ்திரம் 16-இதிகாசம் 17-காவியம் 18-அலங்காரம் 19-மதுர பாடனம் 20-நாடகம் 21-நிருக்தம் 22-சத்தப் பிரஹ்மம் 23-வீணை 24-வேணு 25-மிருதங்கம் 26-தாளம் 27-அஸ்திர பரீக்ஷை 28-கநக பரீக்ஷை 29-ரத பரீக்ஷை 30-கஜ பரீக்ஷை 31-அசுவ பரீக்ஷை 32-ரத்ந பரீக்ஷை 33-பூமி பரீக்ஷை 34-சங்கிராம விலக்ஷணம் 35-மல் யுத்தம் 36-ஆகருஷணம் 37-உச்சாடனம் 38 வித்துவேஷணம் 39-மதந சாஸ்திரம் 40-மோகநம் 41-வசீகரணம் 42 ரச வாதம் 43-காந்தருவ வாதம் 44-பைபீல வாதம் 45-கவுஸ்த்துவ வாதம் 46-தாது வாதம் 47-காருடம் 48-நஷ்டம் 49-முஷ்டி 50-ஆகாயப் பிரவேசம் 51-ஆகாய கமநம், 52-பரகாயப் பிரவேசம் 53-அதிரிசயம் 54 இந்திர ஜாலம் 55-மகேந்திர ஜாலம் 56-அக்நி ஸ்தம்பம் 57-ஜல ஸ்தம்பம் 58-வாயு ஸ்தம்பம் 59-திருஷ்டி ஸ்தம்பம் 60-வாக் ஸ்தம்பம் 61-சுக்ல ஸ்தம்பம் 62-கன்னத் ஸ்தம்பம் 63-கடக ஸ்தம்பம் 64-அவஸ்தைப் பிரயோகம் என்பன ஆம்.

'சதுஸ் சஷடி கலா' 'அறுபத்து நான்கு கலை' என்பது வேறு தேவி சம்பந்த மாக உளது. அந்த அறு பத்து நாலு கலா தத்துவத்தை அறிபவரும் ஜநந மரண மின்றிய சுத்த பிரஹ்மத்தினை உணரமாட்டார் எனவும் கூறலாம். 34

[அறு பத்து நான்கு கலைகளையும், தேகாத்ம புத்தி யுடையோர் உணர்வர், பிரஹ்ம ஞானிகள் உணரார் என்கின்றார்.]

35 **ஆகவறி வாளரறி வாரிவைய னைத்தும்,**
**ஏகவறி வாளரிவை யாவுமறி யாரே.**

(இ-ள்.) இவை அனைத்தும் - மேற் கூறிய யாவற்றையும், ஆக - தேகத்தினை, அறிவாளர் - (நான் என்று) உணர்பவர்கள், அறிவார் - (புருஷார்த்த மாக) உணர்பவ ராவர், ஏக-ஒன் றாகிய (பிரஹ்மத்தினை), அறிவாளர்-உணர்பவர்கள், இவை யாவும் - முன்னர்க் கூறிய யாவற்றையும், அறியார்- (புருஷார்த்த மாக) உணரமாட்டார்கள், எ-று. (ஏ-அசை) 35

[பஞ்சேந்திரிய நிக்கிரக முடைய வரும், ஆத்ம ஞானம் இன்றி மோக்ஷ மடையார் என்கின்றார்.]

36 **ஐயறிவ றிந்தவைய டங்கினவ ரேனும்,**
**மெய்யறிவி லாதவர்கள் வீடதுபெ றாரே.**

(இ-ள்.) ஐ அறிவு - ஞானேந்திரிய பஞ்சகங்களினது ஸ்வபாவத்தினை, அறிந்து-தெரிந்து, அவை-(அப்) பஞ்சேந்திரியங்களை, அடங்கினவரேனும் - (தத் தம் விஷயங்களிற் செல்ல வொட்டாது) நிரோதஞ் செய்தலா லடங்கப் பெற்றவ ராக இருந்தாலும், மெய்-சத்து ரூபமான பிரம்மத்தின், அறிவு - ஞானம், இலாதவர்கள் - இன்றியவர்கள், வீடது - (அனர்த்த நிவிர்த்தி ஆனந்தப் பிராப்தி ரூபமான) மோக்ஷத்தினை, பெறார்-அடையமாட்டார்கள். எ-று. (ஏ - அசை)

"வீடது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. "அடங்கினவரேனும்" என்றதில், உள்ள உம்மை, இறந்தது தழீயது. அடங்காதவரே யன்றி, அடங்கினவரும் வீடுபெறார்.

இந்திரிய நிக்கிரக, மந நிக்கிரக, பிராண நிக்கிரக முடையோரை யோகி என்பர். அவ்வா றுன யோகியரும் ஆத்ம ஞாநம் இல்லாமையினுல் மோக்ஷம் அடையார் என்றனர். இதனை,

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே,
மெய்யுணர் வில்லா தவர்க்கு"

(திருக் குறள் 36, மெய் யுணர்தல் 4) எனவும்,

"எண்ணு யிரத்தாண்டு யோகம் இருப்பினும்,
கண்ணுர் அமுதனைக் கண்டறி வாரில்லை,
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினுல்,
கண்ணுடி போலக் கலந்துநின் றுனே."

(திரு மந்திரம் 3-8-6) 603) எனவும்,

"அளவிலாக் கால மெல்லாம் வருந்தினும் யோகம் தன்னுல்,
தளர்விலா முத்தி வாரா தத்துவ ஞாநத் தல்லால்."

(ஞாந சித்தி) எனவும் கூறியிருத்தலால் உணர்க. 36

[யதார்த்த ஞாநத்தினைக் கூறுகின்றுர்.]

37 மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாம்,
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே.

(இ ள்.) தமில் - (பிரத்திய கபிந்ந மாய) தம்மினும், வேறு - அந்நியமா யுள்ளவற்றை, அறிவது-உணர்தல், எல்லாம்-யாவும், மெய்ம்மை யதார்த்த மான, அறிவு-ஞாநம், அல்ல - அல்லவாம், தம்மை - (பரிபூரண மான) ஆத்ம ஸ்வ ருபத்தினை, அறியும் - உணர்கின்ற, அறிவதே – ஞாநமே, அறிவு-(யதார்த்த மான) ஞாந மாம். எ–று.

(தான் ஏ - அசைகள்) பின் "அறிவது" என்பதில், 'அது. பகுதிப் பொருள் விகுதி.

(அஞ்ஞ வதைப் பரணி 30 கூழ் வார்ப்பு.)

"பணியப் படுவா ருள்ளிருக்கும் பரதே வதையைப் பாராதே,
மணியைத் துலக்கிக் கிணுகிணென வரும்பேய் தனக்கும்
வாரீரே." 11.

"ஞானம் போலே புலசொல்லி நாடற் கரிய முத்தியினுந்,
தானுஞ் சிவமும் பாசமுமென் சைவப் பேய்க்கும்
வாரீரே." 12.

"முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்,
பின்னைப் பிறவியிற் பேற்றுல் ஐயறிலாம்."

"தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே."
(திரு மந்திரம் ஈற்றில் உள்ளது 10) 2318)

எனத் தம்மில் வேருகப் பதி பாசம் நித்திய மாக உள தெனும் பேத அறிவை ஞானம் என்று கூறக் கூடாது எனக் கூறி, பதியும், பாசமும், பாகத் தியாக லக்ஷணையால் பாதித் துத், தனது சொருப மாக அறிவதே ஞானம் எனக் கூறப் படும் என்பதை, அஞ்ஞ வதைப் பரணிச் செய்யுளாலும், திரு மந்திரச் செய்யுளாலும், அறிக. 37

[பூஜ்யன் பூஜகன் பூஜனை அதன் சாதநம் என்பவற்றை அபேத மாக உணர்வது யதார்த்த ஞானம் என்கின்றூர்.]

38 பூசனையு மதுசகல பொருளுமறி தன்மையும்,
ஈசனையும் வேறத்த வறிவதறி வெனவே.

(இ-ள்.) பூசனையும் - அர்ச்சித்தல் தொழிலாகிய கிரியையினையும், அது - அதற்குச் (சாதநமா யுள்ள), சகல பொருளும்-(பத்திர புஷ்ப பலாதிக ளாய) எல்லாப் பதார்த்தங்களையும், அறி - (அதனை) உணர்ந்து (அர்ச்சிக்கும்), தன்மையும்-

(கர்த்தா வாகிய) தம்மையும், ஈசனையும்-(பூஜ்ய ஞகிய) பர மேசுவரனையும், வேறது அற-அபேத மாக, அறிவது-உணர் வது, அறிவு-(யதார்த்த) ஞாந மாம், என-என்று நந்தி பரா யண ஸ்வாமிகள் உபதேசித்தனர் எ-று. (ஏ - அசை)

" வேறது " என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

இறைவ னெருவ னிருக்கின்ருன் அவ ஞண்டவன். ஆன்மாக்களா யுள்ளவர், அறிவிக்க அறியும் தன்மை யுடைய ராயும், சார்ந்ததன் வண்ணமாந் தன்மை யுடையராயு மிருத் தலால், இன்னல் வடிவாய உலகத்தைச் சாராது, இன்புறுவா யிலகு மவ் விறைவனைச் சார்ந் தின்புற வேண்டிப் பூசித்தல் நன் றென வுணரும் உணர்வு மெய்யுணர் வாகாதோ என்னு மாசங்கையைப் பரிகரிக்கின்றது இப் பா என்க. 38

[பரவித்தை, சம்சார சாகரத்தைத் தாண்டுதற் கின்றியமை யாத தொன்ருகும் எனவும், தம்மை யறிவதே, பரவித்தை யாகு மெனவும், ஆசிரியர் கூறியதை யெண்ணித், தம்மைய றியாதவ ரொருவரு மில்லையே, தாம் என்பது, இத் தேகங்கள் தாமே, தேகங்க ளாயின், இவர் தம்மை யறியு மறிவு பரவித் தை யாகும், அது மோக்ஷ சாதகமாகு மென்பா னேன் என எண்ணி, தேகத்திற்கு அந்நிய மாக அஹம் சப்தார்த்தம் இருக்கின்றதா ? இருக்கின், " உபதேசிப்பீ ராக" வென்று சசி வந்நன் வினவுகின்ருன்.]

39 தானெனுமு டம்பதுத னைத்தவிர வேரு,
யானெனும ருத்தமுள வோவருளு கெனவே.

(இ-ள்.) தான் - நான், எனும் - என்று கூறுகின்ற, உடம்பதுதனை-சரீரத்தினை, தவிர-விட்டு, வேறு ஆய்-அந்நிய மாக, யான்-நான், எனும்-என்று கூறுகின்ற, அருத்தம்-

பொருள், உளவோ-இருக்கின்றதா?, அருளுக-(அங்ஙனம் இருப்பின் அடியேனுக்கு) உபதேசிப்பீராக, எனா-என்று சசிவர்ணன், பிரார்த்தித்தனன் - அவ்வாறு பிரார்த்தித்துக் கேட்க. எ-று. (ஏ - அசை)

முன் செய்யுளில் கூறிய 'தான்' என்னுஞ் சொற்பொருளைத் தெரிந்து கொள்ளற் பொருட்டு, இச் செய்யுளில் வினா நிகழ்ந்ததென உணர்க.

"உடம்பது தனை" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. தன் அசை.

'அருளுக எனா' என்பது 'அருளுகெனா' எனச் செய்யுள் விகாரத்தால், அகரம் தொக்கது

'வேறுக' என்பது, 'வேருய்' எனத் திரிந்தது.

அஞ்ஞவதைப் பரணி 15 அஞ்ஞன் சரிதை.

"மெய்யென் றிருப்ப துடம்பினையும் விளங்கினை யார்தம் வார்த்தையுமே, பொய்யென் றிருப்ப தீசனையும் புரையற்றோர்கள் புகல்வதுமே." 9.

அஞ்ஞவதைப் பரணி 30 கூழ் வார்ப்பு

"உடலை விடுகை முத்தியென வுரைத்த வுண்மை யுணராதே, முடலை யுடலை நானென்னு முழுப்பேய் தனக்கும் வாரீரே." 15. என்பதனாலும் உணர்க. 59

[காணப்படுந் தூல தேக மட்டு மல்ல, தூல தேகத்தை இருப்பிடமாகக் கொண்ட சூக்கும தேகமும், இரண்டற்குங் காரண மாக வுள்ள அவித்தை யாகிய காரண தேகமும், ஆக மூன்று தேகங்கள் வடிவான பஞ்ச கோசங்களையும், ஆத்மா வன்றென நிஷேதிப்பான் றொடங்கி, 40 முதல் 47 வது செய்யுள் வரை, அன்ன மய கோசம் ஆத்மா வன்றெனக்

கூறக் கருதி, தேக விலக்ஷண மாக அஹம் சப்தார்த்தத்தினை அறிவிப்பான், "என தென்னும் பிரதீதியினால் தேகம் தான் அன்" றென்கின்றார் ]

40 **எனதாடை பொன்பூம கன்றையல் பாய்மா**
**விபங்கண்மு கங்கால்கை மெய்யென்ன வென்றும்,**
**தனதாயு ரைப்பான்வ குத்திந்த வூனைத்**
**தானென்ற யர்த்துஞ்சொ லத்தக்க தன்றே.**

(இ-ள்.) எனது - என் னுடைய, ஆடை—வஸ்திரம், பொன்-(என்னுடைய) பொருள், பூ—(என்னுடைய) பூமி, மகன் - (என்னுடைய) புத்திரன், தையல் - (என்னுடைய) ஸ்திரீ, பாய்மா - (என்னுடைய) குதிரை, இபம் - (என்னுடைய) யானை, என்ன - என்று கூறுவது (போல்), கண்- (என்னுடைய) நேத்திரம், முகம் - (என்னுடைய) முகம், கால் - (என்னுடைய) பாதம், கை - (என்னுடைய) பாணி, மெய்-(என்னுடைய) சரீரம், என்ன-என்று, என்றும்-எப் பொழுதும், இந்த ஊனை-இந்த மாமிச மயமான சரீரத்தினை, வகுத்து - (வெவ் வே றாகப்) பிரித்து, தனது ஆய் - தன்னு டைய தாக, உரைப்பான் - (ஒருவன்) கூறுவான், அயர்த் தும் - (அதனால்) மறந்தும், தான் - ஆத்மா, என்று - என, சொல-கூறுதற்கு, தக்கது-யோக்கிய முடையது, அன்று- அன்று. எ-று. (ஏ - அசை)

"அயர்த்தும்" என்ற உம்மை, எதிர்மறை யும்மை. மகன் தையல் என்பன, மகன் பெண் டாட்டி யென்னும், பொருள்கள் என்னும், பொருளவாய் நிற்றலின், ' எனது " என்பதற்குப் பய னிலைக ளாயின. "தம்பொருள் என்பதம் மக்கள்" (மக்கட் பேறு 4) "பிறன்பொருளாட் பெட்பொழு கும்" ( திருக் குறள், பிறனில் விழையாமை. 1 ) என்னு

மிடத்துத் தந்தைக்கும், கிழவனுக்கும், மகனும், கிழத்தியும், பொரு ளாவர் எனக் குறிப்பித்தல் காண்க. 40

[தூல தேகந் தா னன் றென்பதை விளக்க, இரத மாக வுருவகித்து, ரத சாரதியை விட, ரதம் அந்நியமா யிருப்பது போலத், தேக மாகிய ரதம் தன்னால் நடத்தப்படுகிறபடியினால், தான் அன்று என்கின்றார்.]

41 தாளாக வூராழி யார்வென்னில் வீணை
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா,
நாளாம லர்ச்சென்னி கூந்தற்கொ டித்தேர்
நாணாளு மூர்வானில் வேறாக நாடே.

(இ-ள்.) தாள்-பாதங்கள், ஊர்-நடந்து செல்லுகின்ற, ஆழி ஆக - சக்கரங்க ளாகவும், வென்னில் - முதுகின்கண்ணுள்ள, வீணை தண்டு - எலும்பே, ஆர் ஆக - அஞ்சு ராணியாகவும், வல்-வலிமை பொருந்திய, மார்பு-நெஞ்சே, தட்டு ஆக - (தேர்த்) தட் டாகவும், நாள் ஆம் மலர் - அன்று அலர்ந்த புஷ்பத்தினை (சூடுகின்ற), சென்னி-சிரசே, மொட்டு ஆம்-தலை யலங்கார மாகவும், கூந்தல்-(தலை) ரோமங்களே, கொடி - இடக்கியங்க ளாகவும், தேர்-(உள்ள சரீர மாகிய) ரதத்தினை, ஊர்வானில்-நடத்துவோனை விட, வேறு ஆக- அந்நிய மாக, நாள் நாளும் - பிரதி தினமும், நாடு-(நீ) கருதுவாயாக. எ-று. (ஏ - அசை)

आत्मानम् रतिनम् विद्धि शरीरं रतमेव च ॥

ஆத்மாவை 'ரத சாரதி (அதாவது ரதி) என அறிக. சரீரம் ரதம் ஆகவே அறிக. என்பதனால் உணர்க. (பைங்கள உபநிஷத் 4-வது அத்தியாயம் 1-வது மந்திரம்.) 41

[இங்குத் தூல தேகந் தா னன் றென விளக்க, மர யானையை யுவம மாகக் கொண்டு, தேகம் சிற்பஞற் செய்யப்படும் இயானையைப் போல், நம்மால் இயக்கப்படுதலின் தான் அன் றென்கின்ருர்.]

42 கடக்குஞ் ரம்பண்ணி யுண்ணின்ரு ருத்தன்
கைபாத கன்னங்கண் மெய்போலி யக்கும்,
கிடக்கும்ந டத்தாவி டத்திவ்வு டம்புங்
கிடக்குமொ ருத்தன்ந டத்தாவி டத்தே.

(இ-ள்.) கட- (கன்னம் கபாலம் பீசம் என்னும் மூன் றிடத்தும்) மதங்கள் (ஒழுகும் யானை போல). குஞ்சரம்- (மூங்கில் முதலியவற்றிஞல்) யானையினை பண்ணி-செய்து, ஒருத்தன் - ஒரு புருடன், உள் நின்று - (அதற்) குட் புகுந் திருந்து, கை-பாணியையும், பாதம்-கால்களையும் கன்னம்- செவிகளையும், கண்-நேத்திரங்களையும், மெய் போல் - உண் மையான (யானைக் கிருக்கும் அவயவங்கள்) போல, இயக் கும் - அசைப்பிப்பன், ஒருத்தன் - ஒரு புருடன், நடத்தா விடத்து - (அந்த யானையின் உட் புகுந்து) அசைப்பியாவிட த்து, கிடக்கும்-(ஜடமாகப் பூமியில்) கிடக்கும், இவ் வுடம் பும் - (அது போல) இந்தச் சரீரமும், நடத்தாவிடத்து-(ஒரு ஆத்மா உட் புகுந்து) அசைப்பியாவிடத்து, கிடக்கும் - (ஜடமாகக்) கிடக்கும் (ஆதலால் தான் அன்ரும்). எ-று (ஏ - அசை) 42

[இனித் தூல தேகத்தை வேறு பிரகாரமாக ஆந்மா வன் றெனக் காட்டத் தொடங்கி, மலமும், மநமும், அந்த காரிய மாகலின், எங்ஙனம் ஆத்மா வன்ரே, அங்ஙனமே தேக மும், அந்த காரிய மாகலின், ஆத்மா வன் றென்கின்ருர்.]

43 ஒருகூறு மலமாகு மொருகூறு டம்பாகு
மொருகூறு மநமாகு முண்டற்ற வந்நம்,

இருகூறு நீயாகி னொருகூறு நீயாமி
ழிக்கும்ம லஞ்சோறி டப்பட்ட வுடலே.

(இ-ள்.) உண்டு - புசித்து, அற்ற - சீரணித்த, அந்நம் - பதார்த்தங்கள், ஒரு கூறு-ஒரு பாகம், மலம் ஆகும்-அமேத்தியம் ஆகும், ஒரு கூறு - ஒரு பாகம், உடம்பு ஆகும்-சரீர மாகும், ஒரு கூறு - ஒரு பாகம், மநம் ஆகும் - மந மாகும், இரு கூறு - (மலமும், மநமு மாகிய) இரண்டு பிரிவும், நீ ஆகின்-உனது வடிவ மாகு மாயின், இழிக்கும்-பழிக்கப் படுகின்ற, மலம்-அமேத்தியங்கள், சோறிடப்பட்ட-ஒழுகு கின்ற, உடல்-சரீர மாகிய, ஒரு கூறும்-ஒரு பிரிவும், நீ ஆம்-உனது வடிவ மாம் (மலமும், மநமும், நீ யாகாமையின் தேகமும் நீ யன்ரும்). எ—று. (ஏ - அசை)

" கூறும் " என்றதில் உள்ள உம்மை. இறந்தது தழுவியது. " மலம் சோறிடப்பட்ட வுடல் " என்பது, நவத் துவாரங் களிலும் மலம் சொறிகின்ற சரீரம் என்னும் பொருளது.

சாங்தோக்ய உபநிஷத் 6-வது அத்யாயம் 5-வது கண்டம் 1-வது மந்திரம், " अन्न मशितं त्रेधा विधीयते तस्य यः स्थविष्ठो धातुस्तत्पुरीषं भवति यो मध्यमस्तन्मांसं योऽनिष्ठस्तन्मनः ॥ १ ॥ " புஜித்த அந்நம் மூன்று பிரகார மாக விதிக்கப்படுகின்றது. அதனது மிக ஸ்தூல மான எந்தத் தாதுவோ, அது மலம் ஆகின்றது. எது மத்ய பாகமோ, அது மாம்சம்(ஆகின்றது). எது மிக நுணுகிய பாக மாக இருக்கின்றதோ, அது மநம் (ஆகின்றது) " என்று கூறுகின்றது. இதனை உணர்க. 43

[தேகத்தில் உயிர் இருக்குங்கால் அந்நஞ் சுடுதலை அறிதலினுலும், அவ் வுயிர் நீங்கிய காலையில், அக்கினி சுடுதலை அறியாமையினுலும், தேகம் ஆத்மா வன்று என்கின்ருர்.]

44 கிளராத ரத்துண்ணு மந்நஞ்சு டக்கை
கிட்டப்பொ ருதேயி ருந்தார்மு னிந்தார்,

தளராது றுப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதேது யின்றார்ச கித்தே.

(இ-ள்.) கிளர் - மிகுந்த, ஆதரத்து - விருப்பத்தோடு, உண்ணும் - புசிக்கின்ற, அன்னம் - சோறானது, சுட - தகிக்க, கை-(அதன்மீது) கையினை, கிட்ட-வைத்தற்கு, பொறுது-பொறுக்காது, இருந்து- (அப் பொழுது இச் சரீரத்திற்குள்) இருந்து, முனிந்தார்-கோபித்தவர், ஆர்-யாவ ராவர். உறுப்பு-அவயவங்கள், ஒன்றும் - ஒன்றாயினும், தளராது - குறைவுறாது, உயிர்-பிராணன், போக-நீங்க, அன்று-அப் பொழுது, தழல் - அக்கினி யாகிய, பள்ளிமீது - படுக்கைமீது, சகித்து-(சூட்டைப்) பொறுத்துக்கொண்டு, துயின்றார் - நித்திரை செய்தவர், (ஆர்)- யாவர் ?, (ஆகலின் தேகம் ஆத்மா வன்றாம்). எ-று. (ஏ-ஏ-ஏ - அசை) 44

[இனித் தூல தேகத்தைக் கண்ணாடியிற் புலப்படும் நிழலை யுவ மான மாக்கித், தேகம் சாயை போல் தன்னாற் செய்யப் படுந் தொழிலைச் செய்தலின், ஆத்மா வன் றென்கின்றார்.]

45 நிழற்பாவை கண்ணாடி யிற்பாவை கைகானி
மிர்க்கும்மு டக்கும்மி வனசெய்யு மெல்லாந்,
தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய் தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே.

(இ-ள்.) நிழல்-(தேகத்தினது) சாயை யாகிய பாவை-உருவமும், கண்ணாடியில் - தர்ப்பணத்தில் தோற்றுகின்ற, பாவை-பிரதிபிம்ப (உருவ) மும், கை-பாணியையும், கால்-பாதங்களையும், நிமிர்க்கும் - செம்மையாக்குகின்ற, முடக்கும் - கோணலைச் செய்கின்ற, எல்லாம் - எல்லாக் காரியங் களும், இவன் - இந்தப் புருடன், செய்யும்-பண்ணுகின்ற,

தொழிற்பால ஆம்-கிரியையினிடத்தே இருக்கின்றன வாம், இவ் வுடலம்-(அஃதே மான) இந்தச் சரீரம், செய்-பண்ணு கின்ற, தொழிலும்-கிரியைகளும், சுடர்-பிரகாசம் பொருந் திய, ஞாந வடிவானவன் - ஞாந ஸ்வரூப மான ஆத்மா, செய்த பண்ணுகின்ற, தொழிலே-கிரியைகளே யாம். எ-று. (மற்று அசை)

"தொழிலும்" என்றதில், உள்ள உம்மை எச் சவும்மை. 45

[இதன்கண், இரண்டு பிரகாரமாகத் தேக மாத்மா வன் றெனக் காட்டத் தொடங்கித், தேகம் கடம் போல் அறியப் படுதலினுலும், கூடு போற் றனக் கிட மாதலினுலும், ஆத் மா வன் றென்கின்ருர்.]

46 அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே
யாகுலிவ் வூகை நானென்ன லாமோ,
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே.

(இ-ள்.) அறிகின்ற-உணரப்படுகின்ற, பொருள்-வஸ்து வானது, என்றும்-எப்பொழுதும், அறிவானில்-திருஷ்டா வினும், வேறேயானுல் - அந்நியமாகு மாயின், இவ் ஊன்- இந்த மாமிசமய மான ஆகம்-சரீரம், நான்-(நம்மால் அறி யப்படுகின்றமையின் இதனை) அகம், என்னல் ஆமோ? - என்று கூறல் பொருந்துமா? (பொருந்தா தென்பது கருத் தாம்) கூடு-(பக்ஷி வசிக்காநின்ற) பஞ்சரம், செறிகின்ற- நெருங்கியிருக்கின்ற, புள் அல்லவே? - பக்ஷி யன்றே, இவ் வகையே-இவ் வாறே, செடம் ஆன-அறி வின்றிய, உடல்- சரீரம், நின்னில் - உன்னினும், வேறு - அந்நியம், என்று- என, தெளி-அறிவா யாக. எ-று. (ஏ - அசை) 46

[இனித் தேகம் பஞ்ச பூத வடிவமாக இருத்தலின், ஆத்மா வன் றென்று பிறி தோர் வகையால் விளக்குகின்றார்.]

47 நிலமாகும் வற்பென்ற நெகிழ்கின்ற நீரா
நெருப்பாமி திற்சுட்ட வெல்லாமு மநிலஞ்,
சலமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே.

(இ-ள்.) இதில் - இந்தச் சரீரத்தின்கண், வற்பு என்ற கடிநம் என்று கூறுதலுக் கேற்ப வுள்ளவை, நிலம் ஆகும்-பிருதிவியின் அம்ச மாகும், நெகிழ்கின்ற - நெகிழ்ச்சியா யுள் ளன, நீர் ஆம் - ஜலத்தின் அம்ச மாம், சுட்ட - சூடாகக் காணப்படு மவை, எல்லாம்-யாவும், நெருப்பு ஆம்-அக்கினி யின் அம்ச மாம், சலம் ஆன-அசைவன வாகக் காணப்படு வன யாவும், அநிலம் - வாயுவின் அம்ச மாம், புரை ஆன- ரந்திரமா யுள்ளன யாவும், வான்-ஆகாசத்தின் அம்ச மாம், இந்த உடலம்-(ஆகலின்) இந்தத் தூல சரீரம், சடம் ஆன- அறிவின்றியதாய, ஐ பூத-பஞ்ச பூதங்களினது, உருவங்கள் தாம் - ஸ்வரூபங்களே யாம் (ஆதலால் ஆத்மா வன்றாம்). எ-று. (தாம் - ஏ - உம் - அசை)

கல்ப்ப உபநிஷத் 1-வது மந்திரம், "यत्कठिनं सा पृथिवी यद्द्रवं ता आपः यदुष्णं तत्तेजः यत्संचरति स वायुः यत्सुषिरं तद् आकाश मित्युच्यते ॥ १ ॥ "எது கடிநம், அது பிருதிவி ஆம் எது நெகிழ்ச்சியோ, அது நீ ராம். எது உஷ்ணமோ, அது அக்நி ஆம். எது செல்லுகின்றதோ, அது வாயு ஆம். எது துவார மோ, அது ஆகாசம் ஆம்" எனக் கூறுகின்றது,

வற் பென்றல் எனப் பாட மோதின், தொழிற் பெயர் ஆகு பெய ராக அத் தொழிலை யுடைய பாகங்களை யுணர்த் திற் றென்க.

[அந்ந மய கோச மாகிய தூல வுடம் பாத்மா அன் றெனக் கூறிச், சூட்சும சரீர வடிவ மான மூன்று கோசங்களில், மநோ மய விஞ்ஞாந மய கோசங்களுள், ஞாந இந்திரியங் களே பதார்த்தங்களை அறிதலின், ஞாந இந்திரியங்களே ஆத்மா வாமாலோ வெனச் சங்கித்து, அவை அந்நியத்தை யபேக்ஷிக்கின்றபடியால் ஆத்மா வல வென்கின்றார்.]

48 விழியைப்பு மானென்னில் ரவியாதி யாலே
விளங்குகின்ற தல்லால்வி ளங்காமை யாலே,
ஒழியப்ப டுங்கன்ன முதனாலு முன்ற
னுருக்கண்ட கண்டன்னே யொப்பாக வுன்னே.

(இ-ள்.) விழியை - நேத்திரத்தினை, புமான் - ஆத்மா, என்னில் - என்று கூறுவாயாகில், ரவி ஆதியாலே - சூரியன் முதலிய பிரகாச வஸ்துக்களானே, விளங்குகின்றது-(நேத்தி ரேந்திரியம் பதார்த்தங்களை விளக்குவதாக) விளங்குகின்றது, அல்லால் - பிரகாசங்களின் சகாய மில்லாமலே, விளங்காமை யால்-(பதார்த்தங்களை விளக்குவதாக) விளங்காமையினால், ஒழியப்படும்-(ஆத்மா வன் றென்று) நீக்கப்படும், கன்னம்- சுரோத்திரம், முதல்-முதலிய, நாலும்-நான்கினையும், உரு- (ஆத்மா என்று கூறுவாயாகில்) ரூபங்களை, கண்ட - பார்க் கின்ற, உன்-உனது, கண் தன்னை - நேத்திரேந்திரியத்தினை, ஒப்பாக-போல, உன்னு - (சுரோத்திரம் த்வக் சக்ஷு கிரா ணம் ரசநம் என்னும் நான் கிந்திரியங்களும் ஆத்மா அல்ல வென்று) அறிவா யாக. எ-று. 'உன் தன்' 'கண் தன்னை என்பதில்' 'தன்'. (தன் ஏ - ஏ - அசைகள்) 48

[பிராண மய கோசத்தில், கர்மேந்திரியங்களுள், வாக் கிந்திரியம் ஆத்மா வாமாலோ வெனில் அஃதும் ஆத்மா வன்றென்கின்றார்.]

49 அழலுண்பொருள் களினுண்பவை முக்கூறதின் முதற்கூறணியென்புற டுக்கூறது மச்சைக்கணி யாகும்,
எழில்கொண்டக டைக்கூறது வாக்காயெழு மென்றே
யியனான்மறை யந்தங்களி சைக்கின்றன வாமே.

(இ-ள்.) அழல்-அக்கினி, உண் பொருள்களின்-புசிக்கப்பட்ட பதார்த்தங்களில், உண்பவை - (மநிதன்] புசிப்பன வாய நெய் முதலியன, முக் கூறு-மூன்று பாக மாம் அதில்-அவற்றுள், முதல் கூறு-பிரதம பாகம், அணி-வரிசையான, என்பு-எலும்பு ரூப பரிணமத்தினை அடையும், நடுக் கூறது-மத்திம பாக மானது, மச்சைக்கு அணி ஆகும் - மூளைக்குச் சிறப்பைத் தரும், கடைக் கூறது - அந்திம பாகம், எழில் கொண்ட-அழகு பொருந்திய, வாக்கு ஆய்-வாக்கு ரூப பரிணம மாக, எழும்-உண்டாகும், என்று-என, இயல்-நித்திய மா யுள்ள, நால் – (ரிக், யசுர், சாம, அதர்வணம் என்னும்) நான்கு, மறை-வேதங்களின், அந்தங்கள்-முடிவாகிய உபநிஷத்துக்கள், இசைக்கின்றன - உரைக்கின்றன (ஆகலின் கர்மேந்திரிய பஞ்சகமும் ஆத்மா வன்றும்). எ-று.

(ஆம் ஏ - ஏ - அசை)

"நடுக் கூறது", "கடைக் கூறது" என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி யாம். என்றும் ஒருபடித் தாக இயலுதலால், 'இயல் நான் மறை' என்றனர்.

வாக்கு ஆந்மா வன் றென முதலில் எணணப்பட்ட வாக்கைக் கூறவே, ஒழிந்த பாணி முதலியனவும் ஆந்மா வல்ல என்று உபலக்கணத்தாற் கூறப்பட்டன வாகக் கொள்ளல் வேண்டும்.

சாந்தோக்ய உபநிஷத் 6-வது அத்தியாயம் 5-வது கண்டம் 3-வது மந்திரம், तेजोऽशितं त्रेधा विधीयते तस्य यः स्थविष्ठो धातुस्तदस्थि भवति यो मध्यमः स मज्जा योऽणिष्ठः सा वाक् ॥ ३ ॥ அக்நி புஜிக்கப்பட்டது மூன்று பிரகாரமாக விதிக்கப்படுகின்றது. அதனது எந்த மிகத் தூலமான தாதுவோ, அது எலும்பு ஆகின்றது. எது மத்திய பாகமோ, அது மஜ்ஜை ஆகின்றது. எது மிகச் சிறிய பாகமோ, அது வாக் ஆகின்றது." என்று கூறுகின்றது. 49

[சூக்குமசரீர வடிவ முக் கோசங்களில், முதற் கோசமாகிய பிராண மய கோசத்தில், பிராணன் ஆத்மா வன்றென்று கூறுகின்றார்.]

50 உண்ணும்புனன் முக்கூறதின் முதற்கூறுவர் நீரா
முதிரங்நடு விற்கூறுக டைக்கூறுபி ராணன்,
எண்ணும்மிதி லிருகூறவை நீயாயிடி னன்றே
யிறுகின்றபி ராணன்னது நீயாகுவை யிசையே.

(இ-ள்.) உண்ணும் - புசிக்கின்ற, புனல் - ஜலம், முக்கூறு - மூன்று பாகமாம், அதில் - அவற்றுள், முதற் கூறு - பிரதம பாகம், உவர் நீர் ஆம்-மூத்திரம் ஆம், நடுக் கூறு - மத்திம பாகம், உதிரம்-இரத்தமாம், கடைக் கூறு-அந்திம பாகம், பிராணன் - பிராண வாயு வாம், எண்ணும் - கருதாநின்ற, இதில் - இவற்றுள், இரு கூறவை - (மூத்திரமும் இரத்தமு மாகிய) இரண்டு பாகங்களும், நீ ஆயிடின்-உனது ஸ்வரூப மாயின், அன்றே-அல்லவா, இறுகின்ற-நாச மடைகின்ற, பிராணனது-பிராண வாயு, நீ ஆகுவை-நீ ஆவாய், இசை - கூறுக (மூத்திரமும், ரத்தமும், ஆத்மா வாகாதது போலப் பிராணனும் ஆத்மா வன்றும் என உணர்க). எ-று.
((இன் - ஏ - அசை)

அதில் 'இதில்' என்பவற்றுள், அது இது என்பன தொகுதி யொருமை, "பிராணனது" என்பதில் உள்ள, அது பகுதிப் பொருள் விகுதியாம். பசிப் பிணி தீர நுகரப்படும் பொருள்க ளெல்லாம் உணவெனப்படுதலின், பருகும் புனல் என் னுது "உண்ணும் புனல்" என்றனர்.

சாங்தோக்ய உபநிஷத், 6-வது அத்யாயம், 5-வது கண் டம், 2-வது மந்திரம், आपः पीतास्त्रेधा विधीयन्ते तासां यः स्थविष्ठो धातुस्तन्मूत्रं भवति यो मध्यमस्तल्लोहितं योऽणिष्ठः स प्राणः ॥ २ "குடித்த ஜலம் மூன்று பிரகார மாக விதிக்கப்படுகின்றன. அவற்றுள், எது மிக தூல தாதுவோ, அது மூத்திரம் ஆகின் றது. எது மத்ய பாகமோ, அது ரக்தம் ஆகின்றது. எது மிகச் சிறிய பாகமோ, அது பிராணன் ஆகின்றது" என்று கூறுகின்றது. 50

[இனி வேறு பிரகாரத்தினுல், பிராண னுத்மா வாகா தெனக் கூறுகிருர் ]

51 பிராணனு மல்லதுஞ்சி லுணர்வின்மை யாலஃ
துணரும்பு லன்களொ ழிவாற்,
பிராணன தென்னின்மன்னே யொழியாது சேனை
நகர்சூழ்வ லஞ்செய் பொழுதே

(இ ள்.) துஞ்சில் - சுழுப்தி யவஸ்தையில், உணர்வு- ஞானம், இன்மையால்-இன்றியிருத்தலின், பிராணன்-பிராண வாயு, அல்ல-(ஆத்மா) அன்று, அஃது-பிராண வாயு வானது. உணரும்-அறிகின்ற, புலன்கள்-ஞானேந்திரியங்களின், ஒழி வால் - இலயத்தினுல், பிராணன் - (அறிய வில்லை ஆதலின்) பிராண வாயு, அது - ஆத்மா, என்னில் - என்று கூறுவா யாகில், [பிராணன் ஆத்மா அன்று என்று திருஷ்டாந்த

வாயிலாக நிஷேதிக்கின்றார்.] நகர் - பட்டணத்தினை, சூழ்-சூழ்ந்து, வலம் – பிரதக்ஷிணம், செய் - செய்து வரும், பொழுது - காலத்து, சேனை-(ரத கஜ துரக பதாதிக ளென்னும் நால் வகைச்) சேனைகளும், மன்னை-அரசனை, ஒழியாது-வீட்டு நீங்கா (அது போ லின்மையின், பிராணனும், ஏனை நான்கு வாயுக்களும், ஆத்மா அன்றுவென் றுணர்க). எ-று.
(உம் - ஏ - அசை)

"சேனை ஒழியாது" என்பது, சாதி யொருமை. 51

இதுவு மது.

52 கரணமொ டுங்கவாயு நிகழ்வென்கொ லென்னி
னுடல்காவ லாகு மலதேல்,
மரணம டைந்ததென்று தமர்சுட்டி டாமுன்
வளைவாலின் ஞாளி கொளுமே.

(இ-ள்.) கரணம்-சூக்ஷ்ம சரீரம், ஒடுங்க-இலய மாக, வாயு - (சுழுத்தி யவஸ்தையில்) பிராண வாயுவு, நிகழ்வு - தோன்றுதல், என் - யாது காரணம், என்னில் – என்று (நீ) கேட்கில், உடல் - (ஸ்தூல) சரீரத்தினை, காவல் ஆகும் - காப்பதாக ஈசுவரனால் நியமித்துவைக்கப்பட்டதாயிருக்கும், அலதேல் - (சுழுப்தி யவஸ்தையில் பிராண வாயு) வின்றித் தூல சரீர மிருக்குமாயின். மரணம் அடைந்தது - மரித்தது, என்று-எனக் கருதி, தமர்-சுற்றத்தார்கள், சுட்டிடா முன்-தகநஞ் செய்தற்கு முன். வளை-கோணியிருக்கின்ற. வாலின்-வாலினையுடைய, ஞாளி - நாய் கொளும்-தின்னும் (அதனினின்றும் இதனைப் பாதுகாத்தற்கு ஈச்வரனால் நியமித்து வைக்கப்பட்ட தென் றுணர்க) எ-று. (கொல் ஏ-அசை)

வந சிம்மம் புலி வேங்கை முதலியன, வநத்தி லிருந்து வந்து தின்பதற்கு முன்னர், கிராம சிம்ம மாகிய நாய், பக்கத்

தில் இருந்து வந்து சுலபமாகத் தின்றுவிடும் என்னும் லாகவம் தோன்ற, "வளைவாலின் ஞாளி கொளும்" எனக் கூறிய தாம். 52

[மனோ மய விஞ்ஞான மய கோசங்களுள், மநம் புத்திகள், ஆத்மா வல வென்கின்றார்.]

53 இனமுற வெண்ணவுள்ள க்ரணத்தி லொன்றி
தெனலாலி தென்ன தெனலான்,
மநமுன மந்நமென்ற வதனாலு மல்ல
மதியல்ல வந்த வகையே.

(இ-ள்.) இனம் உற-ஒரு கூட்டமாக, (சமஷ்டியாக), எண்ண - கணிக்கும்படி, உள்ள - இருக்கின்ற, கரணத்தில்- அந்தக் கரணத்துள், இது-மநமும், ஒன்று-ஒன்று, எனலால்- எனக் கூறப்படுதலாலும், என்னது-என்னுடையது, இது- இம் மநம், எனலால்-என்று கூறப்படுதலினாலும், முனம்- முன்னர் நாற் பத்து மூன்றாம் செய்யுளில், அந்நம் - அந்நத் தின் காரியம், என்ற - எனக் கூறப்பட்ட, அதனாலும்-அத் தன்மையினாலும், மநம் - (சங்கற்ப விகற்ப ரூப) மநம், அல்ல - (ஆத்மா) அன்று, அந்த வகையே - கூறிய வாறே, மதி - (நிச்சய ரூப) புத்தி (யும்), அல்ல - (ஆத்மா) அன்று. எ-று.

கரணம் = கருவி. கருவி, கர்த்தா வாகச் சிலவிடத் துப சரித்துக் கூறப்படினும், உண்மையில் கருத்தா வாத லில்லை யாதலின், மநமும் ஆத்மா வன் றென்பதற்கு, அகக் கரணத் தின் சேர்க்கையில் ஒன்றாக வைத் தெண்ணப்படுதலால் என்பார், "கரணத்தி லொன் றி தெனலால்" என்றனர். சமஷ்டி கரணத்தி லொன் றென்பார், "இன முற எண்ண வுள்ள" என்றனர். அது, வியட்டி யான மற்றைய வெளிக் கரணங்களை விலக்க வந்த அடை யாகும்.

'மன மன்று' 'மதி யன்று' எனப் பாட மோதுவாரு முளர். அல்ல என்பன் ஈண்டு அன்று என்னும் பொருளன வாய் நின்றன. கருவியாகவும், காரியமாகவும், உடைமை யாகவு, முள்ள மநம், கருவி காரிய முடைமை யாகாத ஆந்மா வன் றென்ப தாம். மதியும் கரண முதலிய வாக நிற்றலின், அப்படியே ஆத்மா வன் றென்ப தாம். 53

[விஞ்ஞாந மய கோசத்தில்,
அஹங்காரம் ஆத்மா வன் றென்கின்றார்.]

54 இடரின் புளதாய் நிலையற் றறிவற்
றெண்ணுங் கரணங் களிலா யெவரும்,
அடரும் பிறவிக் கடியென் றுணரு
மகங்கா ரமுநீ யலவென் றறியே.

(இ-ள்.) இடர் - துக்கமும், இன்பு - சுகமும், உளது ஆய்-உடையதாய், நிலையற்று-அசத்தாய், அறிவு அற்று-ஜடமாய், எண்ணும்-கணிக்கின்ற, கரணங்களில்-அந்தக் கரணங் களுள், ஆய் - ஒன்றாய், எவரும் - யாவர்களும், அடரும் - நெருங்கியிருக்கின்ற, பிறவிக்கு - ஜந்மத்திற்கு, அடி-பீஜம், என்று-என, உணரும்-அறிகின்ற, அகங்காரம்-அகங்காரம், நீ-உனது ஸ்வரூபம், அல-அன்று, என்று-என, அறி-உணர் வாயாக. எ-று. (ஏ - அசை)

உகரம் சாரியை. 'இட ரின்புள தாய் என்னும்'.

இவ் வடை முதலிய பலவும், மந முதலியவற்றிற்கும் பொருந்துமேனும் அகங்காரத்திற்கே தலைசிறந்து நிற்றலின், அகங்காரத்திற் கடை யாக்கினார் ஆக்கினுரேனும், மந முதலியனவற்றிற்கும் பொருந்துவன கொள்ள றகும்.

இடரு மின்பமும், அகங்காரத்தாலேயே வருதலால், அவ ற்றை யுடைமையாக்கி, "இட ரின் புளதாய்" என்றனர். 54

[மனோ மய கோசத்தில்,
சித்தம் ஆத்மா வன் றென்கின்றார்.]

55 ஐயப் படலோர் பொருளிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றுமதஞ்,
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே.

(இ ள்.) ஓர்-ஒரு, பொருள்-வஸ்துவை ஐயப்படல்-(இஃதோ இஃதன்றோ என மநம்) சந்தேகப்படுதலையும், நிச்சயம் ஆய்-(இதுவே யென்று) துணி வாக, அறியப்படல்-(புத்தி) உணர்தலையும், யான்-(தேகத்தினை) நான் என்றும், எனது- (தார புத்திர தநாதிகளை) என்னுடையது என்று-என்றும், மதம்-அபிமாநத்தினை, செய்யப்படல்-(அஹங்காரம்) செய்தலையும், சிந்தனை செய்வது - சிந்திப்பது, சித்தம் ஆம்-சித்தமாம், அது-அந்தச் சித்தம், நீ-உனது ஸ்வரூபம், அன்று-அன்று, என-என்று, தெளி-(நன்) குணர்வாயாக. எ-று. (ஏ - அசை)

தாற்பரியம்—மநம் புத்தி அகங்காரங்களின் றொழில்களைச் சிந்திப்பது சித்தம். அதாவது, சிந்திப்பதற்குக் கருவியா யுள்ளது சித்த மாதலின், அக் கருவி. கருவி யாதலின் ஆத்மா வன் றென்பதாம். இங்கே, 'படல்' என்பது, தனித் தனி பொருந்தல் என்னும் பொருளில் வந்தன.

இனி, மநம் ஐயுறுதலைப் பொருந்தற் குரிய பொருளையும், புத்தி, துணி பாக அறிதலை பொருந்தற் குரிய பொருளையும், அகங்காரம் யான் எனவும், எனது எனவும், அகங்கார மமகாரங்களைச் செய்தலைப் பொருந்தற் குரிய பொருளையும், சிந்தனை செய்வது சித்தம் ஆகும். அவ் வாறு சிந்திப்பதற்கு கருவியாகச் சித்த மிருத்தலின், அஃது ஆத்மா வன்று எனப்

பொருள் கூறலும் சாலும். ' ஓர் பொருள் ' என்பதை, நீளக் கூட்டுக ' செய்வது சிந்தனை ' என்பதை, ' சிந்தனை செய் வது ' எனவும், 'சிந்தனையாம்' என்பதி லுள்ள, 'ஆம்' என் பதனைப் பிரித்துச் ' சித்தமாம் ' எனக் கூட்டுக.

அவிரோத உந்தியார்—

ஆங்கார நிச்சயித் தப்புத்தி பற்றலான்
ஓங்குள ளுன்மந முந்தீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்தீபற.

அறிவா னினைவும் அடங்கலாற் சித்தம்
அறிவன் றசித்தாமென் றுந்தீபற
அறிவுன் உருவமென் றுந்தீபற.

எனக் கூறுவதும் உணர்க 55

[40-வது செய்யுள் முதல் 55-வது செய்யுள் (16) வரை, தேகம், இந்திரியம், பிராணன், மநம், புத்தி, சித்தம், அஹங் காரம் என்னும் காரிய சப்த உபாதிகளும், ஆத்மா வல வென வெவ் வே றுகக் கூறியவற்றைத் தொகுத்து ஆத்மா அல்ல என கூறுகின்றுர் ]

56 முன்னு கவுடம் பதுசித் தமதே
முடிவாக மொழிந்த பொருட்டிர டான்,
நின்னு கிலநீ யறியும் பொருளாய்
நிகழ்கின் றதனு லெனநின் மலனே.

(இ-ள்.) உடம்பது-தூல சரீரம், முன் ஆக-முத லாக, சித்தமது-சித்தம், முடிவு ஆக - ஈறுக, மொழிந்த-உபதே சித்த, பொருள் - (காரிய சப்த உபாதிக ளாகிய) வஸ்துக் களின், திரள்-கூட்டம் நீ-நீ, அறியும்-உணர்கின்ற, பொருள் ஆய் - வஸ்துவாய், நிகழ்கின்றதனுல் - விளங்குகின்றதனுல்,

நின் ஆகில-உனது ஸ்வரூபம் அல்ல, என-என்று, நின்மலன்-நந்திபராயண ஸ்வாமிகள் (உபதேசித்தனர்) எ-று.

(ஏ-தான். ஏ-அசைகள்) "உடம்பது" "சித்தமது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. "எனதாடை" என்னுஞ் செய்யுள் முதல், இச் செய்யுள் வரை காரிய சப்த உபாதிக ளெல்லாவற்றையும், ஆத்மா வல்ல வென்று நிஷேதஞ் செய்தமையின், "அந்ந மய கோசம் பிராண மய கோசம், மநோ மய கோசம், விஞ்ஞாந மய கோசம்" என்னும் நான்கு கோசங்களும் சாக்ஷாத் நிஷேதிக்கப்பட்டன வாம். அது கொண்டே, "ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குரித்தே" என்னும் நன் னூல் சூத்திரத்தின்படி, ஆநந்த மய கோசமும் நிஷேதிக்கப்பட்ட தென உணர்க.

அவித்தையின் சத்துவ விருத்தி ஆநந்த மய கோசம் ஆம். கோசம் மறைப்பாம். அந்ந மயம், அந்ந விகாரம், தூல சரீர மாம். பிராண மயம் - பிராண விகார மாம். மநோ மயம்-மநதின் விகார மாம். விஞ்ஞாந மயம் - விஞ்ஞாநம், புத்தி யாம். மயம்-விகாரம் ஆம். அவித்தையின் சத்துவ விருத்தி ஆநந்தம், மயம் - விகாரம் ஆம். விகாரம் என்பது காரியத் திற்காம். தூல சரீர வாயி லாக மறைத்தல்-நான் பருத்தேன், இளைத்தேன் என்ப தாம். சூக்ஷ்ம சரீரத்துள்-பிராண வாயி லாக மறைத்தல். நான் பலவான், நான் துர்ப்பலன் என்ப தாம். மந வாயி லாக மறைத்தல், நான் சங்கற்பவான், விகற்பவான் என்ப தாம். விஞ்ஞாந வாயி லாக மறைத்தல், நான் புத்திமான், நான் அறிவிலி என்ப தாம். ஆநந்த வாயி லாக மறைத்தல் நான் சுகி, துக்கி, ஜடன், என்பதாம். இவ் வாறு, பஞ்ச கோசங்களும் ஆத்மா வாகிய தன்னைக் காரிய ரூபத்தால் மறைத்தலால், பஞ்ச கோசங்களும் ஆத்மா அல்ல. அகந்தா வாகவும், மமதா வாகவும், இரு விதத் தோற்றத் துக்கு விஷய மாவதால், ஆத்மா அல்ல என உணர்க. 53

[ஆசாரியரது உபதேசத்தினைப் பெற்ற சசி வர்நன் மேல் வினவியவற்றைக் கூறுகின்றார்.]

57 உன்னு லறியப் படும்யா வையுமுன்
னுருவன் றெனவோ தினையொக் குமெனக்,
கென்னு லறியா தொழியும் பொருளோ
யானு குவதென் றனனென் றலுமே.

(இ-ள்.) உன்னுல்-நின்னுல், அறியப் படும்-உணரப்படு கின்ற, யாவையும்-எல்லாப் பதார்த்தங்களும், உன்-உனது, உருவு-ஸ்வரூபம், அன்று-அல்ல, என-என்று, ஓதினை-உப தேசித்தீர், எனக்கு-அடியேனுக்கு, ஒக்கும்-(அது) சம்மத மே யாம், யான் ஆகுவது-(ஆயின்) நானுகுவது, என்னுல்-அடியேனுல், அறியாது ஒழியும் - உணரப்படாதிருக்கின்ற, பொருளோ-வஸ்துவோ, என்றனன் எனச் சசிவர்நன் வின வினன், என்றலும்-இவ் வாறு சசிவர்நன் வினவிலும் (நந்தி பரர்யண ஸ்வாமிகள் உபதேசிப்பா ராயினர்), எ-று.

(ஏ-அசை) அன்று என்பது, அல்ல என்னும் பொருளது. 57

[ஆசாரியர் உபதேசித்ததனைக் கூறுகின்றார்.]

58 அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகிந்,
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா
நீயன் றெனவோ துகிரந் தரமே.

(இ-ள்.) அறியா - (பிரத்யக்ஷ மாக) உணரக் கூடாத, பொருள்-வஸ்து, காரணம்-(ஜகத்) காரண மாகிய, மாயை-மாயை யாம், குறித்து-(கடம் படம் எனச்) சுட்டி, அறியும்-உணரப்படுகின்ற, பொருள் - வஸ்து, காரியம் ஆம்-காரிய மாகிய, உலகு-பிரபஞ்ச மாம், இந் நெறியால் - இம் முறை

யால்; திகழ் - விளங்காநின்ற, நான்-நான்கு, மறை-வேதங்களின், அந்தம் - முடி வாகிய (உபநிஷத்துக்கள்), எலாம்-யாவும், நிரந்தரம் - இடையீடின்றி, நீ - உனது ஸ்வரூபம், அன்று- (மாயையும் மாயா காரியமும்) அல்ல, என-என்று, ஓதும்-கூறுகின்றன. எ-று. (ஏ - அசை)

ஆகமங்களை ஒப்புக்கொள்பவரும், ஒப்புக்கொள்ளாதவரு மாகிய சைவ வைஷ்ணவ கௌதம கணாத மத வாதிகள் எல்லாராலு மொப்புக்கொள்ளப்பட்டுப் பிரமாண நூலாக விளங்கு மென்பார், "திகழ் நான் மறை யந்தம்" என்றனர். "வேத நெறி" என்று மாறுபடாமல் ஒருபடித்தாக விளங்குவதா லன்றோ, சங்கச் சான்றோர், "நால் வேத நெறி திரியினும்" (புறம்) எனக் கூறுவா ராயினர். வேத வசநத்திற்கு மாறுபட்ட வசந மெல்லாம் பிரமாண மாகா என்பதற்கே, "திகழ்" என, ஞாபிக்கு மடையிட்டன ரென்க. 58

[எனது ஸ்வரூபம் யாது என வினவிய சசி வந்நனுக்கு, ஆசாரியர், யதார்த்த ஸ்வரூபத்தினை உபதேசித்தன ரென்கின்றார்.]

59 அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவா கியநீ யெனுமப் பொருடான்,
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே.

(இ-ள்.) அறியும் - உணரப்படுகின்ற, பொருள்-(காரியப் பிரபஞ்ச) வஸ்துக்கள், அன்று - (உனது ஸ்வரூபம்) அன்று, அறியா-உணரப்படாத, பொருள்-(காரண மாகிய) மாயை (யும்), அன்று-(உனது ஸ்வரூபம்) அன்று, நீ யாகிய-உனது (ஸ்வரூபம்) ஆக வுள்ள, அறிவு - அறிவு ஸ்வரூபம்,

எனும் - என்று வேதங் கூறுகின்ற, [பிரம்மம் இந்திரிய கோசர பிரத்தியக்ஷ விஷய மன்று. சப்தத்தா லறியப்படும் பிரத்தியக்ஷ மாகு மாயினும், சப்த சக்தி விருத்தியினால் பிரத்தியக்ஷ விஷய மாகாமல் லக்ஷணு விருத்தியினால் பிரத்தி யக்ஷ விஷய மாம் என்கின்றார் ] அப் பொருள்-அந்த வஸ்து, பொறியின்-இந்திரியங்களினது, வழி நின்று-வாயிலா யிருந்து, அறியும் - உணரப்படுகின்ற, பொருளோ - வஸ்து வாமோ (ஆகா தென்றபடி), போதக் கண் -(ஆனால்) லக்ஷணுவிருத்தி யோடு கூடிய தத்துவமஸி மஹாவாக்கிய சிரவணத்தா லுண் டாகும் ஞான திருஷ்டியினால், விழித்து-பார்த்து, அறியும்-உணரப்படுகின்ற, பொருள்-வஸ்து வாம். எ—று.

( ஏ - தான் - அசைகள்)

"போதக் கண் விழித் தறியும் பொருள்" என்றது, அகண்டாகார லக்ஷணு விருத்திக்கு விஷயமாந் தன்மையினை என் றுணர்க. ஆகிய, என்பதில், ஆகு, அல்லது, ஆ என்பது அபேதப் பொருளைக் குறித்து நின்றது; "நீயாம்" "சாத்த னுவன்" என்புழிப் போல. 59

[கர்ம ஞானங்களைக் கூறும் வேதத்திற்குத் தாத்பரியம் ஞானமே என்கின்றார்.]

**60 வேதப் பொருடா னிதுவே றுசொலும்**
**வினையா வையுமன் றெருவே றுமிலாப்,**
**போதப் பொருளந் தமறைக் கணியாம்**
**புனிதப் பொருடத் வமசிப் பொருளே.**

(இ-ள்.) இது-இப் பொழுது கூறியது, வேதப் பொருள்-வேதத்தின் சிறந்த அர்த்த மாம், வேறு - (இதற்கு) அந்நிய மாக, சொலும்-கூறுகின்ற, வினை-கர்மோபாசனைகள், யாவை

யும்-யாவும், அன்று - (வேதத்தின் சிறந்த அர்த்தம்) அல்ல, [ஆத்ம ஸ்வரூபத்தினையும், அது வேதத்தில் மஹா வாக்கியத்தினால் உபதேசிக்கப்படு மென்பதையும் கூறுகின்றார்.] ஒரு - (இனி அது) இறையளவேனும், வேறு - (சுவகதாதி) பேதம், இலா-இல்லாத, போத - சித்ரூப மான. பொருள்-வஸ்துவும், மறைக்கு-வேதத்தின், அந்தம்-அந்தமான (உபநிஷத்துக்களில்), அணி ஆம் - அலங்காரமாக விளங்குவதும், தத் த்வம் அசி-(ஆகலின்) தத் த்வ மசி (மகாவர்க்கிய), பொருளே - அர்த்தமும், புநித - பரிசுத்த மான, பொருள்-அர்த்தமு மாம். எ-று. (தான் - ஏ - அசை)

ஜீவேசுவர பேத நிவிர்த்தி பூர்வக பரமாகிய அர்த்தங்களை உணர்த்தும் வாக்கியம் தத்வம் அசி மகா வாக்கியம் ஆம். சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தினது ஆறுவது பிரபாடகத்தில், சுவேத கேது என்னும் தமது புத்திரனுக்கு, உத்தாலக முநிவர் ஒன் பது முறை உபதேசித்த வாக்கியம் இந்தத் "தத் த்வ மசி" மகா வாக்கிய மாம். ரிக் வேதத்தினது ஐதரேய உபநிஷத்தின் மகா வாக்கியம் "பிரஞ் ஞாநம் பிரஹ்மம்" என்ப தாம். யஜுர் வேதத்தினது பிரஹதாரண்ய உபநிஷதத்தின் மகா வாக்கியம் "அஹம் பிரஹ்ம்மாஸ்மி" என்ப தாம். அதர்வண வேதத்தின் மாண்டூக்ய உபநிஷதத்தின் மகா வாக்கியம் "அயம் ஆத்மா பிரஹ்மம்" என்ப தாம். இவ் வாறு, நான்கு வேதத்தும் நான்கு மகா வாக்கியம் உள்ளது. தத் த்வம் அசி உபதேச வாக்கியம், முன்னிலை யாம். 'அஹம் பிரஹ்மாஸ்மி' அநுசந்தாந வாக்கியம், தன்மையி லாம். "அயம் ஆத்மா பிரஹ்மம்" மகா வாக்கியம், படர்க்கை. சம்மதி வாக்கிய மாம். "பிரஞ்ஞாநம் பிரஹ்மம்" என்பது, அப்பியாச வாக்கியம் ஆம். நான்கும் ஒருமையி லாம்.

o

ரீபு கீதை—

"சுயம்பதுவாம் தத்வமசி என்னும் வாக்கியம்
சொல்லுமுப தேசமகா வாக்யம் ஆகும்,
இயலும்கம் பிரஹ்மாஸ்மி என்னும் வாக்கியம்
இலகுமநு பூதிமகா வாக்கியம் ஆகும்,
மயல்மருவாப் பிரஞ்ஞாநம் பிரம் வாக்கியம்
மாநநத்தின் அப்யாச வாக்கியம் ஆகும்,
அயம்ஆந்மாப் பிரஹ்மமென அறையும் வாக்யம்
அதற்கெல்லாம் சம்மதமாம் வாக்கியம் ஆமே."

"ஆதலினுல் தத்துவமசி வாக்கி யத்தால்
அருளியவா றகண்டார்த்தம் அறிந்து கொண்டு,
பேதமறப் பிரஞ்ஞாநம் பிரமம் என்று
பேசுமகா வாக்கதனுல் மாநஞ் செய்து,
வாதகமில் அயம்ஆந்மாப் பிரமம் என்னும்
வாக்கதனுல் சரியெனவே சம்ம தித்திங்,
கோதுமகம் பிரஹ்மாஸ்மி வாக்கி யத்தால்
உரைத்தவகண் டார்த்தத்தை அநுப விப்பாய்."

என்று கூறுவதாலும் உணர்க. 60

[மஹா வாக்கியத்தின் மூன்று பதங்களின் பொருளை அறிவிக்கின்றுர்.]

61. நிமல மாம்பர மதுவெ னும்பொரு
ணீயெ னும்பொருள் சீவனே,
அமல மானவி ரண்ட யிக்கிய
மசிப தப்பொரு ளாவதே.

(இ-ள்.) அது - தத், எனும் - என்னும் பதத்தினது, பொருள் - அர்த்தம், நிமலம் ஆம் – நிர்மல மாகிய, பரம்-

ஈசுவர னுவன், நீ - த்வம், எனும் - என்னும் பதத்தினது, பொருள்-அர்த்தம், சீவன்-ஜீவ னுவன், அசி - இருக்கின்றாய் (ஆகின்றாய்), பத - (என்று கூறும்) பதத்தின், பொருள்-அர்த்தம், அமலம் ஆன-நிர்மலமான, இரண்டு-ஜீவேசுவரர் களின், ஐக்கியம் ஆவதே - ஏகத்வம் ஆவதே யாம். எ-று. (ஏ – அசை)

'தத்துவமஸி' என்னும் மகா வாக்கியத்தில், 'தத்' என்பது, ஈசுவரனையும், 'துவம்' என்பது, சீவனையும், 'அஸி' என்பது, இரண்டு பொருளும் ஒன்றே என்னு மிரண்டின் அபேதத்தையும், உணர்த்துகின்றன என்ப தாம்.

சீவ ஈசுரர்கள் உபாதியோடு கூடிய நிலையில் வேறாகவே புலப்படுவர், உபாதிகளை நீக்கி, அவர்களின் சேதந ஸ்வ ரூபத்தை நோக்கு நிலையில், ஒன்றாகவே புலப்படுவர். அவ் வபேதத்தினையே, "அஸி" பதம் புலப்படுத்து மென்பார், "அமலமான விரண்டயிக்கிய மஸிபதப் பொரு ளாவதே" என்றனர். அஞ்ஞானாவரிதன் சீவன், அஞ்ஞான நிராவரிதன் ஈசுவரன் என்பார், 'நிமலாம் பரம்' என்றனர். 61

[சசி வர்ணன் சங்கையை அறிவிக்கின்றார்.]

62 அருமை யாகிய பிரம முன்னிலை
யாகு மாருயிர் பின்னிலை,
இருமை யானவி ரண்ட யிக்கிய
மெய்து மாறெவ னென்னவே.

(இ-ள்.) அருமை ஆகிய- எளிதின் அடையக் கூடாத தாகிய, பிரமம்-பிரஹ்மம், முன் இலை ஆகும்-பரோக்ஷமாம், ஆர் உயிர் - (பொருந்தியிருக்கின்ற) ஜீவர்கள், பின் இலை- பிரத்யக்ஷ மாவர், இருமை ஆன - (ஆதலின்) பிரத்யக்ஷ

பரோக்ஷ தர்மங்களாற் பேத மான இரண்டு - ஜீவேச்வரர் களின், ஐக்கியம் - ஏகத்வம், எய்தும் ஆறு - பொருந்தும் விதம், எவன்-யாங்ஙனம். என்ன-என்று சசி வங்ஙன் பிரார்த் திக்க (நந்தி பராயண ஸ்வாமிகள் உபதேசிப்பா ராயினர்) எ-று. (ஏ - அசை)

'உயிர்' என்பது, பிராணனுக்கும், ஆங்மாவிற்கும், பெய ராக நிற்றலின், பிராணனை நீக்கி ஆங்மாவை (சீவாங்மாவை) யுணர்த்த 'ஆருயிர்'' என்றல் தமிழ் மரபு. அது, அறிவு இச்சை செயல் பொருந்திய உயிர் எனப் பொருள்பட்டுச் சீவாங்மாவை யுணர்த்துகின்ற தென்னலாம். 62

[அபேதத்தினை அறிவிப்பான் கருதி,
ஜீவேச்வர பேதத்திற்குக் காரணங் கூறுகின்றார்.]

63 **உபாதி யால்வரு பேத மேயிவர்**
**பேத மன்றுரு வுயிரினின்,**
**கபாதி யாமுடல் போலி றைக்குள**
**கார ணாதிகள் காயமே.**

(இ-ள்.) இவர் - இச் சீவேசுவரர்களுக்குள்ள, பேதம்- வேறுபாடு உபாதியால் (சர்வக்ஞத் தன்மை, கிஞ்சிஞ்ஞத் தன்மை ஆகிய) செயற்கையினாலே, வரு-உண்டான, பேத மே - வேறுபாடே யன்றி, உரு - சொரூபத்தினால், அன்று- (வேறு பாடு) இல்லை, [ஈசுவரனுக்கும் உபாதி யுளதோ வெனிற் கூறுகின்றார்.] உயிரினின் - ஜீவனுக்கு, கப ஆதி ஆம்-கபம் முதலியவற்றிற்கு, உடல்-(ஸ்தாநமா யிருக்கின்ற, காரிய சப்த உபாதிகள், போல் - (இருப்பன) போல், இறைக்கு-பரமேச்வரனுக்கும், காரண ஆதிகள் - சர்வ கார ணத் தன்மை முதலியன, காயம் - சரீர ரூப காரண சப்த உபாதி யாக, உள - இருக்கின்றன. எ-று. (இன்-சாரியை ஏ. - அசை) 63

[ஈச்வர உபாதி யாகிய காரண சப்த உபாதிகளைக் கூறுகின்றார்.]

64 ஈசன் முற்றறி வான்வி யாபி
யெவைக்கு மேதுவி யம்புமா,
காச கன்னிரு பாதி பாவனை
கார ணாதிக ளாவதே.

(இ-ள்.) ஈசன்-சர்வேச்வரன், முற்று அறிவான்-சர்வக்ஞன் வியாபி - சர்வ வியாபகன், எவைக்கும் ஏது - சர்வ காரணன், இயம்பும்-கூறாநின்ற, ஆகாசகன்-சர்வ சிருஷ்டா, பாவனை-சர்வ திதியுடையோன், நிருபாதி - சர்வ சம்மாரன், காரண ஆதிகள் ஆவது- (என்று கூறுதலின், சர்வேச்வரத் தன்மை, சர்வஞ்ஞத் தன்மை, சர்வ வியாபகத் தன்மை, சர்வ காரணத் தன்மை, சர்வ சிருஷ்டித் தன்மை, சர்வ திதித் தன்மை, சர்வ சம்மாரத் தன்மை, என்பன முற் கூறிய) சர்வ காரணத் தன்மை முதலிய காரண சப்த உபாதிக ளாம். எ-று. (ஏ - அசை)

"காரணாதிகள் ஆவது" என்பதில், ஆவது என்பது, 'ஆதல்' என்னுந் தொழிற் பொருளதாய் நின்றது.

தத்வாமிர்தக் கட்டளை, தத் பத முக்கிய பர உபாதி கூறுமிடத்து,

1. சர்வேசுவரன் என்பான் ஏன் எனின், இந்திரியங்களுக் கெல்லாம் மேலாய் நின்று விளங்குதலாலே, சர்வேசுவரன் என்னும் நாமம் உண்டாயிற்று.

2 சர்வஞ்ஞன் என்பான் ஏன் எனின், இந்திரியங்கள் எல்லாம் ஒன் றறிந்த தொன் றறியாமையானும், தான் சர்வத்தையும் அறிவதனானும், சர்வஞ்ஞன் என்னும் நாமம் உண்டாயிற்று.

3 (சர்வ வியாபகன்) சர்வ அந்தரியாமி என்பான் ஏன் எனின், இந்திரியங்களுக் கெல்லாம் உள் ளீடாய் நின்று அறித லாலே, சர்வாந்தரியாமி என்னும் நாமம் உண்டாயிற்று.

4 சர்வ காரணன் என்பான் ஏன் எனின், இந்திரியங்கள் எல்லாம் அழிந்தும், தான் அழியாமல் இருந்தலினுனே, சர்வ காரணன் என்னும் நாமம் உண்டாயிற்று.

5. சர்வ சிருஷ்டா என்பான் ஏன் எனின், இந்திரியங்கள் எல்லாம் தனக்குள் தோன்றுதலாலே, சர்வ சிருஷ்டா என்னும் நாமம் உண்டாயிற்று.

6. சர்வ திதி யுடையோன் என்பான் ஏன் எனின், இந்திரியங்களை எல்லாம் தானே இரக்ஷித்தலினுலே, சர்வ ஸ்திதி யுடையோன் என நாமம் உண்டாயிற்று.

7. சர்வ சம்மாரன் என்பான் ஏன் எனின், இந்திரியங்கள் எல்லாம் தனக்குள் அடங்குதலினுலே, சர்வ சம்மாரகன் என நாமம் உண்டாயிற்று. என்று கூறுதலாலும், காரண சப்த உபாதியை உணரலாம். காரண சப்த உபாதிகளும், இந்திரியங்களின் மேற்ற தாம் என்று தத்வாமிர்தக் கட்டளை கூறுகின்ற தென ஊகித்துணர்க.

காரிய சப்த உபாதி, காரண சப்த உபாதிக் குதாரணம்.

திரு மந்திரம் எட்டாம் தந்திரம் 28-காரிய காரண உபாதி 250

"செற்றிடும் சீவ உபாதித் திறன்ஏழும்,
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை,
உற்றிடும் காரிய காரணத் தோடற,
அற்றிட அச்சிவம் ஆகும் அணுவனே."

என்பதனுனும் உணர்க. 64

[உபாதிகளை நீக்குதற்குத் தத் த்வம் பதங்களி லுள்ள சுத்த அசுத்தங்களைக் கூறு வாம் எனக் கூறுகின்றார்.]

65 நீதி யாலிரு பாதி நீக்கிட
நீயெ னச்சொல்ப தத்தினும்,
ஆதி யாகிய தற்ப த்தும்
சுத்த சுத்தமு ரைத்துமே.

(இ-ள்.) நீதியால்-(சாஸ்திரத்திற் கூறிய) கிரமத்தினால், இரு-(காரிய காரண மாகிய) இரண்டு, உபாதி - உபாதிகளையும், நீக்கிட-நிவிர்த்தித்தற்கு, நீ-த்வம், என-என்று, சொல்-கூறும், பதத்தினும்-பதத்தினிடத்தும், ஆதி ஆகிய-முதன்மை யாகிய, தத் - (அது என்னும்) தத், பதத்தும் - பதத்தினிடத்தும், அசுத்த சுத்தம்-(உள்ள) அசுத்த சுத்த அர்த்தங்களை, உரைத்தும்-கூறுவாம். எ-று. (ஏ - அசை)

'பதத்தினும்' 'பதத்தும்' என்னும் உம்மைகள் எண்ணின்கண் வந்தன.

சிதம்பர சுவாமிகள் செய்த, திருப் போரூர் சந்நிதி முறை—

"சித்தொரு நான்கில் பிரமகூ டத்தன்
செப்புமா யாசகி தங்கள்,
மத்தமி லீசன் உயிர்கடா மாயா
சகிதங்கள் வழுத்துமிவ் வீசன்,
சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினுற்
றகுத்தி தேடிலன் சீவன்,
பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான்
போரிவா ழாறுமா முகனே."

என்று கூறுவது உணரற்பாற்று. 65

[த்வம் பதத்தின் சுத்த அசுத்தங்களைக் கூறுகின்றார்.]

66 ஆக முன்றிக ழேழு நானெனு
றெம்ப தத்தில சுத்தமே,
சோக மின்றிய சான்று நானெனு
றெம்ப தப்பொருள் சுத்தமே.

(இ-ள்.) ஆகம்-(தூல) சரீரம், முன்-முத லாக, திகழ்-விளங்காநின்ற, ஏழும் - (சித்த பரியந்த மான) ஏழினையும் (பிரதிபிம்ப சைதந்யத்தினையும் சேர்த்து), நான்-(அகம் சப்தார்த்த மான) ஆத்மா, எனல் - என்று கருதுதல், தொம் பதத்தில்-நீ என்னும் பதத்தினிடத் துள்ள, அசுத்தம்-அசுத்தார்த்த மாம், சோகம்-துக்கம், இன்றிய-நீங்கிய, சான்று ஏ-சாக்ஷியே, நான்-(அகம் சப்தார்த்த மான) ஆத்மா, எனல்-என்று துணிதல், தொம் பத - நீ யென்னும் பதத்தினிடத் துள்ள, சுத்தம் பொருள்-சுத்தார்த்த மாம். எ-று.

(ஏ—அசை) ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 66

[தத் பதத்தின் சுத்த அசுத்தங்களைக் கூறுகின்றார்.]

67 அகில காரண மாதி நானெனு
றற்ப தத்தில சுத்தமே,
சகல காரண சான்று நானெனு
றற்ப தப்பொருள் சுத்தமே.

(இ-ள்.) அகில காரணம் ஆதி-சர்வ காரணத் தன்மை முதலிய (ஏழினையும்), (பிரதிபிம்ப சைதந்யத்தினையும்), நான்-(அஹம் சப்தார்த்த மான) பிரஹ்மம், எனல்-என்று கருதுதல், தத் - அது (என்னும்), பதத்தில் - பதத்தினிடத் துள்ள, அசுத்தம் - அசுத்தார்த்த மாம், சகல காரண - சர்வ காரணத் தன்மை (முதலிய காரண சப்த உபாதிகட்கும்),

சான்று ஏ - சாக்ஷியே, நான்-அஹம் சப்தார்த்த மான பிரஹ்மம், எனல்-என்று துணிதல், தத்-அது (என்னும்), பதம்-பதத்தினிடத் துள்ள, சுத்தம் பொருள் - சுத்தார்த்த மாம். எ-று. (ஏ – அசை)

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 67

[அசி பத அர்த்தத்தினைக் கூறுகின்றார்.]

68 செறிந்த காரண காரி யங்கள்சி
 தைந்து மேலுறு சித்ததாய்,
அறிந்த வாதனை தானு மற்றதவ்
 வசிப தப்பொரு ளாவதே.

(இ-ள்) செறிந்த-நெருங்கியிருக்கின்ற, காரண காரியங்கள்-காரண சப்த உபாதி காரிய சப்த உபாதிகள், சிதைந்து-நாசம் உற்று, மேல் உறு-பின் எஞ்சியுள்ள, சித்து அது ஆய்-த்வம் பத லக்ஷியார்த்த கூடஸ்த ராக, தத் பத லக்ஷியார்த்த பிரஹ்ம மாக, அறிந்த - உணர்ந்த, வாதனை உம் - சம்ஸ்காரமும், அற்றது - நீங்கியது, அவ் அசி பத - முன்னர்க் கூறிய "இருக்கின்றாய்" என்னும் பதத்திற்கு, பொருள் ஆவது - அர்த்த மாம். எ-று. (தான் - ஏ - அசை)

"சித்தது ஆய்" என்பதில் உள்ள அது பகுதிப்பொருள் விகுதி. 68

[அசுத்த சுத்த அர்த்தங்களை, ஏனைய சாஸ்திரங்களில், வாச்சியார்த்தம் லக்ஷியார்த்தம் எனக் கூறுவர் என்கின்றார்.]

69 அசுத்த மாகிய திருப தத்தினு
 முக்கி யப்பொரு ளாகுமே,
விசுத்த மானதி லக்கி யப்பொரு
 ளென்று சொல்லுவர் விமலரே.

(இ-ள்.) இரு - (தத் த்வம் என்னும்) இரண்டு, பதத்தினும் - பதங்களி னிடத்தும் (உள்ள), அசுத்தம் ஆகியது-(சுத்தம்) அசுத்தம் ஆகிய அர்த்தத்தினை, முக்கியப் பொருள் ஆகும் - (வேறு சாஸ்திரங்களில்) முக்கியார்த்தம் (வாச்சியார்த்தம் அபிதார்த்தம்) என்று கூறுவர், விசுத்தம் ஆனது-சுத்தார்த்தத்தினை, இலக்கியப் பொருள் - லக்ஷியார்த்த மாம், என்று-என, விமலர்-நின்மலமான பெரியோர், சொல்லுவர்-கூறுவர். எ—று. (ஏ - ஏ - அசை)

"நிமலமாம் பரம் அது" என்னுஞ் செய்யுளில், தத் பத வாச்சியன் ஈசுவரன், த்வம் பத வாச்சியன் ஜீவன் எனக் கூறி, தத் த்வ மசி மஹா வாக்கியத்தால், ஐக்கியங் கூறினார். அதன் பின், பரோக்ஷ அபரோக்ஷங்கட்கு, ஐக்கியங் கூடாதென்னும் ஆக்ஷேபம் உண்டாக, உபாதியினால் வந்த, பரோக்ஷ அபரோக்ஷங்களை அன்றி, உண்மையில் இல்லை என உணர்த்தி, மேல் சப்த உபாதிகளை விளக்கி, இச் சப்த உபாதிகளை அசுத்த மென்றும், சேதநம் சுத்த மென்றும் உரைத்து, இச் செய்யுளில், சப்த உபாதிக ளாகிய அசுத்தார்த்தமே வாச்சியார்த்த மென்றும், மேலும், "முரண்ட சீவ பரங்கள் தம்முடல் முத்தியுப்பொரு ளாவது" என்றும், கூறுகின்றமையின், ஜட மாகிய (ஸ்தூல சூக்ஷ்ம சரீர) காரிய சப்த உபாதிகளும், காரண சப்த உபாதிகளும் வாச்சியார்த்த மெனப் பிரதீதி யாகின்றது, அங்ஙனம் பொருளாயின், ஏனைய வேதாந்த சாஸ்திரங்களோடு முரணு மாகலின், சிஹ்ம அவலோகந நியாயத்தால், முன்னும், பின்னும், உற்று நோக்கின், "நிமலமாம் பரம் அது" என்ற செய்யுள் முதலியவற்றால், உபாதி விசிஷ்ட சேதநமே, தத் பத, த்வம் பத வாச்சிய மென விளங்குகின்றமையின், அசுத்தம் சுத்தம் இரண்டும் சேர்ந்தே வாச்சிய மெனக் கொள்க.

[த்வம் பத, தத் பதங்களின் வாச்சியார்த்த
லக்ஷியார்த்தங்களைக் கூறுகின்றார்.]

70 முரண்ட சீவப ரங்க டம்முடன்
முக்கி யப்பொரு ளாவதே,
இரண்டில் வேற று சிற்சொ ருபமி
லக்கி யப்பொரு ளாவதே.

(இ-ள்.) முரண்ட-(பரஸ்பரம்) விரோத முடைய, சீவ பரங்கள்-ஜீவேசுவரர்களினது, உடல்-ஸ்வருபங்கள், முக்கி யப் பொருள் ஆவது-முக்கியார்த்த மாம், இரண்டில்-ஜீவேச் வரர்களிடத்து, வேறு அறு-அபேதமாயிருக்கின்ற, சித் ஸ்வ ரூபம்-அறிவு ஸ்வரூபம், இலக்கியப் பொருள் ஆவது-லக்ஷி யார்த்த மாம். எ-று. (தம் - ஏ - ஏ - அசை)

'உடல்' என்பதை, ஸ்தூல சூக்ஷ்ம சரீரம் என்று பொருள் கொண்டால், விரோதம் உண்டாம். அதனால், 'உடல்' என்னும் சொல்லுக்கு, ஸ்வரூபம் என்று பொருள் கொள்க. 70

[ஜீவேசுவரர்களின் சொருபங்களிலுள்ள விரோத பாகங்களை லக்ஷணையினால் நீக்கினால், ஐக்கியம் உண்டாம் என்கின்றார்.]

71 ஊக்கி யப்பர சீவர் தங்களு
டம்பி ரண்டுமி லக்கணை
வாக்கி யப்படி நீக்கி னொரு
வத்து வேபர வத்துவே.

(இ-ள்.) ஊக்கிய-(சர்வஞ்ஞத் தன்மை யாகிய) உயர் வினையுடைய, பர-ஈசுவரன், சீவர்கள்-(கிஞ்சிஞ்ஞத் தன்மை யாகிய தாழ்வினையுடைய) ஜீவர்கள், உடம்பு-(ஆகிய இவர் களது) ஸ்வரூப ரூப சரீரங்கள், இரண்டும்-இரண்டினையும்,

இலக்கணு வாக்கியப்படி-(பாகத் தியாக) லக்ஷணு வாக்கியப் பிரகாரம், நீக்கினுல்-ஙேதி செய்தால், பர வத்து - பிரஹ்மம், ஒரு வத்து ஏ-ஏகமே உள தாம். எ-று. (தம்-ஏ-அசை) 71

[லக்ஷணை மூ வகைத் தென்கின்றார்.]

72 ஓரில் விட்டதும் விட்டி டாதது
முபய மும்மென வுணர்வுளோர்,
தேரி லக்கணை திரிவி தத்திலி
சைப்பர் மற்றதி யம்புவாம்.

(இ-ள்) ஓரில் - விசாரிக்கு மிடத்து, விட்டதும்-ஜகத் லக்ஷணையும், விட்டிடாததும்-அஜகத் லக்ஷணையும், உபய மும்-ஜகத் அஜகத் லக்ஷணையும், என-என்று, இலக்கணை-லக்ஷணையினை, திரி விதத்து - மூ வகைத் தாக, தேர் - அப ரோக்ஷ சாக்ஷாத்கார, உணர்வுளோர் - ஞானத்தினை யுடைய பெரியோர், இசைப்பர்-கூறுவர், அது-அதனை, இயம்பு வாம்-கூறு வாம். எ-று. (மற்று - இல் - அசை) 72

[விட்ட லக்ஷணைக்கு உதாரணங் கூதுகின்றார்.]

73 மஞ்சு கூப்பிடு தென்றல் போலவும்
வடப கீரதி யுள்ளதே,
விஞ்சு கோஷம தென்றல் போலவும்
விட்ட லக்கணை யாவதே.

(இ-ள்.) மஞ்சு - கட்டில், கூப்பிடுது - கரைகின்றது, என்றல்-எனக் கூறுதல், போலவும்-போன்றும், வட-வட திசைக்கண், பகீரதி-கங்கையில், விஞ்சு-பெரிய, கோஷமது-இடைச்சேரி, உள்ளது - இருக்கின்றது, என்றல் - எனக் கூறல், போலவும் - போன்றும், விட்ட லக்கணை யாவது-(உள்ள வாக்கியங்கள்) ஜகத் லக்ஷணை யுடையன வாம். எ-று. (ஏ - ஏ - அசை)

"ஆவது" என்பது, ஆகும் என்னும் பொருளது. "அந்ந ரச மயனே ஆத்மா" என்பது, ஜகத் லக்ஷணை யுடைய தாம். "கோஷமது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. 73

[விடாத லக்ஷணைக்கு உதாரணங் கூறுகின்றார்.]

74 சிவலை நின்றது வெள்ளை போயின
தென்று செப்புதல் போலவே,
கவலை யின்றிவி டாத லக்கணை
யென்று நீகொள்க ருத்திலே.

(இ-ள்.) சிவலை - சோண (வர்ணம்), நின்றது நிற்கின்றது, வெள்ளை-ஸ்வேத (வர்ணம்), போயினது-சென்றது, என்று-என, செப்புதல்-கூறுதல், போல-போல (வருவன), விடாத லக்கணை - (வாக்கியங்களை) அஜகத் லக்ஷணை யுடையன வாம், என்று-என, கவலை - துக்கம், இன்றி-அற்றவனாய், நீ-உனது, கருத்தில்-மநதில், கொள்-தரித்துக் கொள்வாயாக. எ-று. (ஏ - ஏ - அசை)

"சத்திய ஞாநாநந்தம்" என்னும் வாக்கியம், அஜகத் லக்ஷணை யுடைய தாம்.

"செவலை" என்பது, நல்ல பாடம் என்பர், சொற்குண மறிந்தோர். அதுவே, செம்மையை; செந் நிறத்தை யுணர்த்த வல்ல தாகு மாதலின். 74

[விட்டு விடாத லக்ஷணைக்கு உதாரணங் கூறுகின்றார்.]

75 மேவும் விட்டுவி டாத லக்கணை
மெய்ம்மை யாதெனி னந்தவித்,
தேவ தத்தனெ னும்பொ ருட்படி
சிந்தை செய்திடு தீரவே.

(இ-ள்.) மேவும் - (மஹா வாக்கியத்திற் குபயோக மாகப்) பொருந்தியிருக்கின்ற. விட்டு விடாத லக்கணை-ஜகத் அஜகத் லக்ஷணையின், மெய்ம்மை-ஸ்வருபம், யாது எனின்-ஏது என்று வினவில், அந்த இத் தேவதத்தன் - ஸோயஞ் தேவதத்த:, எனும் - என்னும் பொருட்படி - வாக்கியம் போல (உள்ள வாக்கியங்கள் ஜகத் அஜகத் லக்ஷணை யுடையன வாம் என்று), தீர-நிச்சய மாக, சிந்தை செய்திடு-சிந்திப் பா யாக. எ று. (ஏ - அசை)

பொருளை யுணர்த்தும் வாக்கியத்தைப் பொருள் என உபசரித்தார். 'எல்லே யிரக்கம்' (தொல்) என்பது, முதலிய நூற்பாக்களில், சொல்லையும் பொருளையும், வேற்றுமை யின்றிக் கூறலையுங் காண்க. "அதுவாகு கிளவி" (தொல்-சொல்.) என்பது முதலிய இடங்களில், சொல், ஆகு பெய ராகப் பொருள் என்பதுபட வரல் போலப். பொருள் என் பது, தொடர்ச் சொல் என்பதுபட வந்தது எனினுமாம். 75

[மூ வகை லக்ஷணைகளுள், ஜக தஜகத் லக்ஷணையே மஹா வாக்கியத்திற் குபயோகமா மென்கின்றார்.]

76 **விட்ட லக்கணை தனையும் விட்டுவி**
**டாத லக்கணை தனையும்நீ,**
**விட்டு விட்டுவி டாத லக்கணை**
**யால்வி ளங்குவி ளங்கவே.**

(இ-ள்.) விட்ட லக்கணை தனையும்-ஜகத் லக்ஷணையினையும், விட்டு - (மஹா வாக்கியத்திற்கு உபயோகம் இன்மை யினால்) நீக்கி, விடாத லக்கணைதனையும் - அஜகத் லக்ஷணை யினையும், விட்டு-நீக்கி, விட்டு விடாத லக்கணையால் - ஜகத் அஜகத் லக்ஷணையினால், விளங்க - நன்றாக, நீ - நீ (உனது

ஸ்வரூபத்தினை) [பிரத்திய கபிந்ந பிரஹ்மம் என நின்னை] விளங்கு-அறிவாயாக. எ—று. (தன் தன் - ஏ - அசை) 76

[பாகத் தியாக லக்ஷணையினால் மஹா வாக்கியத்திற்கு அர்த்தங் கொள்ளும் வழி கூறுகின்றார்.]

77 போது மேவிய தேசம் விட்டொரு
புருட னைக்கொளு மாறுபோல்,
ஓது மீருடல் கண்டு விட்டத
னுண்மை காணவு ணர்ந்திடே.

(இ-ள்.) போது - காலத்தினையும், மேவிய - பொருந்தியிருக்கின்ற, தேசம்-இடத்தினையும், விட்டு-(விரோதப்படுதலின்) நீக்கி, ஒரு-ஒரு, புருடனை-தேவ தத்த பிண்டத்தினை, கொளும் ஆறு-(ஸோயம் தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்கு) கொள்ளுகின்ற முறைமை, போல்-போல, ஓதும்-கூறுகின்ற, ஈர்-(காரிய சப்த காரண சப்த உபாதிகளாகிய) இரண்டு, உடல் - சரீர (ஸ்வரூப)ங்களை, கண்டு - (விரோதமுடையன வென்று) உணர்ந்து, விட்டு - நீக்கி, அதன் - மஹா வாக்கியத்தின், உண்மை - யதார்த்தப் பொருளினை, காண-அபரோக்ஷ மாக, உணர்ந்திடு-(நீ) அறிவாயாக. எ—று.

(ஏ—அசை) 'போது' எனவே, இறந்த காலம் முதலியனவே யன்றி, இளமைப் பருவ முதலியனவுங் கொள்ளப்படு மென்க. 'உண்மை யுணர்ந்திடு' என்னாது, 'உண்மை காண வுணர்ந்திடு' என்றமையால், 'காண' என்பதற்கு, அபரோக்ஷ மாக எனப் பொரு ளுரைக்கப்பட்டது. 77

இதுவு மது.

78 பிரியா வுயிர்கா ரியமா முடலும்
பிரமத் துறுகா ரணமா முடலும்,

கரியா இயவா தனையுங் கழியக்
காட்டும் படிகண் டுகொள்கண் ணுறவே.

(இ-ள்.) உயிர்-ஜீவனை, பிரியா-விட்டு நீங்காத, காரியம் ஆம்-காரிய மாகிய, உடலும் - ஸ்வரூப ரூப (சப்த) உபாதிகளும், பிரமத்து - ஈச்வரனிடத்து, உறு - பொருந்தியிருக்கின்ற, காரணம் ஆம்-காரண மாகிய, உடலும்-ஸ்வரூப ரூப (சப்த) உபாதிகளும், கரி ஆகிய - (தத் த்வம் பதங்களின்) சாக்ஷி எனும், வாதனையும்-சம்ஸ்காரமும், கழிய-நீங்குதற்கு, காட்டும்படி - (யாம்) அறிவிக்கின்ற பிரகாரம், கண் உற - அபரோக்ஷ மாக, கண்டு கொள் - அறிந்து கொள்வா யாக. எ-று. (ஏ - அசை)

'வாதனையும்' என்ற உம்மை, எண் ணும்மையோ டுயர்வு சிறப் பும்மையாகவும் வந்தது; வாதனை கழித லருமை யாதலின். தாயுமானவர்—

" வாதனையோ டாடு மரப்பாம்பு மாயவொரு,
போதனைதங் தையா புலப்படுத்த வேண்டாவோ."

எனக் கூறியிருத்தலையும் உணர்க. 78

[ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யவஸ்தைகளில்
பிரஹ்ம வஸ்துவினை அறிய வியலா தென்கின்றார்.]

79 கரணத் திரணிற் பினுமப் பொருளைக்
காணக் கிடையா தவைகை யறவே,
மரணப் படினும் மதுகண் டுகொளும்
வழியில் லையெனும் படிநீ மதியே.

(இ-ள்.) கரணத் திரள்-கரண சமூகங்கள், நிற்பினும்-பொருந்தி யிருக்கின்ற ஜாக்கிர ஸ்வப்நாவஸ்தைகளினும், அப் பொருளை-முன்னர்க் கூறிய பிரஹ்ம வஸ்துவை, காணக்

கிடையாது – அறிதற் கேலா தாம், அவை - (அந்தக் கரண இந்திரிய) சமூகங்கள், கை அற-அத்தியந்தம், மரணப்படி னும் - நாசத்தினை யடைகின்ற சுழுத்தி யவஸ்தையினும், அது - அப் பிரஹ்ம வஸ்துவை, கண்டு கொளும் - அறிந்து கொள்ளுதற்கு, வழி-மார்க்கம், இல்லை-இன்று, எனும்படி-என்னுந் தன்மையை, நீ-நீ, மதி-அறிவா யாக. எ-று.

(ஏ - ஏ - அசை) 'நிற்பினும்' என்ற உம்மை, எண் ணும்மையாய் எதிரது தழீயது. 'மரணப்படினும்' என்ற உம்மை, எண் ணும்மையாய் இறந்தது தழீயது. கரணக் கூட்டங்கள், அந்தக் கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ் சகம், கர்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி வாயு பஞ்சகம் என்பன ஆம். இக் கரணங்கட் குள்ள காலம் சகலாவஸ்தை யாம். இவை லயமா யுள்ள காலம் கேவலாவஸ்தை யாம். சகலாவஸ்தை சாக்கிர சொப்பந மாம். கேவலாவஸ்தை சுழுத்தி யாம்.

அந்தக் கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி வாயு பஞ்சகம் என்னும் கரணக் கூட்டங்கள், தத் தம் வியாபாரங்களைச் செய்யும் காலம் ஜாக்கிராவஸ்தை யாம் என்றும், சாக்கிர அவஸ்தை யின் வாசனையால் தோன்றிய விஷயங்களோடு கூடி அந்தக் கரணங்கள் தத் தம் வியாபாரங்களைச் செய்யும் காலம் சொப் பநாவஸ்தை யாம் என்றும் பகுத்து உணரவேண்டும்.

கேவலாவஸ்தையில் பரம்பொருளைக் காணக் கூடா தென்பது, "சுழுத்தியிற் பிரளயத்தில் தோற்றமாம் சகங்கள் மாண்டும், அழுத்திய பவம்போய் முத்தி அடைந்தவர் ஒருவர்' உண்டோ". (கைவல்ய நவநீதம் தத்வ விளக்கப் படலம் 55) என்பதனால் உணர லாம்.

[ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யவஸ்தைகளைக் கழறுகின்றார்.]

80 எந்தக் கரணங் களுமே வனநா
விதில்வா தனையால் விடயங் களொடே,
அந்தக் கரணங் கள்பொருந் தல்கநா
வவைமாய் தல்சுழுத் தியவத் தையதே.

(இ-ள்.) எந்தக் கரணங்களும் - சர்வேந்திரியங்களும், மேவல்-(தத் தம் கோளகங்களில்) பொருந்தியிருந்து வியவகாரத்தினைச் செய்தற் குரிய அவத்தை, நநா - ஜாக்கிராவஸ்தை யாம், இதில் - இந்தச் சாக்கிரத்தி லுள்ள விஷயங்களி னநுபவத்தினால், வாதனையால் - (உண்டாம்) சம்ஸ்காரத்தினால், விடயங்களொடு-(அஸ்திர மான) விஷயங்களோடு, அந்தக் கரணங்கள்-மநம், பொருந்தல்-கூடியிருந் தநுபவிக்கு மவத்தையானது, கநா - ஸ்வப்நாவஸ்தை யாம், அவை-[ஸ்திர அஸ்திர) விஷயங்கள், மாய்தல்-நாச மாகு மவத்தையானது, சுழுத்தி அவத்தையது - சுழுத்தி யவஸ்தை யாம். எ-று. (ஏ - ஏ - அசை)

"அவத்தையது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

"அந்தக் கரணங்கள்" என்பது, சாதிப் பன்மை வாசகம்.

மேவல், பொருந்தல், மாய்தல், என்னுந் தொழிற் பெயர்கள், அவை நிகழும் அவத்தைகளை ஆகுபெய ராகி நின் றுணர்த்தின. 80

[நனவிற் சுழுத்தி நிலை யாகிய துரியாவஸ்தையில், பிரஹ்மத்தினைச் சா'க்ஷாத்கரிக்கலாம் என்கின்றார்.]

81 வினவிற்ப ரத்தையறி வுறுதற்க
வத்தைபுலன் வினைமாறியே,

நனவிற்சு ழுத்திநிலை வரினப்பொ
ருட்டிகழு நலமாகவே.

(இ-ள்.) பரத்தை - பிரஹ்மத்தினை, அறிவுறுதற்கு - சாக்ஷாத்கரித்தற் குரிய, அவத்தை - (எவ் வவஸ்தையிற் (கூடும்) என்று, கைகூடும் அவ் வவஸ்தையை) வினவில்- கேட்கில், புலன் - இந்திரியங்களின், வினை - வியாபாரங்கள், மாறி-நீங்கப் பெற்று, நனவில்-ஜாக்கிரத்தில், சுழுத்தி நிலை- சுழுத்தி யவஸ்தையின் தன்மை, வரின்-வருமாயின், (அந்த அவஸ்தையில்), அப் பொருள் - அந்தப் பிரஹ்ம வஸ்து, நலம் ஆக-நன் றாக, திகழும்-(உனக்கு) விளங்கும். எ-று. (ஏ - ஏ - அசை)

துரியாவஸ்தையில், நன் றாக விளங்கு மென்ப தாம்.

நாலாவது அவஸ்தை துரீயமாம். அது நனவில், நனவும், சுழுத்தியும், இல்லாத அவஸ்தை யாம். நனவில் தான், நாலு ஐந்து ஆறு ஏழு அவஸ்தைக ளாகிய நாலு அவஸ்தையும் இருக்கிறது. கைவல்ய நவநீதம் — "தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல், பஞ்சகோச முங்க டந்து பாழையுந் தள்ளி உள்ளில், கொஞ்சமும் இருப்பும் விட்டுக் கூடத்தன் பிரஹ்மம் என்னும், நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்." (தத்துவ விளக்கப் படலம் 83) "அநுபவா நந்த வெள்ளத் தழுந்தியே அகண்டம் ஆகித், தநுகர ணங்கள் ஆதி சகலமும் இறந்து சித்தாய், நநதுபூ ரணமாய்த் தேகம் ஆனசற் குருவுங் காண, நனவினில் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவம் ஆனான்." (1–84) எனக் கைவல்ய நவநீதம் கூறுவது கவனித்து நோக்குவார்க்கு நனவில் சுழுத்தி நிலை பெறும் க்ரமம் நன்கு விளங்கும்.

[78-வது செய்யுளில், "காட்டும்படி" எனக் கூறிய, காரண சப்த, காரிய சப்த, உபாதியினை யுடைய தத் பத த்வம், பதங்களின் விரோத நிவிர்த்தி கூறுகின்றார்.]

82 திவிதத்த வத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசீவனே,
இவிதத்தி லப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனே.

(இ-ள்.) திவிதத்து-மூன்றுவித மான, அவத்தைகளை- அவஸ்தைகளை, அறிவு உற்ற - உணர்ந்த, அத் துரிய நிலை- அந்த (நான் காவ தாகிய) துரியாவஸ்தையில் விளங்குவது, சீவன்-(ஜீவ சாக்ஷி யாகிய) கூடஸ்த னும், இவிதத்தில்-இவ் வாறே, அப் புருடன்-அந்த ஈச்வரன், நனவு உற்ற-ஜாக்கிர (ஸ்வப்ந சுழுப்தியைப்) பொருந்தி (அறிந்த), அத் துரிய நிலை- அந்த (நான் காவ தாகிய) துரியாவஸ்தையில் விளங்குவது, ஈசன்-(ஈசுவர சாக்ஷி யாகிய) பிரஹ்ம மாம். எ-று.

(ஏ—ஏ—அசை) "திரிவிதத்து" என்பது, "திவிதத்து" எனத் தொகப் பெற்றது. 82

["கரி யாகிய வாதனை கழிய" என்னும், அசி பதார்த்தத்தினை உபதேசிக்கின்றார்.]

83 அகிலக்க ரிப்பரம துரியப்பொ
ருட்டுரிய மதுவாகையே,
புகலுற்ற தத்வமசி யெனுமுப்ப
தத்தின்முடி பொருளாவதே.

(இ-ள்.) அகிலக் கரி-சர்வ அவஸ்தைக்கும் சாக்ஷி யாகிய கூடஸ்தரே, பரம துரியம்-ஈசுவர துரியத்தில் விளங்காநின்ற பிரஹ்ம மாகவும். துரியம் பொருள்ஏ - ஈசுவர துரியத்தில் விளங்காநின்ற வஸ்துவே, அது ஆகையே- ஜீவ துரியத்தில் விளங்காநின்ற கூடஸ்தராகவும் ஆவதே, புகல் உற்ற-கூறு

நின்ற, தத் த்வ மசி-அது நீயா யிருக்கின்ருய், எனும்-என்று அறையும், முப் பதத்தின் - மூன்று பதங்களின், முடி - சித் தாந்த மான, பொருள் ஆவது-அர்த்த மாம். எ-று.

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. ஆதல், ஒன் ருகத் தோன்றல் என்க. புதி தாக ஆத லில்லே.

இனி, அகிலக் கரி-சர்வ சாக்ஷி வடி வான, பரம துரியப் பொருள்-ஈசுவர சாக்ஷி யாகிய பிரம மாக, துரியம் அது-சீவ சாக்ஷி வடி வான கூடஸ்தர், ஆகையே - ஆதலே, எனப் பொரு ளுரைப்பினும் பொருந்தும்.

பெருந் திரட்டு, மா வாக்கியத்தில்—

"அவனென்னும் பதத்தினேயா ராய்ந்தி டத்தின்
அகிலமெலாம் படைத்தளிக்கும் அறிவா நந்தம்,
இவன்என்னும் பதத்தினேயும் இசைந்து பார்க்கின்
ஈருலகிற் பிறந்திறக்கும் இவனே ஆனுன்,
அவனேநீ ஆகியெனும் அசிப தந்தான்
அகண்டசுக போதத்தை அவர்க்குக் காட்டும்,
இவன்அவன்என் றிரண்டுபொருள் உண்டாய் ஒன்ருய்
இருந்தபடி எங்ஙனே இயம்புவாயே."

"பதப்பொருளே நினேப்பிக்கும் பதங்கள் எல்லாம்
பறியாத மாயையினேப் பறிக்க மாட்டா,
பதப்பரிசு வாக்கியத்தின் பொருளேப் பார்த்துப்
பாகத்தை விட்டுப்பா கத்தைச் சேர்க்கும்,
மிதப்பொருடான் வாக்கியத்தான் மன்னித் தோற்றி
மெய்தூரும் மாயையினே விரையப் போக்கி,
உதித்தபொருள் ஒன்றென்றே உணர்ந்து விட்டால்
ஒருவர்க்கும் விரோதமொன்ருே டில்லே காணே."

என்று கூறுவதும் உணரற்பாற்று.

[ஆசிரியர் உபதேசத்தினைக் கேட்ட சிஷ்யன், இது தன்னால் அசாத்திய மெனக் கூறி, நமஸ்கரித்தனன் என்கின்றார்.]

84 நிமலப்பொ ருட்சுருதி நெறியிற்பெ
றக்கருணை நிதிகூறவே,
அமலப்பொ ருட்பெறுத லருமைத்தெ
னக்கழறி யடிவீழவே.

(இ-ள்.) நிமலப் பொருள் - நின்மல மான பிரஹ்மப் பொருளை, சுருதி-வேதத்தில், நெறியில்-(கூறிய) கிரம மாக, பெற - அடையும்படி, கருணை நிதி - கிருபாநிதியாகிய நந்தி பராயண ஸ்வாமிகள், கூற-உபதேசிக்க, அமலப் பொருள்- நின்மல மான பிரஹ்மப் பொருளை, பெறுதல் - அடைதல், அருமைத்து-(அடியேனுக்கு) அசாத்திய மாம், என-என்று, கழறி-விண்ணப்பித்து, அடி - திரு வடிகளில், வீழ - நமஸ் கரிக்க (நந்திபராயண ஸ்வாமிகள் உபதேசிப்பா ராயினர்.) எ—று. (ஏ - ஏ - அசை) 84

[ஆசிரியர், ஸ்வா நுபவ ரூபப் பிரஹ்மப் பொருளினை அநுக்கிரகித்தற் பொருட்டுக் கருணையினால், பாதோதக மாட்டுவித்தார் என்கின்றார்.]

85 தமரக்க லைக்களவு தெரிவற்ற
தற்பொருள தனையீகுவான்,
அமரர்க்க ளப்பரிய பதநற்பு
னற்கொடுசெய் தபிடேகமே.

(இ-ள்.) தமர-சப்த ரூபமா யிருக்கின்ற, கலைக்கு-சாஸ்திரத்திற்கு, அளவு தெரிவு அற்ற - அளந் தறியக் கூடாத, தத் பொருளதனை - அந்தப் பிரஹ்ம வஸ்துவினை, ஈகுவான்- கொடுத்தற்பொருட்டு, அமரர்க்கு-தேவர்களுக்கும், அளப்ப

அரிய-(மஹிமையினை) அளவிடக்கூடாத, பதம் - பதங்களில் (விட்ட), நல் - உயர்வு பொருந்திய, புனல் கொடு - உதகத்தினைக் கொண்டு, அபிடேகம் செய்து - அபிஷேகம் செய்வித்து. எ-று. (ஏ - அசை) இது குளகம்.

'பொருளதனை' என்பதில், தன் அசை. 'அளப்ப அரிய' என்பது, 'அளப் பரிய' என அகரம் தொக்கது.

தத் பொருளதனை - தத் பத லக்ஷியார்த்தப் பிரமத்தை, ஈகுவான்-துவம் பத லக்ஷியார்த்த ராக வுணரும் மெய் யுணர்வை யளிக்கும் பொருட்டு, என வுரைத்த தாகக் கொள்க.

பிரஹ்ம கீதை 4 கேந உபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்,

" வாக்குமந முங்கண்ணும் மற்றுளவிந் தியங்களுமே,
நோக்கரிய பரம்சுடரை நோக்கிஇவை செலமாட்டா." (6)

ஞாந இந்திரிய கர்ம இந்திரிய அந்தக் கரணத்துக்கு விஷயமாகா தென்றும்,

கைவல்ய நவநீதம் சந்தேகம் தெளிதற் படலம் 180. கவி.
"குலவுசற் குருவின்பாதக் குளிர்புனல் தலைமேல்கொண்டார்,
உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்றபே றடைவார் போல."
என சற் குரு பாத தீர்த்த ஸ்நாநம் மகா மகிமை உடையது என்பது என்றும், கூறுவதாலும் உணரலாம். 85

[பரிகலச் சேஷங் கொடுத்து, விபூதிக் கவசம் இட்டனர் என்கின்றார்]

86 பவளத்தில் வைத்தவமிர் தினின்மிச்சி
லிட்டினிய பரிவோடுமா,
தவளப்பொ டிக்கவச மெனவிட்டு
டற்பகைக டலைசாயவே.

(இ-ள்.) பவளத்தில்-(சசிவர்நனுக்கு) பவளம் போன்ற அதரத்தினை யுடைய வாயில், வைத்த - வைத்து எடுத்த, அமிர்தின்-அமிர்தம் போன்ற, இன்-இனிய, மிச்சில்-(பரிகல) சேஷத்தினை, இட்டு-கொடுத்து, இனிய பரிவோடு-மிகுந்த பிரியத்தோடு, மா-பெருமை பொருந்திய, தவளம்-வெண்மை யான, பொடி-விபூதியினை, உடல்-சரீர மாகிய (புரத்திற் குரிய), பகைகள் - (மத வாதிக ளாகிய) விரோதிகள், தலை சாய - அத்தியந்தம் நாச மாகுதற்கு, கவசம் என-கஞ்சுகம் ஆக, இட்டு - (சரீரம் முழுவதும்) பூசி. எ-று.

இதுவும் குளகம்.

தூல சூக்கும காரண தேகங்கள் பஞ்ச கோச வடிவாக இருத்தலின், பகைக ளாயின, ஆதலின், "உடற் பகைகள்" என்றனர். அவை தலைசாய்த லாவது, ஆந்மா வல்ல வென அறியப்படுத லாம். இனி, 'உடற் பகைகள்' என்பதற்கு, உடலைப் பற்றி யெழுகின்ற அகங்கார மமகார மாகிய பகைகள் எனப் பொரு ளுரைப்பினும், உடல் முதலிய காரிய சத்த, உபாதிக ளாகிய, பகைகள் எனப் பொரு ளுரைப்பினும் பொருந்தும்.

விபூதி, உடல் பகைகளை கெடுக்க வல்லது என்பது, மாணிக்க வாசக சுவாமிகள், திருக் கோவை யாரில், தினை வளங் காத்து என்னும் செய்யுளில், "வினைவளை நீறெனை நீறணி அம்பலவன்" என்று கூறியிருப்பது கொண்டும் உணரலாம். 86

[உடல் பொருள் ஆவி மூன்றினையும் கைக் கொண்டு, அஸ்த மஸ்தக சம்யோக தீக்ஷை, திரு வடி தீக்ஷை செய்தனர் என்கின்றார்.]

87 உதகத்து டற்பொருளொ டுயிர்கைக்கொ
டுச்சிமிசை யொருபோதொடே,

பதகத்த லத்தைவிட விருகைத்த
லத்தொடிரு பதமேவியே.

(இ-ள்.) உதகத்து-ஜல பூர்வக மாக, உடல் பொருள் உயிர் ஒடு-உடல் பொருள் ஆவி மூன்றினையும், கைக்கொடு-(நன்குகத் தத்தம் வாங்கிக்) கொண்டு, ஒரு போது - ஒரு க்ஷணத்தில், பதகம் - பாவ மாகிய, தலத்தை - (அஞ்ஞாந சப்த) பூமிகளை, விட - நீக்கற்கு, உச்சியிசை - சிரசின் மீது, இரு-இரண்டு, கைத்தலத்தொடு-கையினேடு, இரு-இரண்டு, பதம் - திரு வடியினையும், மேவி - பொருந்தும்படி செய்து, எ-று. (ஏ - ஏ - அசை)

"பாதகம்" என்பது, "பதகம்" எனக் குறுகிற்று.

இதுவும் குளகம்.

"உயர்ந்தமெய்ஞ் ஞாந நிட்டையால் அனைத்தும்
உணர்ந்தமே லோர்க்குள மகிழல்,
இயந்துடல் ஆவி பொருளையுட் சமர்ப்பித்
திளைப்பிலா பிரமவா நந்தம்,
தயங்கினேர் உடலபி மாநத்தை நீக்கித்
தநத்தின்மேல் பற்றுதல் இன்றிச்,
சுயம்பிர காச சிவமல தொன்றைச்
சுட்டிடார் அவர்பதம் துதிப்பாம்"

என்று பெரியார் அருளிச்செய்திருப்பதும் உணரற்பாற்று.87

[ஞாநாநுபூதியினைக் கொடுத்து, "உனது ஸ்வாநுபூதியினைக் கூறுக" வெனக் கூறினர் என்கின்றார் ]

88 ஒழியப்பு லக்கணுப நிடதப்பொ
ருட்டெரிய வுளஞாநமாம்,
விழியைக்கொ டுத்துமொழி யெனமுப்ப
தப்பொருளும் வெளியாகவே.

(இ-ள்.) புலக் கண்-விஷய திருஷ்டி, ஒழிய-நாசமாகும் படியாகவும், உபநிடதப் பொருள்-உபநிஷத் அர்த்த மாகிய பிரத்திய கபிந்ந பரமாத்மா, தெரிய-அபரோக்ஷமாக விளங் கும்படியாகவும், உள-உள்ள, ஞாநம் ஆம்-ஞாந மாகிய, விழியை-நேத்திரத்தினை, கொடுத்து-ஈந்து, முப் பதப் பொரு ளும்-மூன்று பதத்தினது அர்த்தங்களையும், வெளி ஆக-ஸ்பஷ்டமாகும்படி, மொழி-கூறுக, என-என்று (நந்திபரா யண ன்வாமிகள் ஆஞ்ஞாபிக்க) எ-று. (ஏ – அசை)

கைவல்ய நவநீதம் சந்தேகம் தெளிதற் படலம் 106.

"அசத்தில் எம்மட்டுண் டம்மட்டும் பராமுகம் ஆயி னுல் அம்மட்டும், நிச்த்தில் உள்விழிப் பார்வையாம் இப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தில் உன்மநம் நின்றுசிந் மாத் திர வடிவமா யிடின்மைந்தா, கசத்த தேகத்தில் இருக்கினும் ஆநந்தக் கடல்வடி வாவாயே." என அக முக திருஷ்டி கூறுவது அறியத்தக்க தாம். 88

[ஆசிரியர் ஆஞ்ஞையின்படி, சிஷ்யன் புகல வாரம்பித்ததனைப் புகல்கின்றார்.]

89 நநவைத்து வக்கிமுடி துரியத்தை
முற்றவிறை நவினீதியே,
மநவர்க்க மற்றவநு பவமுற்ற
சிற்ககந வலியோதுமே.

(இ-ள்.) இறை-நந்திபராயண ஸ்வாமிகள், நவில்-உப தேசித்த, நீதியே-கிரம மாகவே, நநவை-(ஜீவ) ஜாக்கிரம், துவக்கி-முத லாக, முடி-அந்த மான, துரியத்தை-(சிவ) துரீயம், முற்ற-முடி வாக, மந வர்க்கம்-மநம் முதலிய சகல கரணங்களும், அற்ற-நீங்கிய, சித் ககந-சிதாகாசத்தின்,

அநுபவம் - அநுபவம், உற்ற - பொருந்திய, வலி-(அவ் வநு பவ) சாமர்த்தியத்தினை, ஓதும் - கூறுவா னுயினன். எ-று. ( ஏ - அசை )

"பிரியா வுயிர் காரியமா முடலும்" என்னும் செய்யுளில், "காட்டும்படி கண்டு கொள் கண்ணுற" என்று நுதலி, "திவிதத்தவத்தைகளை", "அகிலக்கரி" என்ற செய்யுட்களில், உபதேசித்ததனை, "இறை நவில் நீதியே" என்றூர்.

சூத சங்கீதை,

"திரிசிய மாம்ப வஞ்சம் தேய்ந்துசொப் பநம்போற் றேன்ற,
உரியவெம் பால்வி ழித்தோன் ஒருவனே சீவன் முத்தன்."

என்று கூறுவதால், திரிசியப் பிரபஞ்சம் தேய்ந்து, சொப்பநம் போல் தோன்றும் திருஷ்டி யுடையோன் எனச் சீவன் முக்தன் என்ப தாம். 89

[ஜீவ ஜாக்கிராவஸ்தையினைக் கூறுகின்றூர்.]

90 புரண மாகவே புறம்புள புலன்களு மந்தக்,
கரண மியாவையும் வழங்கிட நநவெனக் கண்டேன்.

(இ-ள்.) புறம்பு உள - பாஹ்ய மாய் உள்ள, புரணம் ஆக - சம்பூர்ணம் ஆன, புலன்களும் - தசேந்திரியங்களும், அந்தக் கரணம் - அந்தக் கரணங்களும், யாவையும்-(ஆகிய) எல்லாம், வழங்கு-(தத் தம் கோளகங்களி லிருந்து) விவகரிக்கின்ற, இடம்-அவஸ்தையை, நநவு-(ஜீவனது) ஜாக்கிரம், என-என்று, கண்டேன்-உணர்ந்தேன். எ-று. (ஏ-அசை)90

[ ஜீவ ஸ்வப்நாவஸ்தையினைக் கூறுகின்றூர். ]

91 புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்,
கரண மியாவையும் வழங்கிடங் கநவெனக் கண்டேன்.

(இ-ள்.) புறம்பு உள - பாஹ்ய மாய் உள்ள, புரணம் ஆகிய-சம்பூரணம் ஆக, புலன்—தசேந்திரியங்களும், கெட— நீங்க, அந்தக் கரணம் - அந்தக் கரண விருத்திகள், யாவையும்-யாவும், வழங்கு-விவகரிக்கின்ற, இடம்-அவஸ்தையை, கநவு - (ஜீவனது) ஸ்வப்ந அவஸ்தையாம், என - என்று, கண்டேன் - உணர்ந்தேன், எ—று. 91

[ ஜீவ சுழுத்தி யவஸ்தையினைக் கூறுகின்றார். ]

92 மரண மாகிய திசையிது வெனும்படி மநாதி,
கரண மியாவையு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன்.

(இ-ள்.) மரணம் ஆகிய திசை - மரணம் அடைந்த அவஸ்தை, இது - இது, எனும்படி - என்று கூறும்படி, மந ஆதி - மந முதலிய, கரணம் யாவையும் - சகல கரணங்களும், இறந்து உள - ஒடுங்குத லடைந்து (அஞ்ஞாந ரூப மாய்) இருக்கின்ற (அவஸ்தையினை), சுழுத்தி-(ஜீவனது) சுழுப்தி (அவஸ்தை என), கண்டேன்-உணர்ந்தேன். எ-று. (உம் - அசை)

இங்கே. இறத்தல். கடத்தல் என்னும் பொருளதே. நநவு கநவு நிலைகளிற் போல, நில்லாது சென்று ஒடுங்குதலாம் என்க. திசை என்பது காலத்தை உணர்த்திற்று. 92

[ ஜீவ துரியாவஸ்தையினைச் சாற்றுகின்றார். ]

93. எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த,
துஞ்ச லங்குணர் போதமாந் துரியமுங் கண்டேன்.

(இ-ள்.) எஞ்சல்—குறைதல், இன்றி—இல்லாமல், எக் கரணமும் - சகல கரணங்களும், இறந்து-ஒடுங்குத லுற்று, இருண்டு - அந்தகார மய மாக, இருந்த - நின்ற, துஞ்சல் -

சுழுப்தி (அவஸ்தையினை), உணர்-அறிந்த, போதம் ஆம் - ஞாந ரூப மாகிய, துரியமும்-(ஜீவனது நான்காவது அவஸ்தை யாகிய) துரியாவஸ்தையையும் (இன்ன தென), கண்டேன்-உணர்ந்தேன். எ—று. (அங்கு, உம் - அசை)

சேதந மட்டும் விளங்கு மவஸ்தை துரிய அவஸ்தை என்ப தாம்.

"அருந்துயர்க் கிடமாம் அந்த காரமே மூடி ஒன்றும்,
தெரிந்திடற் கின்றி நின்றே திகழுமா யைக்கு மேலாய்,
விரிந்தநல் போதம் ஆகி விளங்கிடும் துரியம் மெய்யே
தெரிந்திடக் கண்ட போதே திகழுநல் முத்தி அன்றே."

என்று பெரும் திரட்டு-அநுபூதி விளக்கம் கூறுவதுகொண்டு துரிய அவஸ்தை இன்னது என்று தெரிந்துகொள்ளலாம்.93

[ பர ஜாக்கிராவஸ்தையினைப் பகர்கின்றார்.]

94 **துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்,**
**கரிய தாயிருந் திடம்பர னநவெனக் கண்டேன்.**

(இ-ள்.) துரியம் ஆகிய - (ஜீவ) துரியத்தில் விளங்குவதாகிய, போதம்-ஞாந ரூப சேதநம், ஓர்-அற்பமும், துளக்கம்-சலநம், அற்று-இன்றி, அனைத்தின்-எல்லாவற்றிற்கும், கரியது ஆய் - சாக்ஷி மாத்திர மாக, இருந்த-நின்ற, இடம்-அவஸ்தையினை, பரன்-ஈசுவரனது, நநவு-ஜாக்கிராவஸ்தை, என-என்று, கண்டேன்-உணர்ந்தேன், எ—று.

"இருந்திடம்" என்பதில், அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கிற்று. 94

[ பர ஸ்வப்நாவஸ்தையினைப் பகர்கின்றார். ]

95 **புணர்ந்த விச்சகத் தொழித்துணர் போதமாந் தனையே,**
**உணர்ந்த மற்றது பரன்கந வெனும்படி யுணர்ந்தேன்.**

(இ-ள்) புணர்ந்த-(அநந்த ஜந்மங்களில்) பொருந்திய, இச் சகத்து-இந்தப் பிரபஞ்சத்தினை, ஒழித்து-நிவிர்த்தித்து, உணர்-(நிவிர்த்தித்ததனை) அறிந்த, போதம் ஆம் தனை-சாக்ஷி ரூப வஸ்துவினை, உணர்ந்த அது - அறிந்த அவஸ்தையினை, பரன் - ஈசுவரனது, கநவு - ஸ்வப்நாவஸ்தை, எனும்படி - என்று கூறும் ஆறு, உணர்ந்தேன்-அறிந்தேன். எ-று. (மற்று-தன்-ஏ-அசை) 'அது' பிரித்துக் கூட்டப்பட்டது. 95

[ பர சுழுத்தி யவஸ்தையினைப் பகர்கின்றார். ]

96 சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையுந்,
தோன்று ருவிடம் பரன்சுழுத் தியதெனத் துணிந்தேன்.

(இ-ள்.) சான்று - சாக்ஷியும், சாக்கியம் - சாக்ஷியமும், இறந்திட-நீங்க, (பர சாக்கிரம் நீங்க) தான்-ஆத்மா, இருந் தமையும் - இவ் வாறிருந்தது என்னும் தன்மையும், தோன் றுரு-பிரதீதியாகாத, இடம் - அவஸ்தையினை, பரன்-ஈசுவர னது, சுழுத்தியது-சுழுப்தி அவஸ்தை, என-என்று, துணிந் தேன்-உணர்ந்தேன். எ-று.

" சுழுந்தியது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. 'இருந்தமையும்' என்ற உம்மை, இறந்தது தழீஇய எச்ச வும்மை. "தோன்றுருத" என்பது, "தோன்றுரு" என, ஈறு கெட நின்றது. தான் இருந்தமை, சாக்ஷி ரூபப் பிரம மாக யா னிருக்கிறேன் என்று இருக்கும் தன்மை, ஈசுவர சொப்பந மாம். 96

[ பர துரியாவஸ்தையினைப் பகர்கின்றார். ]

97 மரித்த தென்றுணர்ந் துரைத்தது மரித்திடந் தனிலே,
தெரித்த போதமே ததுபரன் றுரியமாய்த் தெளிந்தேன்.

(இ-ள்.) மரித்தது-(பர ஜாக்ரம்) நாசமாயிற்று, என்று-என, உணர்ந்து - அறிந்து, உரைத்ததும் - கூறியதான பர ஸ்வப்நமும், மரித்த-இறந்த, இடந்தனில்-பர சுழுத்தி யவஸ்தையில், ஏது-எந்த, போதம்-சேதநம், தெரித்த - விளங்குகின்றதோ, அது-அந்த அவஸ்தையினை, பரன்-ஈசுவரனது, துரியம் ஆய் - (நான் காவ தாகிய) துரியாவஸ்தை யாக, தெளிந்தேன் - உணர்ந்தேன். எ-று.

(ஏ - அசை) 'இடமதில்' என்பதில், தன் அசை.

'மரித்திடம்' என்பதில், அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கிற்று. 97

[ சிவ ஜாக்கிராவஸ்தையினைச் செப்புகின்றார். ]

98 இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே,
மறையி னந்தநற் பதப்பொரு ணநவென மதித்தேன்.

(இ-ள்.) என்னை-அடியேனை. ஆண்டவனே-தடுத்தாட்கொண்டருளிய ஸ்வாமியே, இறை - ஈசுவரன், எனும் - என்று கூறும், பொருள் - வஸ்துவினது, துரியமே-துரியாவஸ்தையினையே, மறையின் - (இருக்காதி நான்கு) வேதங்களின், அந்தம்-முடி வாகிய (உபநிஷத்துக்களில் பிரதிபாதிக்கப்படும்), நல் பத - உயர்வு பொருந்திய (அசி) பதத்திற்கு, பொருள்-அர்த்த மாகிய, நநவு-(சிவனது) ஜாக்கிராவஸ்தை, என - என்று, மதித்தேன் - உணர்ந்தேன். எ-று. 98

[சிவ ஸ்வப்நாவஸ்தையினைச் செப்புகின்றார் ]

99 பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்,
கண்ட கண்ணதே யாகிய கநவதுங் கண்டேன்.

(இ-ள்.) பண்டை-பூர்வம், விச்சுவ-(பொருந்தியிருந்த) ஜகத்தின், வாதனை-சம்ஸ்கார மாகிய, பழுது-தோஷங்கள், போய்-நீங்கி, முழுதும் - எல்லாத் திருசியங்களும், கண்ட- அறிந்த தாகிய, கண்ணதே ஆகிய - திருக் மாத்திரமாகவே விளங்குகின்ற. கநவதும் - (சிவனது) ஸ்வப்நாவஸ்தையை யும், கண்டேன்-உணர்ந்தேன். எ-று. (உம் – அசை)

'கநவது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

'கண்ணது' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

'விசுவம்', 'விச்சுவம்' எனச் சந்தத்தால் சகர ஒற்று மிகுந்தது. எல்லாத் திருசியங்களும் திருக்கு மாத்திர மாக விளங்கு மவஸ்தை சிவ சொப்பநாவஸ்தையா மென்றபடி.

[சிவ சுழுத்தி யவஸ்தையினைச் செப்புகின்றார்.]

100 காக்ஷி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த,
மாக்ஷி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன்.

(இ-ள்.) காக்ஷி-திருசிய வஸ்துக்கள், யாவையும்-எல்லா வற்றையும், கண்ணது ஆய்- திருக்கு ரூபமாக (உணர்ந்து), அக் கணும் - அத் திருக்கு ரூபத் தன்மையும், கரைந்த-நீங் கிய, மாக்ஷி ஆகிய - பெருமை பொருந்திய, அகோசரம் - (வாக்கினாலும் மநதினாலும்) அறியக் கூடாத வஸ்து விளங் கும் அவஸ்தையினை, உறக்கம் ஆய் - (சிவனது) சுழுப்தி யவஸ்தை யாக, மதித்தேன்-உணர்ந்தேன் எ-று.

'கண்ணது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. பிரஹ்ம கீதை. 12 கூறிய உபநிஷத் தாத்பரியம் 22

"காட்சியை எல்லாம் கண்ணதாய்க் கரைத்துக் கண் ணொழிந் தொருபொருள் இல்லா, மாட்சியை." என்று கூறு வதால் உணர்க. 100

[சிவ துரியாவஸ்தையினைச் செப்புகின்றார்.]

101 அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ,
இருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன்.

(இ-ள்.) அரும் - அடைதற் கரிய, தவா - தவத்தினை யுடைய ஸ்வாமி, மறை-(இருக்காதி நான்கு) வேதங்களின், அந்தம் ஆம் - முடி வாகிய உபநிஷத் பிரதிபாதக மான, அகோசரம் தனில்-(மநத்தாலும் வாக்காலும் உணர வொண் ணாத வஸ்து தா னாக விளங்கும் அவஸ்தை யாகிய) சிவனது துரியாவஸ்தையில், நீ-தேவரீர், இருந்த ஆறு-இருந்தருளிய விதத்தினையும், அறிவித்த ஆறு-(அடியேனுக்கு) உபதேசித்த விதத்தினையும், எங்ஙனம்-எவ் வாறு, இசைப்பேன் - கூறு வேன் (கூற வியலா தென்பது கருத் தாம்.) எ-று.

சிவ துரிய அவஸ்தை, அவாங் மாநச கோசரம் ஆவது என்ப தாம்.

(கைவல்ய நவநீதம், தத்துவ விளக்கப் படலம் 88).

"நீநானென் றிரண்டி லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்,
நானாகத் தெளிந்த ஞானம்."

என்னும் நிலையே, சிவ துரியம் என உணர்தல் வேண்டும்.101

[ஜீவ ஜாக்கிரம் முதல், சிவ துரிய பரியந்தமா யுள்ள பன் னிரண் டவஸ்தைகளிலும், அநுபவித்ததனை வியந் துரைத்தனன் என்கின்றார்.]

102 எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்,
தம்பிரா னடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன்.

(இ-ள்.) தம் பிரான் - தமது திருக்கூட்டத் தலைவனா கிய, எம் பிரான்-எங்கள் ஸ்வாமி, இடம் தொறும் இடம்

தொறும் - (ஜீவ ஜாக்கிரம் முதல், சிவ துரிய பரியந்த மான பன்னிரண்டு) அவஸ்தைகள் தோறும், அது அது ஆய் - அவ் அவ் அவஸ்தா ரூப மாயும், அவ் அவ் அவஸ்தா விஷய மாயும் (இருந்து), நடம் - (தேவரீர்) நிர்த்தநம், செயும் - செய்த, வகை-விதத்தினை, சாற்றும் ஆறு-கூறும் வழியை, அறியேன்-உணராதவனு யிருக்கின்றேன், (கூறவியலா தென்பது கருத் தாம்). எ-று.

'நடநம்' என்பது, நடம் எனக் குறுகிற்று.

பெரும் திரட்டு, நித்தியாநந்த தரிசநம்—

"நனவிடைத் துரியா தீதம் புரிந்தநற் றலைவர் அன்றோ,
வினையிடைப் பிறவி தன்னை வேரொடும் களைந்து போக்கி,
மனவினைக் கெட்டா இன்ப வான்பரா அமிழ்தா கின்ற,
தனையிகப் பருகி உய்யும் தத்துவ வித்தா கின்றார்."

என்று கூறுவதுகொண்டு, துரியா தீதம் என்பதை உணர்ந்து கொள்ளல் தகும்.

### மகா வாக்கிய விசாரம்.

இருக், எஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலும், நான்கு மகா வாக்கியங்கள் உள்ளன. அவை படர்க்கையில், "பிரஞ் ஞாநம் பிரஹ்மம்", "அயம் ஆத்மா பிரஹ்மம்" என இரண்டும், "தத் த்வம் அசி" என முன்னிலை ஒருமையில் உபதேச வாக்கியம் ஒன்றும், "அஹம் பிரஹ்ம அஸ்மி" எனத் தன்மை ஒருமையில், அநுசந்தாந வாக்கியம் ஒன்றும் ஆகும். இவை, சித்தார்த்த போதக வாக்கியம் என்று கூறுவர். அஸி, அஸ்மி, இரண்டும் கிரியா பதம் சாதுத் தன்மைக்காக வைக்கப்பட்டது.

"பிர்ஹ்மம்", "பிரஹ்மம்", "பிரஹ்மம்", "தத்" என்னும் நான்கும், சர்வஞ்ஞத்வாதி கல்யாணகுண விசிட்ட ஈசுவர சைதந்ய வாசகமும், பரோக்ஷமும், ஆகும். "பிரஞ்ஞானம்", "அயம் ஆத்மா", "த்வம்", "அஹம்" என்னும் நான்கும், கிஞ்ஜிஞத்வாதி ஹீந குண விசிட்ட ஜீவ சைதந்ய வாசகமும், அபரோக்ஷமும்; ஆகும்.

இவை எட்டும், முதல் வேற்றுமை உடைய பதங்களாயிருக்கின்றபடியால், வேதம், பொருள் ஒன்றே என்று கூறுகின்றது. அஃதெவ்வாறு பொருந்தும். விசிஷ்டாத்வைதம், ஐக்கிய வாதம், சக்தி விசிஷ்டாத்வைதம், துவைதம், அருத்த வாத பரம், உபாசனா பரம், துதி பரம் உபசாரிக பரம், குண சாதிரிச பரம், ஜாதி வியக்தி பரம், காரண காரிய பரம், குண குணி பரம், விகார பரம், அம்சாம்சி பரம், பிம்பப் பிரதிவிம்ப வாத பரம் எனப் பதினைந்து வித பேதமிருக்கும் போது, பொருள் ஒன்று என்பது எவ்வாறு சித்திக்கும், மற்றும், ஒரு பொருள் ஐக்கிய வாதி, இரு பொருள் ஐக்கிய வாதி, முப் பொருள் ஐக்கிய வாதி எனப் பல் வேறு மதங்கள் இருக்கும் போது, எவ்வாறு பொருள் ஒன்றே என்று கூறல் இயலும்.

சாமானாதிகரண்ய சம்பந்தம், விசேஷ விசேஷிய பாவ சம்பந்தம், லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தம், ஜகத் லக்ஷணை, அஜ்ஹத் லக்ஷணை, ஜகதஜகத் லக்ஷணைகள், இவை யாவும் சாதனமாக இருக்கும் போது, பல பொருளை உணர்த்தாமல், ஒரு பொருளினையே உணர்த்துதல் எவ்வாறு ஏலும். என ஆக்ஷேபம் நிகழும், அதனால் கூறுவாம்.

அஸி பதம் கிரியா பதம் (வினைச் சொல் ஆகும்). அதன் கண் லக்ஷணை பொருந்ாது. பெயர்ப் பொருளுக்கும்,

பெயர் சொற்களுக்கும், லக்ஷணேயே அன்றி, வினைக்கும், வினைச் சொற்கும், லக்ஷணை அங்கீகரிப்பதில்லை. இரு பெயர்ச் சொற்ருன் மகா வாக்கியத்தில் இருக்கின்றது. ஒன்று பரோக்ஷ வாசகம், மற்ருென்று, அபரோக்ஷ வாசகம், ஒன்று, விபு. ஒன்று, பரிச்சின்னம், ஒன்று, பே ரறிவு, மற்ருென்று, சிற் றறிவு, ஒன்று பஞ்ச கிருத்தியம் செய்யும், மற்ருென்று, பஞ்ச கிருத்திய, ஆற்றல் இன்றியது. இவ் வாறு விரோதம் வரும் போது, வேத தாத்பரியம் ஷட் வித லிங்க தாத்பரிய வாயிலாக, ஒரு பொருளில் இருக்குமாயின், ஐக்கியம் சித்திக்காமையின், அவ் ஐக்கிய சித்தியின் பொருட்டு லக்ஷணை அங்கீகரிக்க வேண்டும்.

சர்வஞ்ஞத்வாதி கல்யாண குண விசிஷ்ட ஈசுவரன், தத் பத வாச்சியம். கிஞ்ஜிஞ்ஞத்வாதி ஹீந குண விசிட்ட ஜீவன், த்வம் பத வாச்சியம். இதனைக் காரிய சப்த உபாதி விசிஷ்ட, காரண சப்த உபாதி விசிஷ்டன் எனவும் கூறுவர்.

ஜஹத், அஜஹத் லக்ஷணைகள், ஈண்டு பொருந்தாமை யின், ஜகதஜகல் லக்ஷணை (விட்டு விடாத லக்ஷணை) யினுல் பொருள் கொள்ளல் வேண்டும். விரோத பாகத்தினை நீக்கி, ஐக்கிய யோக்கிய அவிரோத பாகத்தினைக் கொள்வது, பாகத் தியாக லக்ஷணை ஆம். விரோத் மாகிய ஒரு பாகந் தள்ளி, அவிரோத மாகிய ஒரு பாகங் கொள்ளுதலால், இதனையே, பாகத் தியாக லக்ஷணை எனக் கூறுவர்.

விட்ட லக்ஷணையைக் கொள்ளின், தத் பதப் பொருளும், த்வம் பதப் பொருளும், நீக்கி விடும்போது, மேல் ஐக்கியத்திற் குரியவர்கள் இல்லாத காரணத்தால், அதனை அங்கீகரிக்கக் கூடா தாம்.

விடாத லக்ஷணையைக் கொள்ளின், ஐக்கியம் பொருந்தாமையின், கூடாத தாம். லக்ஷணைக்குப் பீஜம், தாத்பரியா நுபபத்தியே யாகும். அநுவய அநுபபத்தி அன்ரும். ஜீவன் ஈசன் பரன் என முப் பொருளும் பன்னிரண்டு அவஸ்தையும் கூறுவாரும் சிலர் உளர். ஜீவனுக்கு, காரிய சப்த உபாதியும், ஈசுவரனுக்கு, காரண சப்த உபாதியும் கூறியது போல், பரனுக்கு சப்த உபாதி கூற வில்லை. ஆனல், பர சாக்கிர சொப்பந சுழுத்தி துரியம் கூறப்படுகிறது. ஈசன் பரன் என்னும் இரண்டும் ஒன்றே. மனோ லயத்திற் காக எட்டவஸ்தை யாகக் கற்பித்தார்கள்.

சப்த உபாதி அசுத்தம் என்பதை, ஏழு உபாதியோடு கூடிய விசிட்ட சேதநம் அசுத்தம் என்றும், சப்த உபாதிகளோடு கூடாத சுத்த சேதநம் சுத்தம் என்றும் கொள்ளல் வேண்டும். தத் பத வாச்சியம், தொம் பத வாச்சியத்தையே அசுத்தம் என்று சொல்லும்போது, ஏழு உபாதிகளை மாத்திரம் கொள்ளல் தகுதி யற்ற தாம், அதனல், உபாதி விசிஷ்டத்தினைக் கொள்ளல் வேண்டும். வாச்சியம் என்பது, வாசகத்தின் பொருள் எனக் கொள்ளலாம். அதனல், எந்தப் பதத்துக்கோ, எந்த வாசகத்துக்கோ, எந்த வாக்கியத்துக்கோ, எத்தனை சேர்ந்தால் பொருளாமோ, அத்தனையும் வாச்சியம் எனப்படும்.

தத் பதம் த்வம் பதம் என்பது, வேத மரபு, அசுத்தம் சுத்தம் என்பது தாந்திரிக மரபு. த்வைதி, விசிட்டாத்வைதி, சக்தி விசிஷ்டாத்வைதிகள் கூறும் ஐக்கியம், சம்யோக சம்பந்த அநித்திய சாபேக்ஷ ஐக்கியமே அன்றி, நிரபேக்ஷ நித்திய அபேத ஐக்கியம் இன்ரும். ஒரு ஆகாயமே உபாதியால் நான்கு ஆகாயம் ஆவது போல, ஒரு சேதநமே

உபாதியால் நான்கு சேதநம் ஆக ஆயிற்று. உபாதி நீங்கிய நிலையில், ஆகாயம் ஒன்றுவது போல, ஜீவ ஈசுவர கூடஸ்த பிரஹ்ம உபாதி நீங்கிய நிலையில், சேதநம் ஒன்றே, உபகித நிலைமையிலும், சுத்த நிலைமையிலும், இருக்கின்றது.

மகா வாக்கியத்தில் லக்ஷணை அங்கீகாரம், அநங்கீகாரம் என இரு மதங்கள் உள. இரு மதங்களிலும், சர்வஞத்வாதி கல்யாண குண விசிட்ட ஈசுவரன், தத் பத வாச்சியன். கிஞ்சிஞத்வாதி ஹீந குண விசிட்ட ஜீவன், த்வம் பத வாச்சியன் ஆவன்.

ஆயினும், கடபத்திற்கு, கடத்வ விசிட்ட கட வியக்தியில் சக்தியிருப்பதால், "கடம் அநித்தியம்" என்னும் போது, விசிட்டத்தில், கட வியக்தி பாகத்தில், அந்நுவயம் ஆகிறது. "கடம் நித்தியம்" என்னும் போது, விசிட்டத்தில், கடத்வ ஜாதி பாகத்தில், அந்நுவயம் ஆகிறது. ஆனதால், லக்ஷணை வேண்டியதில்லை. லக்ஷணையைக் கொள்வது கௌரவ தோஷமும் உடையதாம் என்பர் லக்ஷணை அநங்கீகார வாதியர்.

லக்ஷணை அங்கீகார வாதியர், விசிட்ட வாசக பதத்திற்கு, விசிட்டத்தில், அந்யவயம் பொருந்தாமையினாலும், வேத தாத்பரியம் பொருந்தாமையினாலும், லக்ஷணை அங்கீகரிக்க வேண்டும். லக்ஷணையும், ஜகத் (விட்டது), அஜஹத் (விடாதது), ஜஹதஜஹத் (விட்டுவிடாதது) என மூ வகைத்தாம். "தத் த்வ மசி" என்னும் மகா வாக்கியத்தில், ஜஹத் லக்ஷணையை கொள்ளின், அயிக்கமாவோர் இல்லாமையினாலும், அஜஹத் லக்ஷணையைக் கொள்ளின், பரஸ்பரம் விரோத இரு தர்மம் உடைய பொருளுக்கு, வேத தாத்பரிய ஐக்கியம் பொருந்தாமையினாலும், ஜஹத் அஜஹத் லக்ஷணை

களை நீக்கி, வேத தாத்பரிய ரூப ஐக்கிய மாகிய ஏகத்வம் ஆவதற்கு,, ஜஹதஜஹத் லக்ஷணையை அங்கீகரிக்க வேண்டும். இது, பெரியோர் பரம்பரை அநுட்டானமும் ஆகும் என்பர்.

இஃதன்றி, இவ் வாக்கியத்தினை, ஐக்கிய வாதம், சக்தி விசிட்டாத்வைதம், விசிட்டாத்வைதம், த்வைதம். அருத்த வாதம், உபாசனை வாதம், துதி வாதம், உபசாரிக வாதம்—குண சாதிரிச வாதம், ஜாதி வியக்தி வாதம், காரண காரிய வாதம், குண குணி வாதம், விகார வாதம், அம்சாம்சி வாதம், பிம்பப் பிரதிபிம்ப வாதம், முப் பொருள் ஐக்கிய வாதம், இரு பொருள் ஐக்கிய வாதம், அசுத்தாத்வைத வாதம் என்பன வாகப் பதி னெட்டு வித மாகப் பொருள் கொள்ளலே தகும் என்று கூறுவோர் கூற்று, அறியாமை உடையோர் கூற்றே ஆகும் என்பர்.

இந்தச் சசிவர்ண போதத்துக்கு உரை யியற்றிய மேதாவி ஒருவர், தத் பதம் விட்ட லக்ஷணை யுடையது என்றும், த்வம் பதம் விடாத லக்ஷணை உடையது என்றும், அசி பதம் விட்டுவிடாத லக்ஷணை உடையது என்றும், எழுதியிருக்கின்றார். இதனை உணரும் போது. மூன்று லக்ஷணையில், அந்த லக்ஷணை, எந்த இடத்துக்குப் பொருந்தும் என்று ஆராய்ச்சி யின்றி எழுதியிருக்கின்றார்கள். சில வேத வாக்கியத்துக்கு பொருள், விட்ட லக்ஷணையினாலும், சில வேத வாக்கியத்துக்குப் பொருள், விடாத லக்ஷணையினாலும், சில வேத வாக்கியத்துக்குப் பொருள், விட்டு விடாத லக்ஷணையினாலும், கொள்ளுவதற்காக மூன்று லக்ஷணைகள் கூறினதே அன்றி, ஒரு வாக்கியத்திலோ, ஒரு பதத்திலோ, மூன்று லக்ஷணையும் பொருந்து மென்னும் கருத்தால், வேதம் லக்ஷணைகளைக் கூறிற்றில.

பதத்தில் லக்ஷணை அங்கீகரிக்கப்படும் என்றும், வாக்கி யத்தில் லக்ஷணை அங்கீகரிக்கப்படும் என்றும், இரு மதங்கள் உள. இந்த மகா வாக்கிய விசார விரிவை, நாம் வேதாந்த சூடாமணிக்கு எழுதிய, சந்தோஷதாயினீ என்னும் உரை யில் கண்டு தெளிக. 102

[தேவரீர் செய்த உதவிக்குக் கைம் மாறு ஒன்றும் இன்று என்றனன் என்கின்றார்.]

103 ஆவி யேயடி யேன்செய்கைம் மாறுனக்கென்னெனிற்,
பாவி யேனது தானுமுன் னுடையதாம் பண்டே.

(இ-ள்.) ஆவியே-பிராண ரூப மாகிய ஸ்வாமி, உனக்கு-தேவரீருக்கு, அடியேன்-அடிமையாகிய யான், செய்-செய்கின்ற, கை மாறு - பிரதிப் பிரயோஜநம், என் - என்னை, எனில்-என்று வினவில், பாவியேனது தானும்-பாவி யாகிய அடியேனது (உடல் பொருள் ஆவி யாகிய) அம் மூன்றும், பண்டே-(தேவரீரைச் சரணாகதி அடைந்த) அக் காலத்தே, உன் னுடைய தாம்-தேவரீர் உடைமை ஆயின வாம். ஆதலின், கொடுத்தற்கு ஒன்றும் இன் றென்பது கருத் தாம். எ - று.

"பாவியேனது உம்" என்ற உம்மை இழிவு சிறப்பும்மை யாகும்.

மாணிக்க வாசக சுவாமிகளும், திரு வாசகம்-குழைத்த பத்து-7-வது செய்யுளில், "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றே அனையாய் என்னை ஆட் கொண்ட போதே கொண்டிலையோ." என்று கூறி யிருப்பது கொண்டும், உடல் பொருள் ஆவி மூன்றும் சிவ குரு உடைமையானமை உணர்க. 103

[யான் செய்யுங் கைம் மாறு இஃதே யாம் என்றனன் என்கின்ருர்.]

104 ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்,
கேவல் செய்வதே யன்றிமற் ரென்றுநா னறியேன்.

(இ-ள்.) எனது-அடியேனது, ஆக்கை-சரீரம், உள்ள அளவும்-இருக்கும் வரையும், நின்-தேவரீரது, அடியார்க்கு (முற் சரண் புகுந்த) அடியவர்கட்கு, ஆவல் செய்து-விருப் புற்று, ஏவல்-பணிவிடைகளை, செய்வதே-இயற்றிவருவதே, அன்றி - அல்லாமல், மற்று ஒன்றும் - வேருே ருபாயத்தினை யும், நான்-அடியேன், அறியேன்-உணர்ந்திலேன் எ-று.

'உள்ளளவும்' என்றதில், அகரம் தொக்கது. உம்மை இப் பொழுதே யன்றி, இனியும் என்னும் பொருள்பட நிற்ற லின், இறந்தது தழுவுத லாகும். முற் றும்மை எனினு மாம். தாயு மான சுவாமிகள் பராபரக் கண்ணி,

"அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்,
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே." (55)

(சூத சம்ஹிதை,) "பரம்பொருள் தானும் தேசிகர் தமக்குப் பணிசெய்வோர் பணிசெயும் யோகி, அரன்றிரு மால்மற் றுளதெய்வந் தனிலும் அதிகமாந் தெய்வமிங் கென்னல், தெரிந்தவன் மகிமை செப்பொணு தவன்ருட் பணிசெய் வோர் பதங்களென் சிரத்தில், திருந்தவைத் துவப்பே னய லொரு தெய்வ முண்டெனச் சிந்தனை செய்யேன்" எனப் பிறரு மிவ்வாறு கூறல் காண்க. 104

[குரு சேவையினை வியந் துரைத்தனன் என்கின்ருர்.]

105 இறவி லெபபத மும்பெற வேண்டிலே னென்றும்,
பிறவி வே ாடுவ னின்றிருப் பணிசெயப் பெறினே.

(இ-ள்.) நின்-தேவரீருக்கு, திருப் பணி - பணிவிடைகளை, செய-செயும்படி, பெறின்-(எனக்குக்) கிடைக்கின், இறவு இல்-நாசம் இன்றிய, எப் பதமும்-உயர்வினை யுடைய மோக்ஷத்தினையும், பெற-அடைய, வேண்டிலேன் - விரும்பேன், என்றும் - எப் பொழுதும், பிறவி - ஜந்மத்தினையே, வேண்டுவன்-(யான்) விரும்புவேன். எ-று. (ஏ – அசை)

'எப் பதமும்' என்றதில், உள்ள உம்மை, முற் றும்மை.

அடங்கன்முறை, வெண்பா அந்தாதி 11வது செய்யுளில், தத்வ ராய சுவாமிகளே பணியின் சிறப்பினைக் கூறியிருக்கின்றார். அது வரும் ஆறு :— "தமரம் மிகுசமயச் சங்கேதம் சாரேம், நமரும் பிறரும்என நாடேம்-அமரருறை, நாடாத ரிக்கிலேம் நாதன் பணியொழிய, வீடாத ரிக்கிலேம் வேறு." என்ப தாம்.

"மறமலி உலக வாழ்க்கையே வேண்டும் வந்துநின் அன்பர்தம் பணியாம், அறமது கிடைக்கின் அன்றியா நந்த வற்புத நிட்டையி னிமித்தம், துறவது வேண்டு மௌனியாய் எனக்குத் தூயநல் அருள்தரின் இன்னம், பிறவியும் வேண்டும் யானென திறக்கப் பெற்றவர் பெற்றிடும் பேறே." (தாயு மான சுவாமிகள், சிவன் செயல் 7) எனப் பிறர் கூறியதையுங் காண்க. 105

[குரு வுபதேசஞ் செய்ததனை நினைக்குந் தோறும் உண்டாம் அன்பினால் நமஸ்கரித்தனன் என்கின்றார்.]

106 என்றுபல கால்விழுமெ ழுந்தொழும
ழும்புரியு மென்னை யினியா,
னின்றுபல வாகவுரை செய்தவவ
னன்பினொடு நெஞ்சுருகியே.

(இ-ள்.) என்னை-(அபக்குவ னுகிய) அடியேனை, இனி யான் - (பக்குவ னுய) அதிகாரியானவன், என்று - எனக் கருதி. பல ஆக-அநேக பிரகார மாக, உரை செய்த. உபதே சித்தனர் (எனக் கருதி). அவன்-சசிவர்ணன், அன்பினெடு-பக்தியோடு கூட, நெஞ்சு-மநம், உருகி-(அநலில் காட்டிய மெழுகு போல) நெகிழ்ச்சி யுற்று, பல கால் - பன் முறை (பிரதக்ஷிணஞ் செய்து), விழும் - நமஸ்கரிப்பான், எழும்-எழுந்து நிற்பான், நின்று - (சந்நதியின் முன்) நின்று, தொழும்-(கையால்) தொழுவான், அழும்-ஆநந்தக் கண்ணீர் விடுவான், புரியும்-தோத்தரிப்பான் (ஆயினுன்.) எ-று.

ஆயினுன் என்பது, சொல் லெச்சம்.

இனி, நின்று - நந்திபாராயண சுவாமிகள் சந்நிதியில் நின்று, பலவா றுக வுரை செய்த அவன்- மேலே கூறியபடி பலபடியாக மொழிந்த அச் சசிவர்ணன், அன்பினெடு - குரு பக்தியினுல், நெஞ் சுருகி-மந மிளகப் பெற்று, இனி யான் என்னை புரிவது என்று-மேல் யான் செய்வ தென்னை யுள்ளது என்று எண்ணி, விழும் எழும் தொழும் அழும் - கீழ் விழுந்து வணங்குவான், மீண்டு மெழுவான், எழுந்து கும் பிடுவான், அழுவா னுயினுன், என வுரைப்பாரு முளர். புரி யும் என்னுமல் புரிவது எனப் பாடங் கொள்வார் இவ்வா றுரைப்போர் ஆவர். 106

[தேகம் இருக்கும் பொழுதே பிரஹ்ம ரூப மான சசிவர்ணனைத் தேகம் நீங்கிய பின் பிரஹ்ம ரூப மாயினன் என்று கூறேம் என்கின்றுர்.]

107 **ஏட்டிலறி வின்றியிறை தன்னிலறி**
**வின்றியிவ்வு டம்பினுடனே,**

**வீட்டிலுறை வானையினி வீடுபெறு**
**மென்பதுவி ளம்புகிலமே.**

(இ-ள்.) ஏட்டில்-சாஸ்திரத்திஞல் (உண்டாம்), அறிவு-(பரோக்ஷ) ஞாநம், இன்றி-இல்லாமலும், இறை-பிரஹ்மத்தினது, அறிவு-(அபரோக்ஷ) ஞாநம், இன்றி-இல்லாமலும், இவ் உடம்பினுடனே-இச் சரீரத்தோடு கூடவே, வீட்டில்-(அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப) மோக்ஷத்தில், உறைவானை - இருக்கின்ற சசிவர்நனை, இனி - (தூல சரீரம் நீங்கிய) பின், வீடு - மோக்ஷத்தினை, பெறும் - அடைவன், என்பது - என்று, விளம்புகிலம் - (யாம்) கூறேம். எ—று. (ஏ - தன் - இல் அசை).

இப்பொழுது வந்த தூல தேக வீழ்ச்சி, அல்லது, சிவ லிங்க முதலிய வேற் றுருவம் ஆவது, வீடு என் உணர்வார் பெரும்பாலார் உள்ளனர். அஃது வீடு அன்ரும். இனித் தேகம் வராமல் (எடுக்காமல்) விடுதல் வீடாம். விதேக முக்தி என்பது, அபரோக்ஷ ஞாநத்தின் மகிமையிஞல், இனிமேல் மூன்று தேகமும் எவ் விதத்தும் வராதிருத்தற்குப் பெயராம். தூல தேகம் பிராரப்த கர்ம முடிவில் அழிந்து போகும். முளைக்குந் தன்மை காரண தேகத்தில் இருப்பது. அதில், முளைக்கும் சக்தியினை அபரோக்ஷ ஞாநத்திஞல் கெடுத்துவிடின், முளைக்காது தேகம் கெட்டுப் போகும், போகவே. சூக்ஷும தேகமும், தூல தேகமும், வருவதற்கோ, இருப்பதற்கோ, வித்து இல்லாமையிஞல், தாஞகவே வரவும், மாட்டாது. இருக்கவும் மாட்டாது. என்னும் கருத்தினைக் கொண்டு, " இவ் வுடம்பி னுடனே வீட்டில் உறைவானை, இனி வீடு பெறும் என்பது விளம்பு கிலம் " என்று விதந்து கூறிஞர்.

சோபாதிகப் பிராந்தியானதால், தூல தேகம் பிராரப்த க்ஷயபரியந்த நிலைத்திருக்கும், வர்த்தமான தூல தேக நிவிர்த்திக்கும், மோக்ஷத்துக்கும், யாதொரு சம்பந்தமும் இல்லை. அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானம் வந்தவுடன் தேகத் திரய அத்தியாசம் நீங்கிவிடுகிறது. தேக பதநம் பிராரப்த க்ஷயத்தில் உண்டாகிறது.

கைவல்ய நவநீதம் சந்தேகந் தெளிதற் படலம் 98. கவி "அரியமெய்ஞ் ஞானத் தீயால் அவித்தையாம் உடல்நீ றுகும், பெரியதூ லங்கா லத்தால் பிணமாகி விழுமந் நேரம், உரிய சூக் குமச ரீரம் உலையிரும் புண்ட நீர்போல், துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமே." என்று கூறுவதால், ஞான அக்கினியால், அவித்தையா சரீரம் பஸ்பம் ஆகும். பெரிய தூல சரீரம். காலத்தால், பிணம் ஆகி விழும். அந்நேரம் சூக்ஷும சரீரம், உலை யிரும்பு உண்ட நீர் போல் துரியம் ஆய், விபு ஆய், நின்ற ஸ்வரூபத்தில், இறந்து போம் என்று கூறு மாற்றால் உணர லாம்.

அநதிகாரி யாகிய ஆத்ம ஞானியின் தூல சரீரம். இக லோகத்தில், இல்லறத்தாராயின், கொழுத்திச் சாம்பல் ஆக்கப்படும். துறவியாயின், மண்ணில் புதைக்கப்படும். வேற்றுருவப் பிராப்தி, சித்தன் போன்று அன்று. சூக்ஷும சரீரம் கட்டுவிட்டு அபஞ்சீகிருத பூதம் ஆகிவிடும். காரண சரீரம் ஞான சம காலத்தில், ஆவரண சத்தி நாசமாய், விக்ஷேப சத்தியின் அம்சம், வெட்டவிழும் பரம் பசந்து விளங்குதல் போல், சில காலம் இருந்து நாசம் ஆகும், ஆனதால், மூன்று சரீரத்துக்கும், லய ரூப நிவிர்த்தியோ, ஐக்கிய அத்தியாச ரூப நிவிர்த்தியோ, இன்று, அத்தியந்த நிவிர்த்தியாம். என அநாதி கால விபரீதப் பிராந்தியினை நீக்கி உணரல் வேண்டும். 107

[சசி வர்ணனது ஞான பலத்தினால், பிதிர்க்கள் தேவ லோகம் முதலிய மே லுலகத்தினை அடைந்தனர் என்கின்றார்.]

108 வஞ்சவலி யானரகில் வீழ்பிதிர
ரந்நரகு பாழ்படமிகா,
விஞ்சைவலி யாலடைய வேறினர்சு
ராதிபர்கண் மேலுலகமே.

(இ ள்.) வஞ்ச-(சசி வர்ணன் செய்த) பாப கர்மத்தின், வலியால்-சாமர்த்தியத்தினால், நரகில்-(கொடி தாகிய) நரகத்தில், வீழ்-வீழ்ந்த, பிதிரர் - தென்புலத்தார், அந் நரகு-அந்த நரகம், பாழ்பட-சூந்ய மாகும்படி, மிகா-உயர்ந்து, விஞ்சை-(சசி வர்ணன் அடைந்த பிரஹ்ம சாக்ஷாத்கார) ஞானத்தின், வலியால் - சாமர்த்தியத்தினால், சுர அதிபர்கள்- தேவேந்திரர் (முதலியோ ரிருக்கும்), மேல் உலகம் - ஸ்வர்க்க லோகம் சத்திய லோகம் முதலிய லோகங்களை, அடைய - யாவரும், ஏறினர்-அடைந்தார்கள். எ-று. (ஏ - அசை)

மிகா - மிக்கு : உயர்ந்து : புண்ணியவான்களாகி எனக் கொள்க.

விருத்தாசல புராணம் (சசி வர்ணன்)

" பரிகலச் சேடம் கொண்டு பதத்தினில் பூசை செய்தான்,
அரியசீ றியோகி சாத்தி அடியிணை தலைமேல் வைத்துத்,
தெரிவுற உபதே சித்தான் திவ்விய ஞானம் பெற்றுத்,
தரிவுள முத்தி பெற்றான் தந்தையும் முத்தி பெற்றான்."

" பிதுர்க்களும் நரகம் விட்டுப் பெரும்சிவ லோகம் சேர்ந்தார்
கதிர்ச்சசி வர்ணன் காதற் புலச்சியும் கதியில் சேர்ந்தாள்."

என்று கூறும் ஆற்றால் உணர்க.

சிவதருமோத்தரம்,

"முற்றவத் தாலே பூசை முற்றிய பத்தர் மூவேழ்,
சுற்றமும் சுவர்க்கம் எய்தத் துன்னுதற் கரிதே ஆய,
அற்புதன் உலகம் தன்னைத் தாமடைந் திருப்பர் அன்பால்,
சொற்பணி செய்தார் தாமும் துரிசறு நெறியி னூரே."

என்று, மாதுர் வர்க்கம் 7, பிதுர் வர்க்கம் 7, தன் வர்க்கம் 7, ஆக 21 தலை முறையை சிவ லோகம் அடைவிப்பர் ஆவர் என்று ஊகித் துணர்க. 108

[சசி வங்கன் செய்த குரு பணிவிடையினை
வியந் துரைக்கின்றூர்.]

109 தேவருமனித்தருமி வன்றொழில்வி
யந்துரைசெ யப்படுவதோ,
மூவரும்வ ணங்கிமுடி யாலவன
தேவல்செய முந்துறுவரே.

(இ-ள்.) இவன்-இந்தச் சசிவங்கனது, தொழில்-பணிவிடையினை, தேவரும்-தேவர்களும், மனித்தரும்-மனிதர்களும், வியந்து-ஆச்சரியத்தினை அடைந்து, உரை செயப்படுவதோ-கூறும் தன்மைத்தோ, (கூற வியலா தென்பது கருத்தாம்), [பணிவிடையினை எதனுற் கூற முடியா தெனிற் கூறுகின்றூர்.] மூவரும்-(பிரஹ்மா விஷ்ணு ருத்திரன் என்னும்) மும் மூர்த்திகளும், முடியால்-கிரீடத்தோடு கூடிய தலையால், வணங்கி-(அவனது பாதங்களில் வீழ்ந்து அஷ்டாங்க பஞ்சாங்க திரியங்க சிராங்க) நமஸ்காரங்களைச் செய்து, அவனது-அந்தச் சசிவங்கனுக்கு, ஏவல்-பணிவிடைகளை, செய-செய்தற்கு, முந்துறுவர்-(ஒருவருக் கொருவர்) முற்படுகின்றனர். எ-று. (ஏ - அசை)

"சசிவர்நனுக்குச் செய்கின்ற பணிவிடையினைக் கூறு கின்றார்" என அவதாரிகை செய்து கொண்டு, "இவன் தொழில்" என்பதற்கு, "இந்தச் சசிவர்நனுக்குப் பிறர் செய்த பணிவிடையை" எனப் பொருள் கூறுவாருஞ் சிலர் உரைகாரர் உள்ளர்.

ஆத்ம ஞாநிக்குப் பணிவிடை செய்த மாணாக்கன் பெருமை, "ஞாலம் உண்டவன் தலைமிசை சுமப்பன்மெய்ஞ் ஞாநிவேண் டுவஎல்லாம், ஆலம் உண்டவன் அவன்பினே திரிகுவன் அவன்அடித் துகட்கன்றே, சீலம் மன்னரும் மற்றுள தேவரும் திசைதிசை பணிந்தேத்தக், காலி ரண் டையும் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்." என ஞாந அமிருதம் கூறுவதை உணர லாம். 109

[ஞாநியைத் தேவன் என்றும், மனிதன் என்றும், கூறற்க என்கின்றார்.]

110 ஞாநியைந ரன்சுரனெ னுதொழிக
ஞாலமுய நாதனருளால்,
மேனியது கொண்டுதனை நல்கவரு
மென்றறையும் வேதமுடிவே.

(இ-ள்.) ஞாலம்-உலகத்தி லுள்ளார் (யாவரும்), உய-மோக்ஷத்தினை அடைதற் பொருட்டு, நாதன்-(சர்வஞ்ஞத் வாதி கல்யாண குணங்களை யுடைய காரணப் பிரஹ்மமாகிய) சிவன், அருளால் - கிருபையினால், மேனியது கொண்டு - திவ்யமங்கள மாநுஷ அநுக்கிரக லீலா விக்கிரகத்தினைத் தரித்துக் கொண்டு, தனை - பரிபூரண பிரஹ்ம ரூபத்தினை, நல்க-(அதிகாரிகளுக்கு) கொடுத்தற்கு, வரும்-எழுந்தருளி வருவன், என்று - என, வேத முடிவு - உபநிஷத்துக்கள்,

அறையும் - கூறுகின்றன, ஞாநியை - (அதனால்) பிரஹ்ம முணர்ந்த பெரியாரை, நரன் - மனிதன், சூரன் - தேவன், எனாது - என்று கூறாது, ஒழிக-(பிரஹ்மமே என அறிந்து) விடுக. எ-று. (ஏ - அசை)

'மேனியது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

இக் கருத்தினை, "தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு, மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலையோ." (5) "இந்தவுல கத்தினிடர் கெடும் பரிசிங் கெழுந்தருளி, வந்தவனென் றறிந்திலையோ மானிடனென் றிருந்தனையோ." (6) என்று, தத்வராய சுவாமிகளே, அஞ்ஞ வதைப் பரணியில், 23 அஞ்ஞன் அழிவு கூறுமிடத்தும் கூறியிருக்கின்றார்கள்.

இனி, (சூத கீதை), "கனவினிற் காணுங் காட்சிபோற் சகத்தைக் காணுமெய்ஞ் ஞானிக டம்மை, மநுடனே வன்றித் தேவனென் றெண்ணு மாநினை விருத்தியை மாற்றி, இனியனும் பரம சிவனுருக் கொண்டிவ் வுலகுய வெழுந்தருளினனென், றனையனை நினைப்போ ருத்தம ரல்லோ ராடியை நோக்குமந் தகரே." எனவும், பாடு துறை. 36-வது மநோரதம். "முகுந்தனு நான்கு முகனுந்தேட மூல மொருகுரு மூர்த்தியாகிப், புகுந்தடி யார்தொழ வீற்றிருக்கும் பூங்கோயிலாகநான் பெற்றிலேனே." எனவும்,

(ஞாநாமிருதம்) "ஞாலம் உண்டவன் தலைமிசை சுமப்பன் மெய்ஞ் ஞாநிவேண் டுவவெல்லாம், ஆலம் உண்டவன் அவன்பினே திரிகுவன் அவன்அடித் துகட்கன்றே, சில மன்னரும் மற்றுள தேவரும் திசைதிசை பணிந்தேத்தக், காலி ரண்டையும் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்

தோன்." என்வும் கூறுவது கொண்டும் அக் கருத்து, உணரத் தக்கது.

ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகள் செய்த சசிவர்ண போதமும்,
(சத சாஸ்திர கர்த்தா) திருப் பூவணம்,
வேதாந்த மடம், பரசமய பஞ்சாநநர்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் செய்த
பதார்த்த பாஸ்கரன் என்னும் உரையும்
முற்றுப்பெற்றது.

எல்லாரும் இன் புற்று இனிது வாழ்க.

---

## சமஸ்கிருத மொழி பெயர்ப்பு 23.

---

1. வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம்.
2. நைஷ்கர்மிய சித்தி வசநம்.
3. ஸ்வாராஜ்ய சித்தி வசநம்.
4. வேதாந்த சஞ்ஞா வசநம்.
5. வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம்.
6. வேதாந்த பரிபாஷை வசநம்.
7. ஹரிபீடே - ஹரிதத்வ முக்தாவலி உரை.
8. மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜயோக பாஷ்யம்.
9. ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம்.
10. பகவற் கீதை 15-வது அத்தியாயம் பத உரை.
11. மூர்க்க சதகம் பத உரை.
12. சப்த பதார்த்தி (தர்க்கம்) வசநம்.
13. காருகத சந்திரிகை (தர்க்கம்) வசநம்.
14. தர்க்க சங்கிரகம் - தர்க்க சங்கிரக தீபிகை உரை.
15. கணேச கவசம் பத உரை.
16. லௌகிக நியாய சங்கிரகம் 400 நியாயம் வசநம்.
17. சித்தாந்த லேச சங்கிரஹம் 56 மத விசாரம் வசநம்.
18. பேத திக்காரம் சத் கிரியை உரை.
19. பிரபோத சுதாகாரம் பத உரை.
20. விவேக சூடாமணி பத உரை.
21. விசார சாகரம். ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம்.
22. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம்.
23. யுக்தி பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு வசநம்.

---

# ஸ்தோத்திரம் 27.

1. திருக் களர் வீர சேகர ஞானதேசிகர்
திரு எம்பாவை கவி 21
2. மேற்படி திருப் பள்ளி எழுச்சி கவி 10
சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி 150
3. தேவை, தண்டாயுத பாணி கவி 10
4. பழநி, தண்டாயுத பாணி கவி 10
5. மதுரை, தண்டாயுத பாணி கவி 10
6. குன்றக் குடி, குமரவேள் கவி 10
7. திருச் செந்தூர், குமரவேள் கவி 10
8. திருப் பூ வணம், பூவண்ண நாதர் கவி 10
9. மதுரை, சொக்கேசர் கவி 10
10. தில்லை, நடராஜர் கவி 10
11. கோவில் ஊர், சொற்ற வா னீசர் கவி 10
12. திருப் பூ வணம். சௌந்தரிய நாயகி கவி 10
13. மதுரை, மீனாக்ஷி கவி 10
14. திரு அண்ணுமலை. உண்ணுமுலை அம்பிகை கவி 10
15. சிக்கல், உகந்த லிங்க ஞானதேசிகர் கவி 10
16. கோவில் ஊர், முக்தி ராம லிங்க ஞானதேசிகர் கவி 10
17. திருக் களர், வீரசேகர ஞான தேசிகர் கவி 14
திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி 30
18. திருப் பூ வணம். மடத்து கணபதி கவி 10
19. மதுரை, பொற் ருமரை விபூதி கணபதி கவி 10
20. தில்லை, கோவிந்த ராஜப் பெருமாள் கவி 10
சப்தா சப்ததி: 70
21. காசி. விசுவநாதர் கவி 10
22. காசி, அந்நபூரணு கவி 10
23. காசி, கங்கை கவி 10
24. ராஜ ராஜேசுவரி அம்பிகை கவி 10
25. சங்கராச்சாரியார் கவி 10
26. திரு அண்ணுமலை, உண்ணுமுலை அம்மை கவி 10
27. தில்லை, சிவ காம சௌந்தரி கவி 10

ஆக 27-க்கு கவி 285